69-4

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவகாருண்ய விளக்க வினாவிடை

இந்நூல்
ஸ்ரீஜகத்குருபீடம் - நியாயசந்திர வேதாந்த
பாஸ்கர ஸ்ரீவீரசேகர சுப்பைய ஞான
தேசிகேந்திர சுவாமிகள் கட்டளைப்படி

சைவத்திருவாளர்
காவித்தண்டலம்- வேதாசல முதலியாரவர்களால்
இயற்றப்பெற்று,

கனம் திவான்பஹதூர்
ஸர் T. N. சிவஞானம்பிள்ளை Kt., அவர்கள்
அபிவிருத்தி மந்திரியார் எழுதிய
ஆங்கில மதிப்புரையுடனும்,

சைவத்திருவாளர் - கயப்பாக்கம்
சதாசிவ செட்டியார் B. A. அவர்கள்
எழுதிய தமிழ் முன்னுரையுடனும்,



சென்னை:
சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பெற்றது.

அக்ஷய ஆவணிமீ
1926

 [விலை அணா 10

## இப்புத்தகம் கிடைக்குமிடங்கள் :

---

1. அக்கிராஸனர், சைவசமய பக்தஜனசபை,
1-488, தங்கசாலை வீதி, சென்னை.

2. பிரசங்கபானு கா. ராஜாராம்பிள்ளை அவர்கள்,
12, பாளையப்பன்வீதி, ஏழுகிணறு, சென்னை.

3. ஆ. துரைவேலு முதலியார் அவர்கள்,
பொற்பந்தல்கிராமம், சாலவாக்கம்போஸ்டு,
செங்கல்பட்டு.

4. கா. வேதாசல முதலியார் அவர்கள்,
காவித்தண்டலம் கிராமம்,
சாலவாக்கம் போஸ்டு, செங்கல்பட்டு.

5. இன்னும் சென்னையிலுள்ள மற்ற புத்தகவியாபாரி களிடத்திலும் கிடைக்கும்.




# விஷய அட்டவணை

---

இந்நூலில் கொல்லாமை, புலான்மறுத்தல், இன்னா செய்யாமை எனும் விடயங்களை யனுசரித்த 125 வினுக்களுக்கு விடைகளுள்ளனவால் அன்பர்கள் இதை முற்றும் வாசித்து நன்குணர்ந்து உலகத்தின்கண்ணே சீவகாருண்யத்தைத் தாங்கள் செல்லுமிடங்களிலெல்லாம் விளக்கி நிறுத்துவார்களென்று யான் எல்லாம்வல்ல இறைவனைப் பன்முறையும் பிரார்த்திக்கின்றேன்.

மேற்கோள்களாக எடுத்தாளப்பட்ட நூல்களின் விபரத்தில் தேவாரமும், ஆசாரக்கோவையும் சேர்க்காமல் விடுபட்டன. அவைகளையும் அவ்விடத்தில் கூட்டி நூல்களை அறுபத்தைந்தாக்கிக் கொள்ளவும்.



he Hon. Diwan Bahadur
Sir. T. N. SIVAGNANAM PILLAI, Kt.

The Hermitage
LUZ
Madras, 24th Aug. '26.

I have perused with very great pleasure this work on "Jeevakarunyam." The author has successfully attempted here to present in the form of a closely argued catechism the morale of *Ahimsa*. He has cited copious illustrations both from ancient classics and modern religious works in support of the position he takes. The reader who chooses to peruse the book carefully will unconsciously find himself on the highroad to conversion to the cult of Saivism. He will realise the full significance of the text that Saivism preaches that "Love is God" and know besides that

"He prayeth best, who loveth best
All things both great and small,
For the dear God who loveth us,
He made and loveth all."

T. N. SIVAGNANAM,

*Minister for Development, Madras Govt.*

கனம் திவான்பகதூர்,

## சர். டி. என். சிவஞானம் பிள்ளை Kt. அவர்கள்

அபிவிருத்தி மந்திரியார்

எழுதிய

## ஆங்கில மதிப்புரையின் மொழிபெயர்ப்பு

**சீவகாருண்ய விளக்கம்** என்னும் நூலினை மிக்க மகிழ்ச்சியுடன் படித்தேன். இந்நூலாசிரியர் அஹிம்சை என்னும் தருமத்தைக்குறித்து வினவிடைகளாக வசனநடையில் விளக்கப்பெரிதும் முயற்சி செய்துள்ளார். தாம்மேற்கொண்ட கொள்கையை ஆதரிக்கப் பழைய நூல்களிலிருந்தும், தற்கால சமயநூல்களிலிருந்தும் ஏராளமாக மேற்கோள்கள் காட்டியிருக்கின்றனர். இந்நூலைக் கவனித்துப் படிப்போர்கள் சைவ ஆசாரத்தை மேற்கொள்ளும் படியான வழியில் தங்களை மறந்து செல்வார்கள். சைவத்தில் சிறப்பாகக் கூறப்படும் "அன்பே சிவம்" என்னும் அமுத வாக்கியத்தின் பொருளை முழுவதும் அனுபவிப்பார்கள்.

அன்றியும்,

"பெரிதும் சிறிதுமாக உள்ள எல்லாவற்றிலும் பேரன்பு செலுத்துபவரே, எல்லாவற்றையும் படைத்து எல்லாவற்றிலும் அன்பு செலுத்தி நமக்கு அருள் செய்கின்ற அன்பு ஓங்கிய கடவுளைச் செவ்வையாய்த் துதி செய்பவராவர்"

என்னும் உண்மையை அறிந்து கொள்வர்.

உ
சிவமயம்

# நூலாசிரியர் முன்னுரை.

---

## ஆசிரியவணக்கம்

இருந்தவிடந் தெரியாத எளியேனை
அருள்கனிந்தே எடுத்தணைத்துப்
பொருந்துபல புலவரவை தனிற்பேச
வாயளித்துப் புகழ்மை தந்தோன்
திருந்துசைவ சித்தாந்த சரபமெனுங்
கலியாண சுந்த ரன்சீர்.
இருந்துணையாந் துறவேற்ற என்குரவன்
இணைமலர்த்தாள் ஏத்து வேனால்.

கல்வி, அறிவு, ஒழுக்கம், கருணை முதலானவைகளிற் சிறந்து விளங்கும் பெருந்தகையீர்! யான் பல்காலும், பற்பல பேரவைகளிற் சென்று செய்துள சொற்பொழிவுகள் பலவேறு பொருட் பகுதிகளின் பலவாயினும், தற்கால நிலைமை கருதி ஜீவகாருண்ய விளக்கமென்ப தொன்றையே அவற்றுளெல்லாம் தலைசிறந்ததாய் எவர்க்கும் எடுத்துரைத்தலை எனது முக்கிய கடமையாகக் கொண்டிருக்கின்றேன்.

இதைவெளியிட வேண்டுமென்று கூறியருளிய ஸ்ரீ ஜகத்குரு பீடம் நியாய சந்திர வேதாந்த பாஸ்கர ஸ்ரீ வீரசேகர சுப்பய்ய ஞான தேசிகேந்திர சுவாமிகள் கட்டளையும், இச்சரீர பந்துக்களாயுள்ள அன்பர்கள் பலர் விருப்பமும், என் பேரவாவும் உடன் சேர எல்லாம் வல்ல சிவபிரான் திருவருளை முன்னிட்டுப் பேறையூர் சாந்தலிங்க சுவாமிகள் அருளிச்செய்த 'கொலை மறுத்தல்' என்னும் நூலின் அபிப்பிராயம் பலவும், இன்னும்பல பெரியாரருளிச் செய்த

அரும் பெரும் நூற் பிரமாணங்களும் கொண்டு என் சிற்றறிவுக் கெட்டிய சில விடயங்களுஞ் சேர்த்துக் கற்றவரன்றி மற்றையோரும் எளிதிலுணருமாறு தெள்ளிய நடையில் தடை விடைகளாற் கூறலாயினேன். அன்பிற் சிறந்த ஆன்மநேயர்கள் இதில் சொற் குற்றம், பொருட் குற்றம், கூறியது கூறலெனுங் குற்றங்களிருப் பினும் 'அற்ற மறைக்கும் பெருமை'யெனு மான்றோர் திருவாக் குப்படி, கொலையாதி பஞ்சமா பாதகங்களை யொழித்தல் காரண மாகக் கூறிய குணத்தையே மேற்கொண் டொழுகுவாராக. அன்றியும் தம்மகவின் மழலைச் சொற்களால் மாதா பிதாக்கள் மகிழ்வடைவது போலக் கல்வி கேள்விகளிற் சிறந்த பேரறிவாள ராகிய தாய் தந்தையர் மேற் சொன்னவை சிறிது மில்லாத எளியேனது இம்மழலைச் சொற்களைக் கண்டும் கேட்டும் உவப்பர்.

மக்கண் மழலைச்சொல் மாதா பிதாக்களுக்கு
மிக்க விதஞ்செய்யு மேதினியி—லக்கருத்தே
கொண்டுரைத்தே னிந்நூலுங் கோதறியா மேலோர்கள்
கண்டேற்றுக் கொள்வர் கனிந்து.

வான்மதியானது காமுகர்க்கும் கள்வர்க்கும் வெறுப்பைத் தருவதாயினும், வையகத்துள்ளார் பலருக்கும் விருப்பத்தையே கொடுக்கும். அதுபோல் இந்நூலானது சிலருக்கு வெறுப்பைத் தருவதாயினும் பலருக்கும் விருப்பத்தையே தரும்.

எல்லாம்வல்ல சிவபெருமான் திருவருளை முன்னிட்டு அடிமை எழுதியுள்ள "ஈசுவர வழிபாடு" என்னும் ஓர் நூலும் விரைவில் வெளிவரும்.

அன்றியும், உலகத்தில் எல்லாருடைய மனதும் திருப்தி யடைய ஒருவர் ஒன்றைச் சொல்வதும் நடப்பதும் இயலா. ஆனா லப்படிச் சொல்லவும் நடக்கவும் நினைப்பது தந்தையும் மைந்தனும் சந்தைக்குத் துரகம் விற்கச்சென்ற கதையாகும்.

காவித்தண்டலம் - வேதாசலம்.

சிவமயம்

## சைவத் திருவாளர் - கயப்பாக்கம் சதாசிவ செட்டியார், B. A., அவர்கள் எழுதிய

# முன்னுரை.

இறைவ னின்னருட்படைப்பாய விவ்வுலகத்தேயுள்ள உயிர்ப் பொருள்கள் தமது செயற்கை வகையாற் பலவேறு வகைப்பட்ட பிறவிகளை யடைகின்றன. அவற்றுளெல்லாம் அறிவு, அருள் என்னு மிவற்றினது ஆட்சித் திறத்தான் மக்கட் பிறப்பே சிறந்ததாகின்றது. இவ்வரிய மக்கட் பிறப்புத்தானும் எண்ணியபோதெல்லாம் எய்துவதன்றாய், எடுத்த பல பிறப்பினும் முன்செய்த நல்வினைப் பயனுன் இறைவனருளான் வருவதாகவுள்ளது. வந்தபோதும் அது எண்ணில் காலம் நிலைபெறுவதன்றாயும், நிலைபெறுங் காலமும் இனைத்தென் றறிய முடியாததாயும், சின்னாள் நின்று செல்வதாயினும் மீண்டும் எளிதினெய்தப் பெறாததாயும் உள்ளது. இவ்வளவு அரும்பெறற் கருவியாயமைந்த உடம்பினைப் பெற்று வைத்தும் அதனை யடைந்த உயிர் அதனாலாய பேற்றினைப்பெறாது இழப்பதெனின் அதனின் மேலாய மடமை வேறின்றாகும்.

இனி இவ்வுடம்பான் உயிர்பெறும் ஆக வுயர்ந்த ஊதியமும், பண்டே புல்லிய பாசவிடுதியும், திருவடிப் பேறு எனுஞ் சிவப் பேறுமேயாம். இப்பேறு அடைதற்கு உயிர் செய்யுஞ் செயல்களும் சில பல வுண்டு. அவைதாம் இறைவனோதிய அருளோத்தின் ஆணைவழி நின்று செய்வன செய்தும் தவிர்வன தவிர்ந்தும் அவனடிபேணி வாழ்வதாகும். அவ்வாறு செய்வனவும் தவிர்வனவுமாய செயல்களினெல்லாம் தலையாய அறம் யாது, அதுவே உயிர்க்கருணையாம். இத்தலையாய வறமும், எவ்வுயிரும் எம்முயிர் போல்வதென்று அவற்றின் பாற் கருணையான் நல்லன புரிதலே உடன்பாட்டு வகையாற் செய்வதெனவும், அல்லன புரியாதிருத்தலே எதிர்மறை முகத்தாற் றவிர்வதெனவும், அறியப்படுவதாம். இத்துணைப் பெரியதாய விவ்வறவினையை ஒல்லும் வகையான்

ஓவாதே செல்லும் வாயெல்லாஞ் செய்து, வீழ்நாள் படாமை நன்ருற்றி னதுவே வாழ்நாள் வழியடைக்குங் கல்லாகு மாதலான் அதனை எவ்வாற்ருனும் முயன்று செய்வது உயிர்களின் கடமையாகும்.

தலைசிறந்த விவ்வறத்தையே வடமொழி யோத்தும் தென்மொழி யோத்து மெனவரு மிருவகை யோத்துக்களும் விதந்தெடுத்தோதுவதைச் சிறிது காணுவேம். இறைவனருளிய மறைமொழிகளை வடமொழி யோத்தும் திருவருளாளர்களான சமய குரவரும் செந்நாப்போதாரு மருளிய மறைமொழிகளைத் தமிழ் மொழி யோத்து மென்ப. இவற்றுள் வடமொழி யோத்தினுள் அறங்களை யெடுத்து ஓதுங்கால் 'அறஞ் செய்க' எனவும் 'உண்மை பேசுக' என்வு மிவ்விரண்டினையே அது சிறப்புற வோதுவதாயிற்று. இவ்விரண்டனுள்ளும் உண்மை பேசுகவென்பது சிறப்பு மொழியானேதப்படுதலிற் தெற்றென விளங்குவதாயும், மற்றையது அவ்வாறன்றி அறஞ்செய்க வென்று பொதுமொழியா னேதப்படுதலின் அறமென்பதாற் சருதுவது இதுவென விளங்காதாயுமாகின்றது. இன்னும் உண்மை பேசுதலும் ஓரறமாய் அறஞ் செய்க வென்பதனுளடங்குகின்றமையின் ஓதவேண்டாவெனவும் வரும். இம் முட்டுப்பாடு எய்தாமல் பொருந்தவுரைத் தியைத்தலே பொருளாமாதலானும், பலபொருளுக்கு மாவதொரு சொல் அப்பொருள்களுட் சிறந்த வொன்றுச்குச் சிறப்புவகையான் ஆவது மரபாதலானும், எனவே அறங்களுட் சிறந்த உயிர்க் கருணையொன்றே அறமென்னும் மொழியானேதப்படுதலும் பொருத்தமாதலானும், இன்னும் அவ்வுயிர்க் கருணையே மேலான வறமென்பதை மறைகள் 'உயிர்க் கருணையே மேலான அறம்' எனச் சிறந்தெடுத் தோதலானும் 'அறம்' என்பதனை உயிர்க்கருணை யொன்றே யெனக் கொள்ள வமைவதாயிற்று. இதுவே தமிழ்மொழி யோத்துக்களின் கருத்தென்பதைச் சிறிது காட்டுவோம்.

திருக்குறளோத்திற் 'கொல்லாமை','வாய்மை' யென்னுமிரண்டியலுட் கூறிய விவ்விரண்டறங்களுட் 'கொல்லாமை' கூறவந்த

ஆசிரியர் 'கொல்லாமை' அறவினை யென்னுமல், 'அறவினையா தெனிற் கொல்லாமை' யென்றமையாற் கொல்லாமையே அற மென்னுமொழியாற் சிறப்பித்துக் கூறப்படுமென்பது தெற்றெனக் காணப்படுமென்றே! எனினும், ஆசிரியர் வாய்மையயியலிற் 'பொய் யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற, செய்யாமை செய்யாமை நன்று' எனவும் 'யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன் றும், வாய்மையி னல்ல பிற' எனவுங் கூறு மாற்றான் வாய்மை யறமே முதலறமாகக் காணுமாறுவது, அன்றி இவ்விரண்டறங்க ளுள்ளும் யாது சிறந்தது என்னும் ஐயம் நிகழுமாறுவது வருமே யெனின் வாராது. என்னை, அது நிகழாமைப் பொருட்டன்றே 'ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று' என்று கூறிக் கொல்லாமையே முதலறமென்று ஆசிரியர் வலியுறுத்தாரென் றொழிக. அன்றியும் முற்கூறியதினிற் பிற்கூறி யதே வலியுடைத்தாமாறுங் காணப்படு மன்றே ?

இதுகாறுங் கூறியவாற்றான் கொல்லாமையின் மேற்பட்ட வறமில்லை யென வலியுறுத்தியவா றாயிற்று. இச்செய்தி யெல் லாம் 'கொன்று செய்த கொடுமையாற் பலசொல்லவே, நின்றபாவ வினைக டாம்பல நீங்கவே, சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடங், கன்றினோடு பிடி சூழ்தண் கழுக்குன்றமே' எனவும், 'நல்ல நினைப்பொழிய நாட்களி லாருயிரைக், கொல்ல நினைப்பது வுங் குற்றமு மற்றொழிய, செல்வ வயற்கழனித் தென்றிரு வா ரூர்புக், கெல்லை நினைந்தடியேன் என்றுகொ லெய்துவதே' என வும் பிறவுமாக ஆளுடைய நம்பிகளும் பிறரும் திருமுறை யோத் துக்களிற் கூறுமாறு கொண்டு நன்குணரப்படும். இத்துணைப் பெருந் திருவாக்குக ளெழுந்துணர்த்தியும் உணராது இழுக்கி அளறு பாய்ந்து அழுந்தி அழுங்கும் அறிவின் மாக்களை யென் சொல்வேம்! என் சொல்வேம்!!

இத்துணைப் பேரறத்தை மேற்கொண்டு ஒழுகாது ஊனைத் தின் றூனைப்பெருக்கியும், அழுக்காறு, செற்றம், பிறன்மனை விழைதல், வரைவின்மகளிர் விழைதல், கள்ளுண்ணல், முத

வியபற்றிக் கொலைசெய்தும், செய்வித்தும் உழலுமாக்களைத் தடுத்துய்விக்குமாறு இவ்வறத்தைக் கண்ட கண்ட விடங்களிற் கூடு நேரங்களி னெல்லாம் சொற்பொழிவு செய்யுங் கடமையினும் மேற்கொண் டொழுகுஞ் சிறந்த கடமை வேறொன்றுளதென்று யாமறியோம்.

இக்கடமையைப் பல மூதறிவாளர் தங்களுக்குப் போந்த நேரங்களினெல்லாம் எடுத்துரைத் திடித்துப் போற்றி வருவது காணப்பெறுமெனினும், அதனைத் தமது தலையாய கடமையாக மேற்கொண்டு சென்ற சென்ற விடங்களினெல்லாம் சொற்பொழிவு நிகழ்த்தியும், ஆண்டாண்டுள்ள தலைவரைக் கொண்டு உயிர்ப்பலி நீக்குதலையும், புலான் மறுத்தலையும், தங்கீழ் வாழ்வோருக்குரைத்துக் கடைப்பிடித் தொழுகுமாறுஞ் செய்துவரும் ஒருவரையுலகறிய விரும்புமன்றோ? அவரைக் காட்டலும், புகழ்தலும், போற்றலும் எமது கடமையன்றோ? செந்நெறிச் செல்வர்காள்! அவரை நீவிரறியப் பெரிதும் விரும்புவிர். விரும்பு மூமக்குக் காட்ட யாமும் விரும்புவேம்.

விரும்புமிதனிடையிற் சாலவிறும்பூதுறுமாறுசெய்தியொன்று நிகழ்ந்தது. அது அப்பெரியார் தாம் நிகழ்த்தும் சொற்பொழிவும் பிறவும் என்றும் நின்று நிலவா; யாண்டும் நிகழா; ஆகையால் என்றும் நின்று நிலவுமாறும், யாண்டுஞ் செறிந்திலங்குமாறும் உயிர்க்கருணை விளக்கமெனப் பெயரிய நூலொன்று பலமூதறிவாளர் மேற்கோள் விளக்கத்தோடு தடை விடைகளாற் கற்றோரும் மற்றோரும் மகிழ யாத்து வெளியிட்ட செய்தியேயாம். இத்துணைப்பெருஞ் சிறப்புற்ற கடமையைச் செய்தார் எமது நிலையாய நட்பினரு ளொருவரும், எம்மோடு கலந்து சொற்பொழிவு செய்வோரும், சைவப் பெரியாரும், சொல்லும் செயலுமொத்துச் சரிப்போரும், கல்வி கேள்விகளிற் சிறந்தோருமாய சைவத் திருவாளர் **காவித்தண்டலம் - வேதாசல முதலியாரவர்களென்** றறிமின் அன்பீர்.

**கயப்பாக்கம் - சதாசிவ செட்டியார்.**

# மதிப்புரைகள்.

---

## ஸ்ரீ ஜகத்குரு பீடம் நியாய சந்திர வேதாந்த பாஸ்கர ஸ்ரீ வீரசேகர சுப்பய்ய ஞானதேசிகேந்திர சுவாமிகள் இயற்றியது

முன்னோர்தம் பெருநூல்கள் ஆய்ந்தறிய முடியாத
முத்தி நேயப்
பின்னோரு மெளிதறிந்து கொலைமுதல்பா தகங்கதுவாக்
கொள்கை மேவத்
தன்னேரில் ஜீவகா ருணியவிளக் கம்மெனுநூற்
றந்து வந்தான்
என்னேயப் பிருங்கியெனும் வேதகிரி நாத்தவத்
திறைவ லானே.

---

### திருநெல்வேலி சைவத்திருவாளர்

### கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எம். ஏ., எம் எல்.,

(அட்வகேட், கல்கத்தா தாகூர் சட்டவிரிவுரை யாசிரியர்.)

தாங்கள் அன்புடன் விடுத்த சீவகாருணிய விஞவிடையைப் பார்த்துப் பெருமகிழ்வுற்றேன். அருளொழுக்கத்தைப் பற்றி இவ்வளவு விரிவாக இதுவரை எழுதப்பட்ட உரைநூல் யாதுமில்லையென்றெண்ணுகிறேன். யாவர்க்கு மனதில் நன்ருக சீவகாருணியத்தின் பெருமையும் இன்றியமையாமையும் பதியும் வண்ணம் அதைப்பற்றிய தடைவிடைகள் யாவற்றையும் ஒருங்கு திரட்டிப் பன்னூற் பொருளையுங் கலந்து நல்லமுதம் போல அமைத்த தங்கள் நூல் தமிழுலகத்திற்கு அளவற்ற பேருபகாரமாக வெளிவந்

துள்ளது. தமிழ் நன்மக்கள் யாவரும் இதனைக் கற்று அருளொழுக்கத்தைக் கைக் கொள்ளுவாராக. தாங்கள் செய்யும் இந்நன்றிக்கு யாது கைம்மாறுளது. தங்கள் நன் முயற்சி தழைப்பதாக.

---

கோயமுத்தூர் - சைவத்திருவாளர்

## C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் B. A.,

### (Vakil, Member, Senate and Member, Council of the Affiliated Colleges.)

தாங்கள் எழுதிய சீவகாருண்ய விளக்கநூல் உலகிற்கு மிகவும் உபகாரமானது. நமது புண்ணிய நாட்டிலே சுவாமி பெயரை வைத்துக்கூட எவ்வளவோ கொலை பாதகங்கள் நடக்கின்றன. இது எத்தனை விபரீதமானது? மனிதர்கள் வயிற்றை நிரப்புதற்குத் தினந்தோறும் ஏழை ஜந்துக்களைச் செய்யும் கொலையோ அனந்தமாயிருக்கிறது. மனிதர்கள் இவ்வாறு இத்தனை பெரிய பாதகத்தை மேற்கொண்டு பாபத்திற் காளாகிறார்களே! பாவம்!! பாவம்!!! இதற்கெல்லாம் பாவ புண்ணியங்களின் நிலையையும், பரமேசுவரனுடையவும் அவன் அடியார்களுடையவும் திருவாக்குக்களாகிய ஆணையையும், மற்றும் இக்கொடிய ஊனுண்டலினால் உளதாகும் இழிவையும் தீமையையும் அறியாதிருத்தலே முக்கிய காரணமாகும். தாங்கள் ஆங்காங்குப் பல இடங்களிலும் சென்று ஜீவகாருண்ய ஒழுக்கத்தைப்பற்றிப் பிரசங்கம் செய்து கேட்டார்களுடைய மனத்தை எல்லாம் உருகச்செய்து எத்தனையோ பேர்களை நல்வழிப்படுத்தி வருகிற விஷயம் உலகம் அறிந்ததே. அவ்வாறு தங்கள் நல்லுரைகளை நேரிற்கேட்டுப் பயன்பெற இயலாதவர்களும் படித்துப் பயன் பெற்று நல்வழிப்படுமாறு இவ்வரிய நூலை எழுதி அச்சியற்றி வெளிப்படுத்தியது மிகவும் உபகாரமான செய்கையேயாம். இந்நூல் எங்கும் பரவி இறைவன் அருள் வழியை நாட்டுவதாக.

---

T. பக்தவத்ஸலம் பிள்ளை அவர்கள் பி. ஏ.

(பி. ஏ. இன்டர்மீடியேட், ஸ்கூல் பைனல், மெட்ரிகுலேஷன் பரீக்ஷைகட்குப் பாட புத்தகமாயமைக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய சரித்திரம் முதலிய பிரசித்தி பெற்ற நூல்களின் ஆசிரியர், ஜஸ்டிஸ் ஆபீஸில் திராவிடன் பத்திரிகைக்கு ஆதித்தலைமை ஆசிரியராயிருந்தவர்; தற்போது சென்னையில் ஒருயர்தரக் கலாசாலையாகிய லயோலா காலேஜில் லெக்சரர் என்னும் தலைமைத் தமிழ்ப் போதகாசிரியர்.)

திருவாளர் கா. வேதாசல முதலியார் அவர்களியற்றிய சீவகாருணிய விளக்கம் என்னும் அரியதொரு நூலைக்கண்டு யான் நனிமிக இறும்பூதெய்தினேன். சீவகாருணிய ஒழுக்கத்தைக் காட்டினும் நனிமிக உயரிய ஒழுக்கம் வேறியாது மிலது என்னும் உண்மையைப் பசுமரத்தாணிபோற் பதியுமாறு அன்னார் நாட்டியது சாலப் பாராட்டத்தக்கதா யிருக்கின்றது. முதலியாரவர்கள் இவ்வாறியற்றிய பேருபகாரத்தைத் தமிழுலகம் எஞ்ஞான்றும் நினைவிலிருத்தக் கடமைப்பட்டிருக்கின்றது. அவர்கள் அவ்வப்போது புரிந்துவரும் உபந்நியாசங்களோடு இவ்வரிய பெரிய செயலைச்செய்தது மிகவும் போற்றத்தகுவதாகும். அன்னோர்க்கு எமது மனமார்ந்த வந்தன மளிக்கின்றோம்.

---

சென்னை, பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பண்டிதரும் தமிழ்ப்பாடங்கட்குச் சூபரிண்டெண்டுமான

திருவாளர் மோ. கந்தசாமி முதலியார் B. A., M. R. A. S. அவர்களால் இயற்றப்பட்டன.

அறுசீர் விருத்தம்.

கடலாடை யுடுத்தோங்குங் கவின்வாய்ந்த குவலயத்திற்
கணக்கி லாத
படலாடும் பூங்கொடிகள் பன்னிறமாய்ப் பளபளெனக்
கண் ணும் பூப்ப

நடமாடுங் காவித்தண் டலமதனிற் பசித்தவர்க்கு
நல்லூண் நல்கும்
அடலேற்றுப் பெம்மானுக் கன்பனெனுஞ் சண்முகனுக்
கருளால் தோன்றி
இசைமணக்குந் தமிழ்நூலின் துறைகண்டே இரக்கநெறி
எங்கும் ஓங்கப்
பசைமணக்குங் கனிகாய்கள் தனைவிட்டுப் பல்லுயிரும்
கொன்று தின்று
தசைமணக்க உயிர்வாழும் தறுகண்ணர் நடுநடுங்கத்
தக்கோர் வாழ்த்தத்
திசைமணக்கப் புகழ்வேதா சலன்சீவ இதப்பனுவல்
தீட்டி னனல் 2

---

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்

## திருவாளர் மணி - திருநாவுக்கரசு முதலியார் அவர்கள் இயற்றியன.

### அறுசீரடி விருத்தம்.

அருமைமிகு செந்தமிழ்க்கு வரம்பாகு மவ்வையெனு
மறிவின் செல்வி
பெருமைமிகு சான்றோர்வாழ் நாடென்னப் பேசுதொண்டைப்
பெரிய நாட்டில்
திருமைமிகு காவித்தண் டலமென்னுஞ் செழும்பதியிற்
சீர்வே ளாளர்க்
கிருமைதரு மொழுக்கமதைக் காட்டுதற்கு வந்தனைய
வியல்பு வாய்ந்தோன் க

முருகனடி மறவாத அன்புகெழு சண்முகமா
மூத றிஞ்ஞன்
திருகலிலாத் தவத்துதித்தோன் தித்திக்குஞ் செந்தமிழே
தினமு மாய்வோன்

உருகிவழி பேரன்பன் அடக்கமெனு மருங்கலத்தை
யுச்சிக் கொண்டோன்
பருகியிடு மமுதென்னப் பிரசங்க மாரிபொழி
பண்பு மிக்கோன். ௨

பண்டிதரைப் பாமரரைப் பாவையரை மேலவரைப்
பாலர் தம்மைக்
கண்டிதமாய் நயந்துரைத்துக் கருணைநெறி பூண்டிடவே
கழறு நன்பன்
வண்டமிழ்தேர் புலவரொடு மனங்கலந்தே யுறவாடு
மாசில் நெஞ்சன்
எண்டிசையும் புகழ்மணக்கும் எழில்வேதாசலப் பெரியன்
இரக்கங் கொண்டே ௩

முன்னூல்கள் பலவற்றைப் பன்னாளு மாராய்ந்து
முதிர்ந்து நின்றப்
பன்னூலின் நுணுக்கமெலாம் பரிந்தெடுத்துப் பாமரரும்
பரிந்து நோக்க
நன்னூலி தென்றென்றே நாவலர்கள் கொண்டாடி
நயந்து பேச
இந்நூலாங் காருண்ய விளக்கமதை யீந்துபுகழ்
இருந் தினனே. ௪

---

சென்னை சைவத்திருவாளர் பிரசங்கபாநு

## கா. இராஜாராம் பிள்ளை அவர்கள் இயற்றியது.

நேரிசை யாசிரியப்பா.

பூவிற் பொலியிந் திரையே பூவான்
நாவிற் பொலிவெண் பாவை யிருவிழி
யெனத்தன் வதனத் தெழிலுறு கௌரி
மூனாட் கம்பை மொய்கரை மருங்கு

தழுவக் குழைந்த முழுமுதன் மலர்த்தாட்
சார்ந்து வாழுஞ் சான்ரேர் மிகமலி
கூர்ந்த வளந்தரு குடிஞைப் பாலி
பொய்யா தளிக்கு நையாச் சீர்கெழு
தொண்டைக் குறும்பரைத் தொன்ஞட் டறுநாற்
கண்ட கோட்டத்துக் களத்தூர்க் கோட்டங்
கொண்டை கட்டி வேளாண் மரபு
குலவு சத்தமி ழார்கோத் திரத்து
நிலவு நைஷ்டிக பிரம சரிய
விரதம் பூண்ட சரத சீலன்
தண்டமிழ்ச் சைவந் தழைக்க வந்தோன்
முண்டகக் கண்ணனு முண்டகக் கண்ணனுங்
கண்டறி யாத கண்ணுதல் திருவடி
சிந்தித் திருத்தும் புந்திய னம்ம
விருப்பு வெறுப்பிலா வித்தக னைக்கல்
விரும்பு கண்ணியன் சுரும்பிமிர் சோலைக்
காவித் தண்டல மேவி வாழ்வோன்
வேதா சலனென வோதும் பெயரோன்
கலைபல வல்ல புலவ ஞன்ரேர்
நட்பு பெற்ற பெட்புடைக் குரிசில்
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கு
ஞானி யெனவு நவிலத் தக்கோன்
இயற்றமிழ்ச் சைவ மெங்குந் தழைக்கப்
பயிற்று சங்கம் பலவிட மேவிப்
பஃறரு மங்களின் நற்றவம் ஜீவ
கருணையே யென்னும் பொருணனி தேர்ந்திங்
கியாரும் வியக்க நேருஞ் சொற்பொழி
வளித்துப் பலரைக் களித்து வாழச்
சைவ ராக்கிய தெய்விகச் சைவன்
அத்தகைச் சொற்பொழி வினைத்துந் திரட்டிப்

புத்தக வடிவாய்ப் புரிந்தரு ளென்று
பல்லோர் வேண்ட நல்லோ னிரங்கி
ஓவரு நலமார் ஜீவகா ருண்ணிய
விளக்க மென்னும் விளக்க மொன்று
உளக்க ணிமிழுங் களக்க மகல
ஆயபல் கலைகள் மேயபல் கதைகள்
எடுத்துக் காட்டாத் தொடுத்துக் காட்டித்
தடைகளுக் கேற்ற விடைகளு முதவிச்
சிந்தையின் விரும்பித் தந்தன னியாரும்
பெற்று நாடி யுற்றுணர்ந் திறைவன்
மலரடி விருப்பு நலமல வெறுப்பும்
உண்மை யறிவு மெய்தி
மண்ணிலெஞ் ஞான்று மகிழ்ந்து வாழியவே.

---

சைவசித்தாந்த மகா சமாஜப் போஷகரி லொருவராகிய

பண்டித ரத்தினம்

## குகஸ்ரீ புழலை-திருநாவுக்கரசு முதலியாரவர்கள்

(மிராசுதார்-செம்பியம்-பிரம்பூர்)

இயற்றியன.

அறுசீர் விருத்தம்.

பார்பரவு மணிவயல்சூழ் பாலிவயப் பெருக்கதனாற்
பரிவி னூட்டும்
பேர்பரவுந் தொண்டைவள நாட்டிலுயர் கச்சிநகர்
பெட்புட் கொண்ட
ஏர்பரவு மிருங்காவித் தண்டலநன் னகரதனி
லிறும்பூ தெய்த
நார்பரவு சத்தமிழார் கோத்திரவே ளாளர்குல
நன்மை யாளன். (க)

விண்முகத்தோ ருய்யவடி வேலெடுத்துச் சூர்தடிந்த
    வியன்சேர் வாச
சண்முகத்தோ னெனவழங்குந் தருமகுண சீலனொடு
    தன்னே ரில்லாத்
தண்முகத்தோ டேத்துமவர்க் கருள்புரியுஞ் சிவசமயச்
    சார்புற் றோங்கும்
மண்முகத்தோர் வியந்துரைசெய் குந்தம்மை தவத்துதித்த
    மகிமை யாளன். (உ)

தேன்கலந்த மொழிக்குமொழி தித்திக்கு மாணிக்கச்
    செம்மற் கன்று
வான்கலந்த திருக்கோலங் காட்டியதோர்
    மறையடியாய் வயங்கு மந்த
கோன்கலந்த வாசநிறை புகழ்வேதா சலப்பெயர்கொள்
    குரவன் யார்க்கும்
ஊன்கலந்த வுடலுயிர்போ லுளமகிழ வசனிக்கு
    முண்மை யாளன். (ங)

என்னவுநூல் கற்றுணர்ந்த பெருமுயற்சியின்பயனு
    யெழின்மிக் கார்ந்த
பன்னயமு மிகத்தொனிக்க வெளியநடை யில்வசனம்
    பகர்வ தான
சொன்னயமா ரித்தகைய நூலொன்று வினுவிடையாய்ச்
    சொற்சோர் வின்றி
இன்னமுதாய் விளங்குதிருக் குறளாதி வகுத்திடுநல்
    விருமை சான்ற (ச)

வித்தகப்ர மாணங்கள் பற்பலவு மெடுத்துரைத்து
    மேன்மை யான
நித்தியச்சன் மார்க்கமுறுங் கதைகளினை யாங்காங்கு
    நிலவச் செய்தும்

உத்தமப்பத் தியங்கொல்லா விரதமென வழிகாட்டு
      மொழுக்க மிக்க
சித்தமக லாச்சீவ காருண்ய விளக்கமெனத்
      தெளிவாய்ச் சொற்ருன். (ரு)

---

சைவத் திருவாளர் வித்துவான்

## பாரிப்பாக்கம் - கண்ணப்ப முதலியார் அவர்கள் இயற்றியன.

அறுசீர் விருத்தம்.

வண்டாருங் கருங்குவளை யழகெரிக்குந்
      தண்பணைசூழ் மருத வேலித்
தண்டாத வளங்குலவு சீர்காவித் தண்டலமாம்
      தலத்தின் மேய
கண்டார்தம் மனங்கவருஞ் சண்முகன்றன்
      கருதரிய தவத்தின் வந்து
தொண்டாருந் தமிழ்ப்பனுவல் பலபயில்வே
      தாசலனுந் தூய்மை மிக்கோன். க

செந்தமிழ்நூற் பாங்குணர்ந்து செம்மைநலப்
      பெருக்கதனிற் றெளிந்து தேங்கு
மந்தமில்சீ ரருளறமா மொருவிரத மகிலமெலாம்
      பெருகி யோங்கச்
சிந்தைநிறை யன்புந்தச் செழுந் தமிழா
      லோருரைநூல் சிறக்க யாத்திங்
கெந்தையருட் சிவம்பெருக்கு மனைவருக்கும்
      பெருமகிழ்ச்சி யளித்திட் டானல். உ

அறமோங்கு செயலிதென வறைந்திடுமுன்
      அளப்பரிதா மரிய கேள்வித்
திறமோங்கப் பலபேசிச் சிதைத்துயிரை
      யருந்துதற்கே செருமுற் போது

மறமோங்கு செயலினரு மனமுருக
 மதியணிந்தார் அடிநி னைந்தே
நிறமோங்கு முறைதவத்தோன் நினைந்துரைத்த
 நூற்பண்பு நிகழ்த்தொ ணுதால். ௩

சைவத்திருவாளர்

அங்கம்பாக்கம் ர. சீயாலமுதலியார் அவர்கள்

இயற்றியது.

அறுசீர் விருத்தம்.

சீரோங்கு மெங்கள்குலத் தவமணியாய்
 சிறந்தோங்கு சீலம் வாய்ந்து
பேரோங்கு நைட்டிகமாம் பிரமசரி
 யங்காக்கும் பெருமை யோடும்
ஏரோங்கு சத்தமிழார் கோத்திரத்துக்
 கிசைபெருக இணையில் சைவம்
பாரோங்க வருவேதா சலனளித்த
 நூற்பெருமை பகரொ ணுதால். க

பெங்களூர் செண்ஜோசப் காலேஜ் மாஜி தமிழ்ப்பண்டிதர்

தரங்கம்பாடி - சபாபதிப்பிள்ளையவர்க ளியற்றியது.

அறுசீர் விருத்தம்.

கொலைபுரியா தவரிதய கமலமதில்
 வீற்றிருப்பன் கூற்று தைத்த
அலைபுனல்சேர் செஞ்சடையா னமலனெனும்
 பெரும்வழக் கொன்றறியா தார்க்கந்
நிலைதவரு நற்சீவ காருண்ய
 விளக்கமெனு நீதி நூலைக்
கலைபலதே ருயர்வேதா சலக்கவிஞன்
 வினவிடையாய்க் கழறி னனல். க

உ

சிவமயம்

கணபதி துணை

# சிவகாருண்ய விளக்கம்

---

## காப்பு

### விநாயகர்

ஐந்து காமு மருள்வழங்கு முக்கண் ணுஞ்
செந்துவர்வாய் நாலுந் திகழிறையை - யெந்தனுளங்
கொண்டநூன் முற்றிக் குவலயத்தி லேவிளங்க
கண்டுதொழு நெஞ்சே கனிந்து.

### சிவபெருமான்

பிறைதங்கு செஞ்சடையன் பெண்ணொருபா கத்தன்
மறைபுகழு மாலு மறியா - விறையவனைப்
பூசித்து நன்னெஞ்சே போக்கலா நம்வினையை
நேசித்து நில்லாய் நிதம்.

### அம்பிகை

மலையரையன் மாமகளை மாதேவன் காதலியை
யலகிலுயிர்க் கன்னையா வாளை - விலகாது
நெஞ்சே வழுத்துவையே னீக்கலா நம்பவத்தை
யஞ்சேனீ யஞ்சே லினி.

## விநாயகர்

தும்பி முகத்தானைத் தூயவடி யார்க்கருளு
மம்பிகையாள் பெற்ற வருஞ்சுதனைச் - செம்பொனிறக்
கஞ்சனொடு வானவருங் கண்டுபணி யைங்கரன்றன்
செஞ்சரண நெஞ்சமே சேர்.

## சண்முகர்

ஐங்கரனுர் சோதரனை யம்பிகையா டஞ்சுதனை
சங்கரனுர் தங்குருவு மாவானைச் - சங்கையிலா
வன்பர்க் கருள்புரியு மாறுமுகன் பொற்பதநந்
துன்பமற நெஞ்சே தொழு.

## நந்திதேவர்

நந்தி பெருமானை நான்மறையோ டாறங்க
மந்திவண்ணர் தாமருளப் பெற்றுனை - சந்ததமும்
வானவர்கள் போற்ற வளர்கைலைக் காவலனை
ஞானமுற நெஞ்சே நவில்.



உ
சிவமயம்

# சிவகாருண்ய விளக்கம்

உமையொருபாகனும் கறைக்கண்டனும் கயிலையாளியுமாய இறைவன் இன்னருட்பேற்றிற்கு ஒருபடித்தா யுரிமைவாய்ந்த மன்னுயிர்கள்பாற் கருணையின்றி யவ்விறைவன் கோபத்திற்குப் பாத்திரர்களாகச் செய்துகொள்ளும் உலகத்தினது அறியாமையைக் கண்டு வருந்தும் ஜீவகருணையை மேற்கொண்ட நல்லாசிரியர் உலகினரை நோக்கித் தாம் கூறும் இதோபதேசத்தை மாணவன் கேட்கும் வினவும் அதற்குத் தாம் தரும் விடையுமாக வைத்து ஜீவகாருண்ய விளக்கமென்னும் இச்சிறு நூலான் உரைக்கின்றதாக நூலாசிரியர் கூறுவது.

வினா :—உலகத்திற்குப் பஞ்ச கிருத்திய பதியாயிருப்பவர் யாவர் ?

விடை :—சிவபெருமான்.

வினா :—பசுக்கள் என்பன யாவை ?

விடை :—இறைவனால் அருளப்பட்ட தநுகாணாதிகளைப் பெற்ற ஆன்மகோடிகள்.

வினா :—அவ்வான்மகோடிகளின் தோற்றபேதங்கள்யாவை?

விடை :—நால்வகைப் பிறப்பு, எழுவகைத் தோற்றம், எண்பத்துநான்குலக்ஷ யோனி பேதம்.

வினா :—அவைகளின் விரிவென்ன?

விடை :—முதலாவது நால்வகைப் பிறப்பென்பது:

(க) அண்டசம் - முட்டையில் கட்டுப்பட்டுப் பிறப்பது.

(உ) சுவேதசம் - வேர்வையினிடமாகப் பிறப்பது.

(ங) சராயுசம் - கருப்பையிற் கட்டுப்பட்டுப் பிறப்பது.

(ச) உத்பிச்சம் - பூமியினிடமாக வித்தினின்றும்பிறப்பது.

இனி எழுவகைத் தோற்றமாவன—தேவர், மனிதர், விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பனவாம்.

இனி எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதமாவன: ஊர்வன பதினொரு லட்சமும், மானுடர் ஒன்பது லட்சமும், நீர்வாழ்வன பத்துலட்சமும், பட்சிகள் பத்து லட்சமும், மிருகங்கள் பத்து லட்சமும், தேவர் பதினான்கு லட்சமும், தாவரம் இருபது லட்சமும் என வருவனவாம்.

வினா :—இப்படிச் சொல்லப்பட்ட பிறவிகளில் அருமையான பிறவி யாது?

விடை :—இம் மனிதப் பிறவியே அருமையானது. இதற்குச் சான்றாக,

(உதாரணம்) தாயுமானவர், 'எண்ணரிய பிறவி தனில் மானிடப் பிறவிதா னியாதினும் அரிதரிது காண்' என்றருளினார்.

வினா :—ஆனால் இம் மனிதப் பிறவி எடுத்தவர்களெல்லாம் உயர்ந்தவர்கள் தானோ?

விடை :—உலகாயதன் முதலான கீழான சமயங்களிற் பிறவாமலும், வேதாகம வுணர்ச்சி, ஈசுரபக்தி முதலானதும் இல்லாததேசங்களிற் பிறவாமலும், புண்ணிய பூமியாகிய இப் பரதகண்டத்தில் உயர்வாகிய வேதாகமப்

பிரமாணங்களையே சிறப்புவகையாகக் கொண்டுள்ள சமயங்களிற் பிறந்தவர்களே உயர்ந்தவர்களாவார்கள்.

வினா :—இப்படி மேற்சொன்ன சமயங்களிற் பிறந்தவர்களெல்லாம் உயர்ந்தவர்கள் தானோ?

விடை :—இப்படிப் பிறந்தாலும் பல உயிர்களைக் கொன்று அதன் மாமிசத்தைப் புசிப்பவர்களெல்லாம் கீழானவர்களாகும். உயிர்க்கொலை புரிதல் பாவமென்றும், நெடுநாள் நிரயத் துன்பத்தை அனுபவிப்பித்துப் பிறவிதோறும் துக்கத்தை விளைக்குமென்று கருதி, இத்தேகத்தைக் காக்க நினைப்பது நீர்க்குமிழிக்குப் பூண் கட்ட நினைத்தலை யொக்கு மென்றும், அறிவினைப் பொருந்தி ஒரு சீவனால் தன் சரீரத்துக்கு ஆணிவந்த போதிலும் அதன் சரீரத்துக்கு ஆணி வராமல் காப்பவர்களே, உயர்ந்தவர்களாவார்கள்.

பிரமாணம் :

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான் பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. —திருக்குறள்.

வினா :—உலகத்தில் பொய், கொலை, களவு, கள், காமம் என்னும் இவ்வைந்தும் பாவத்தொழில்கள் என்று சொல்லப்பட்டிருக்க அவற்றுள் கொலை மாத்திரம் மிகுந்த பாவமுடைத் தென்ப தெப்படி?

விடை :—கொலையானது ஒருவன் செய்யும் தீவினையாகிய ஒருருவிற்குத் தலையெனப்படும். எதனாலெனில், உயிர்கட்கு இதஞ்செய்தலே புண்ணியம், அகிதஞ் செய்தலே பாவம் என அற நூல்கள் ஓதலின், கொலை

மைக்கு மேம்பட்ட பாவம் ஒன்று மில்லாமையால் கொலையே பாவத்துக்கெல்லாம் முதன்மை ஆதலின், கொல்லாமையே புண்ணியத்துக் கெல்லாம் முதன்மை யென்பதாயிற்று.

(இ - உ - ம்)

கொலையாதி நெறியகன்ற ஞானந்தானே
கூறரிய மேலான ஞான மாகும்
கொலையாதி யகன்றொழுகுந் தவங்கள் தாமே
குற்றமிலா நற்றவமென் றுரைக்கு நூலுங்
கொலையாதி யகற்றிய நல்லறங்கள் தாமே
குவலயத்தி லொப்பரிய வறங்களாகும்
கொலையாதி யகன்றபெருஞ் செல்வந்தானே
கூறிலுயிர்க் கிதமான வாழ்வதாமே.

—சிவஞான தீபம்.

ஆணை யடியி லடங்கா வடியில்லை
தான துபோல் நிற்கின்ற தன்மைத்தா—னூனுயிரைக்
கொல்லா வறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கு
மெல்லா வறமு மிசைந்து. —இதிகாசம்.

மற்றும் வருவனவற்றால் காண்க.

வினா:—கொலையால் வரும் பாவமானது ஒருவனை என்ன செய்யும்?

விடை:—அவனுக்கு நெடுநாள் நீங்குதற்கரிய பெரியதாகிய துன்பத்தைக் கொடுக்கும்.

வினா:—இப்படி ஒருவன் கொலை செய்த உடனே அதனால் வருந் துன்பத்தை யனுபவிக்கப் பார்க்கவில்லையே?

விடை :—இம்மையில் கொலைகளைப் பண்ணினவன் இப்போது துன்பமனுபவியா விடினும், தேகாந்தியத்தில் நரகத்தை யடைந்து பெருந்துன்பங்களை யனுபவித்துப் பின்னும், நரக சேடத்தினால் பூமியின்கண் பிறந்து அந்த சேடபலமாகிய துக்கங்களையும் அனுபவிப்பான் என்பது சத்தியம். எதுபோலெனின், ஒரு வேளாண்மை செய்தவனுக்கு அதன் பலமானது காலாவதியிற் புசிப்புமாய் மேலைக்கு வித்துமானது போலுமெனக் கொள்க.

(இ - உ - ம்.)

மேலைக்கு வித்துமாகி விளைந்தவை யுணவுமாகி
ஞாலத்து வருமாபோல நாஞ்செயும் வினைகளெல்லாம்
ஏலத்தான் பலமாச் செய்யு மிதமகி தங்கட்கெல்லா
மூலத்ததாகி யென்றும் வந்திடு முறைமை யோடே.

—சிவஞான சித்தியார்.

வினா :—இம்மையிற் செய்த கொலையானது சரீராந்தியத்தில் வருத்துவது முண்டோ?

விடை :—உண்டு, அதெப்படி யெனில் விஷத்தையுண்டானொருவனை அவ்விடம் வருத்திக் கொல்லுதலின் முன்பே மயக்கம் தோன்றுதல் போலவும், நெருப்பினாற் சூடுண்டா னொருவனுக்கு அது புண்ணுவதன் முன்பே எரிதல் போலவும், சிவத்துரோகாதி அதிபாதகமும் பிரம்மகத்தியாதி மகாபாதகமும் எரிவாய் நரகத்திலழுத்துவதன் முன்பே இம்மையிற் செய்த உடனே சித்தப் பிரமையாதி துக்கங்களும் பிரம்மகத்தியர்தி துக்கங்களும் அடைதலினெனக் கொள்க.

(இ - உ - ம்.)

மிகமே வியபுண் ணியபா வமெனும்
    வினையின் பயன்வே றெருகா லமுறு
திகமே வருமென் பதனு லுளரோ
    யெல்லா மிவனைச் செறவெய் தினவே.
—சசிவன்னபோதம்.

இம்மையிற் கொலை செய்யின் இறந்தபின் அப்பாவம் செய்தவனை நரகத்தழுத்தி அதன் சேடமானது மறுசென் மத்திலும் துக்கம் தருமென்பதற்குப் பிரமாணம்.

கருவினு ளழிவன் முற்றிக் கழிந்துட னழிவன் காளைப்
பருவமுற் றழிவ னீகை பகர்ந்துபின் னுதவாப் பாவி
பெருவலை கண்ணி யாலும் பிடித்துயிர் வதைத்த பேதை
கருதிய பொருளைத் தக்கோர்க் குதவிடான் றிளைத்தகையன்.
—சிவதருமோத்தரம்.

அன்றியும்,

அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே - அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால். —நாலடியார்.

என வருவதனுலு மறிக.

வினு:—இவ்வுலகத்திற் சில புறமதவாதிகளி னபிப்பிராயம், கர்த்தா மனிதனது ஆகாரத்திற்காகவே மிருகம் பட்சி முதலானவைகளை எற்படுத்தினுரென்று சொல்லுகிறுர் களே, அது எப்படி?

விடை:—அது முற்றும் மூடவபிப்பிராயம், நம்சாத்திரங் கள் சீவர்கள் எல்லாம் ஒருவருக்கொருவர் அனுதி சன்

மாநதரங்களிற் செய்த இதாகிதங்களி லுண்டாகிய புண்ணிய பாவத்தினாலே சொல்லப்பட்ட எழுவகைத் தோற்றமடைதல் சத்தியம் எனக் கூறுகின்றன.

(இ- உ - ம்.)

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா அ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்

—திருவாசகம்.

என்னுந் திருவாக்கின்படி சீவர்கள் தங்கன்மங்களுக்கு ஏற்ற படிப் பலபிறவியை யெடுப்பார்கள். அப்படியிருக்க மனிதர்களின் உணவுக்காகவே மிருகம், பட்சி, முதலானவைகளைக் கடவுள் படைத்தாரென்பது மிகவும் பொருந்தாத விஷயம்.

வினா:—சராசரங்களெல்லாம் சீவன் என்றால் அசரபதார்த்தமாகிய காய், கனி, கிழங்கு, கீரை, நெல், சோளம், பயறு, உளுந்து, துவரை முதலானவைகளைப் புசிக்கின்றோமே இதனால் பாவமில்லையா ?

விடை:—சராசரமெல்லாம் சீவனாதலால் அசரக்கொலையிலும் சிறிதுபாவமுண்டு, அசரத்தில் சிறிது சடமானபின் புசிப்பதனால் அதனிடத்துப் பாவமில்லை. அசரக் கொலையில் சிறிது பாவமுண்டென்பதைப் பற்றிக் கூறுவாம். முளைகளைப் பிடுங்குதல், மரங்களை வேரோடு பறித்தல், வேறு சில செடிகளை வேரோடுகளைதல் முதலானவைக ளெல்லாம் பாவமாகும்.

வினா:—தாவரங்களினிடத் துண்டாகும் காய், கனி, கிழங்கு, தழை, பூக்கள் முதலானவைகளைப் பறித்துண்பதினால் பாவமில்லையா ?

விடை :—இல்லை. எப்படியெனில் காய், கனி, கிழங்கு, கீரை, பூக்கள் முதலானவைகளைப் பறித்து ஆகாரமாகக் கொள்வதேயன்றி அவ்வுயிருள்ள மரம், கொடி, செடி முதலானவைகளை ஆகாரமாகக் கொள்ளாதபடியாலும் அவைகளின் காய் முதலானவைகளைப் பறிக்கும்போது, நமது சரீரத்தில் நகம், மயிர், பல், மலமூத்திராதிகள் கழிவதினால் துன்பமில்லாதது போல அதற்கும் துன்பமில்லை. அன்றியும் தாவர வர்க்கங்களுக்கு மனம்முதலான வந்தக்கரண விருத்தியில்லாதபடியாலும் பதைபதைப்பு மில்லாமையாலும் அது உயிர்க் கொலையுமல்ல ஆனதால் அது சீவகாருண்ய விரோதமாகாது.

வினா :—வித்து, நெல் முதலானவைகளைச் சடங்களென்பதெப்படி?

விடை :—வித்துக்களில் சீவனிருந்தால் நிலத்தில் விதையா முன்னமே விளையவேண்டும். நிலத்தில் விதைத்தகாலத்தும் சில வித்துக்கள் விளையாமலே யிருக்கின்றன. அன்றியும் வித்தென்பது காரணம். இந்தக் காரணமுடம்பு தோன்றுதற்கே யென்று சிறு பிள்ளைகளாலும் அறியப்படும். உயிர் நித்தியம், உடம்பு அநித்தியம். நித்தியமான உயிர் காரணம் வேண்டாது அநித்தியமான வுடம்பே காரணம் வேண்டும். ஆதலால் வித்துக்களைச் சடமென்றறியவேண்டும். ஆனாலவ்வித்துக்

களிடத்து ஆன்மாக்க ளேறுவதெப்படி யெனில், வித்து நிலத்திற் படிந்தபின் நீர்வழியாக வான்மாவானது சென்று பக்குவ சத்தியிற் கலந்து வித்திலேறி முளைத்தபடியால் முளையானது வித்து காய் முதலியவைகளைப் போல் சடமல்ல. ஆதலால் முளைகளைப் பிடுங்கப்படாது. அன்றியும் பூவரசு, முருங்கை, ஆல் முதலான மரங்களைத் துணித்து வேறு வேறிடத்து வைத்தாலும் அதுவும் பல மரங்களாகத் தளிர்த்து அம் முதன் மரமும் கிளைத்தெழுகின்றது. அதுபோல் ஒரு ஆட்டைப் பிடித்து அதன் கால்களைத் துண்டு படுத்தி நாலிடத்தில் புதைத்தால் நான்கு ஆடாக உயிர்பெற்று எழுமா? எழாது. ஆனதால் அசரத்தினிடத்துப் பாவங்குறைவாகும்.

(இ - உ - ம்.)

மரக்கோட்டைக் காதிவந்து வைத்தான் மரமும்
மரக்கோடுந் தானிரண்டாய் வாழுஞ்—சரிக்கின்ற
வோருயிரின் கால்வாங்கி யோரிடத்தே வைத்தான்மற்
றீருயிர்தா னாமோ வியம்பு. —புலான் மறுத்தல்.

வினா :—அசரக் கொலையிற் பாவம் சிறிதானாலும் நாளடைவில் சேர்ந்து தேகாந்தியத்தில் அதிகமாகுமல்லவா? அல்லாமலும் அசர முயற்சியாலுண்டாகும் சரக்கொலைகளு மனந்த மாதலின் அவற்றின் பலனை யனுபவியாது நீங்குவதெப்படி?

விடை :—ஒரு விவேகியானவன் அசர பதார்த்தங்களை வேதாகமங்களில் இல்லறத்திற் கோதிய தருமம் வழு

வாமல் தேவர், அதிதி அனல், தேசிகர் இந்நால்வகை யோர்க்கும் முன்னூட்டிப் பின்னுண்பானாகில் அன்னம், காய், தழை முதலிய அசரக் கொலையால் வரும் தோஷமும், மற்று உழுதல், கூலிவேலை செய்தல், வாணி பஞ் செய்தல், சினமிகுத்தல், அசத்தியம் கூறல், வீடு தூர்த்தல், மெழுகுதல், நெருப்புமூட்டல், தண்ணீர் கவர்தல், நெற்குத்துதல் எனப் பத்துவிதத்தால் வரும் பாவமும் அவ்வக்காலத்தில் நட்டமாதலின் அவனு க்குச் சரீராந்தியத்திற் சுமக்கும் பாவமே யில்லை.

(இ - உ - ம்.)

தேவ ரதிதியன றேசிகர்க்கென் றட்டவன்னந்
தேவருல கத்தமுத மென். —சைவசமய நெறி.

(இ - உ - ம்)

தலத்துழல் கூலி வேலை சந்தையிற் கொண்டு விற்கை
குலைத்த சொற்கூட்டுங் கோப மசத்தியங் கூற லுள்ளு
மலக்கிடல் மெழுக லங்கி யாக்கனீ ரரிசி யென்றே
யிலக்கணத் தியம்பும் பத்துந் தமக்கெனிற் பாவ மீட்டும்.
—சிவதருமோத்தரம்.

எனும் வாக்காலு முணர்க.

வினா :—ஆனால் இவ்வசர பதார்த்தங்களைப் போல மாமிசா திகளை நிவேதித்தால் குருவாதிக்கு அற்பிதமாகாதோ?

விடை :—குருவாதி நால்வருக்கும் மாமிசம் நிவேதிக்க வொண்ணாது. குற்றஞ்செய்தவன் ஒருவன் அக்குற்ற த்தை நீக்கும் பொருட்டு இராஜாவைப் பிரார்த்திக்கச் செல்லுமளவில் அரசனுக்குப் பிரீதியில்லாத காரியத் தைச் செய்துகொண்டு போனானாகில் முன்பு செய்த

குற்றமுந் தீராது பின்புந் தண்டிக்கப்படுவான். அது போல் ஈசுராதி தேவதைகளுக்குப் பிரீதியில்லாத மாமிசத்தை நிவேதித்தால் சரக்கொலைமையும் தீராமல் அதிபாதகமும் வரும்.

வினு :—முன் கண்ணப்பர் ஈசுவரனுக்கு மாமிசம் நிவேதித்திருக்க மாமிசாதிகள் ஈசுவரனுக்குப் பிரீதியல்லவென்பதெப்படி?

விடை :—கண்ணப்பர் மாமிசம் நிவேதித்து முத்திபெற்ருர் என்பது சத்தியம். அதுபோல் பிறரும் மாமிசத்தை நிவேதித்தல் கூடாது. ஏனெனில், கண்ணப்பர் பூர்வ ஜன்மத்தில் செய்த தவபோபலத்திஞல் ஓர்கால் காளத்தியீசுரரைக் கண்ட மாத்திரத்தில் பேயின்கண் பிடியுண்ட பெண்ணின் சரித்திரம் பேயின் சரித்திரமாய் நின்றதுபோல கண்ணப்பருடைய செய்கை யெல்லாம் காளத்தீசுாருடைய செய்கையாய் நிற்றலால் அவருக்கு மோட்சம் கைகூடிற்று. அவர் வேடுவசாதியிற் பிறந்து பழகியிருந்த பழக்கத்தை பக்திமிகுதியிஞல் பின்பு செய்தார். அவரைப்போ லொருவன் ஈசுவரனுக்கு மாமிசம் நிவேதிப்பதாஞல், வாய் நீராலபிஷேகம் பண்ணிச் செருப்புக் காலாலுதைப்பதும் செய்யவேண்டும். அப்படிச் செய்யலாமென்று நினைப்பவன் போய்விழும் நரகத்தில் பின் வீழ்வா ரொருவருமில்லை. அவர் தேகாபிமான மின்றித் தன் கண்ணைத் தோண்டிக் காளத்திநாதர் கண்ணிலப்பிஞர். கண்ணப்பரைப் போல் மாமிசம் நிவேதிக்கலாமென்று சொல்லுகிறவர்களுக்குக் கண்ணைத்தோண்டுதல் முடியுமா வென்று

யோசிக்கவேண்டும். அப்படி ஒருக்காலும் ஒருவருமே செய்யமாட்டார்கள். ஆனதால் அது உலகங்கடந்த பத்தி. இதுபோல இன்னும் பெரியபுராணத்தில் சண்டேசுர நாயனுர் பிதாவைக் கொன்றும், இயற்பகை நாயனுர் பத்தினியைக் கொடுத்தும், சிறுத்தொண்ட நாயனுர் பிள்ளையை யறுத்தும் முத்தியடைந்தாரென்று, அதுவே வழியாக பிறரும் பிதாவைக் கொன்றும், பத்தினியைக் கொடுத்தும், பிள்ளையைக் கொன்றும் முத்தியடைவாரில்லை. ஆனதால் அவர்களைப்போல வன்றொண்டராய்ப் பக்தி மார்க்கத்தை நாம் செய்ய முடியாது. விதிமார்க்கந்தான் நாம் செய்யக்கூடும். அக்கண்ணப்பர் சரிதத்தில் சிவகோசரியார் செய்த பூசை தான் விதிமார்க்கம். அதுபோல் தான் நாம் நடத்தல் வேண்டும்.

(இ - உ - ம்.)

ஆனை மதப்பட்டா லலங்கார மன்றிநாய்
தானுமதப் பட்டாற் சரியாமோ—ஞானி
தடை மீறினுலுஞ் சதிராகுஞ் சன்மி
கடை மீறலாகாது காண்.

—ஒழிவிலொடுக்கம்.

வினு :—உலகத்தில் சிலர் ஈசுராம்சமாகிய பராசத்திக்கு மாமிச நிவேதனம் உரியதென்று சொல்லுகிறுர்களே அதெப்படி?

விடை:—சர்வான்ம கோடிகளையும் பெருது பெற்ற மாதாவாய், கருணும்பிகையாய், முப்பத்திரண்டு அறங்களை

வளர்க்கும் அறம் வளர்த்த நாயகியாகிய நம்மங்கை யற்கண்ணம்மையாருக்கு மாமிச நிவேதனம் செய்யலாமென்று சொல்பவர்கள் போய்விழும் நரகத்தில் பின் வீழ்வார் ஒருவருமில்லை.

வினு :—உலகத்தில் எல்லாச் சீவர்களிடத்திலும் ஒருபடித்தாகக் காருண்ய மிருக்கவேண்டியது அவசியந் தானே ?

விடை :—ஆம் அவசியந்தான்.

வினு :—ஆனல் பூனை காக்கை இவையிரண்டும் கொடூரமானவையா ? சாந்தமானவையா ?

விடை :—இவைகள் கொடூர குணமுடையன. பூனையானது வஞ்சகமும் திருட்டுத்தன்மையு முடையது. அது அணில், கிளிப்பிள்ளை, ஊர்க்குருவி முதலான ஜந்துக்களையும் கொன்று தின்னும் கொடூரகுணமுடையது. அல்லாமலும் வீடுகளிலுள்ள பால் தயிர் முதலானவைகளைத் திருடியுண்ணுந் தன்மையுமுடையது. அப்படியிருந்தும் பூனையையடிப்பது மாபாதகமென்றும் அதன் ஒருமயிர் உதிர்ந்தால் ஒன்பது பிராமணரைக் கொன்ற தோஷமென்றும் உலகத்தார் சொல்லுகிறார்கள். அன்றியும் காக்கையானது நம் வீட்டிலிருக்கும் அன்னம் முதலான வஸ்துக்களை துணிவாயெடுப்பதுமல்லாமல், எருதுநோ யறியாக் காக்கையென்று உலகத்தார் அதன் கொடுமையும் சொல்லுகிறார்கள். அப்படியிருக்கக் காக்கையை ஒருவ ரடிக்கப்போனால் அதையடிக்காதே காக்கை வலி வருமென்று சொல்லு

கிறுர்கள். அன்றியும் விசேடதினங்களில் காக்கைக்கு அன்னமிடுகிறுர்கள். இவை இரண்டும் துஷ்டப் பிராணிகளாயிருந்தும் உலகத்தார் இவைகளிடத்துக் காருண்யம் செலுத்துவதை நாம் பார்க்கிறோம்.

வினு:—சிலர் கருடனைக்கண்டு தோத்திரம்செய்து வணங்குகிறுர்களே அது எதற்கு ?

விடை :—கருடனுனது வைகுந்த வாசனுகிய பகவானது ஊர்தியி னம்சமாயிருத்தலின் அதைக் காணுந்தோறும் பகவானைக் கண்டது போலப் பலவாருகத் தோத்திரம் செய்து வணங்குகிறுர்கள். சிலர் கருட தரிசனஞ்செய்தே புசிப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கிறுர்கள்.

வினு :—உலகத்தில் மேடங்கள் (ஆடுகள்) கொடூரமுடையனவா, சாதுவானவா ? மனிதர்களுக்குப் பயன்தரக் கூடியனவா, அல்லனவா ?

விடை :—இது மிகவும் சாதுவான பிராணி. இதனுல் ஒருவருக்கும் ஒருவகையான தீங்கு கிடையாது. இது மனிதர்களுக்கு உபகாரமாய்ப் பால் முதலானதும் கொடுத்துத் தன் சாணத்தினுல் புலங்களுக்கு எருவையுமுதவும். அன்றியும் மயிரினுல் கம்பளம் முதலான உடையும் தரும் தன்மையுடையது. இப்படியிருக்க முன்சொன்ன பூனை காக்கை ஆகிய இரண்டும் துஷ்டப் பிராணிகளா யிருந்தும் அதனிடத்துக் காருண்யமுடையவர்களா யிருப்பவர்கள் உலகத்தில் எவ்வகை விரோதமுஞ் செய்யாமல் பலருக்கும் உபகாரமாயிருக்

றும் ஆடுகளிடத்தில் எவ்வளவு காருண்ய மிருத்தல் வேண்டும். இதுவன்றோ அறிவாளிகளின் தன்மை. இது எள்ளளவும் உலகத்தில் காணவில்லையே! அந்தோ! ஆச்சரியம்! உற்று நோக்கில் கொடியதாயி னும் தங்களாகாரத்துக்குப் பயன்படாத பிராணி களின்மீது காருண்யமும், மிக்க சாதுவானாலும், உப காரமுடையதானாலும் தங்களாகாரத்துக்குப் பயன் படக்கூடியதாயின் எள்ளளவும் காருண்ய மில்லாமை யுமே ஏற்படுகிறது. இப்படிச் சீவர்களிடத்தில் காருண் யத்தைச் செலுத்தும் அறிவாளிகளைப்போலும் அறி வாளிகள் உலகத்தில் ஒருவருமேயில்லை! இது நிற்க. குக்குடம் (கோழி) என்பது அடுத்தபடி வருவது. உல கத்தில் அதனாலும் இம்சையில்லை. அதனிடத்தும்மேற் சொன்ன வண்ணமே நடக்கிறார்கள். அன்றியும் பலர் கருட தரிசனஞ் செய்வது, தோத்திரிப்பது, தரிசனஞ் செய்து ஆகாரங்கொள்வது எதற்கு ? அது பகவா னூர்தியி னம்சமாதலால் அதை வழிபட்டால் பரம பதத்தை யடையலாமென்றுதானே. ஆம், அந்த நிச்சயந்தான் வழிபடுபவருக்கு உண்டு.

வினா :—அதுபோல ஆடு கோழி ஆகிய இவைகள் வேறு தெய்வங்கட்கு வாகனமாயும் கொடியாயும் இருப்ப துண்டோ ?

விடை :—உண்டு; ஐவகை மன்றுதோறுடிய வள்ளல் காமுறும் குன்றுதோறாடிய குமாரவேளாகிய அறு முகப் பிரானுக்கு வாகனமும் கொடியுமாகவுள்ளன இவை. நாரதர் செய்த யாகத்தில் ஓர் செச்சை (ஆடு)

எழுந்து மண்ணும் விண்ணுமுள்ள உயிர்களை வதைத்து வர அப்போது இருடிகளுந் தேவர்களுங் கந்தமாதன கிரியில் திருவிளையாட்டியற்றும் குகப்பெருமானிடம் வந்து குறைகூற அவர் தம்மிளவலாகிய வீரவாகுதேவரைக்கொண் டவ்வாட்டைப் பிடித்துவந்து தாம் வாகனமாகக்கொண்டார். இதுபற்றியே தகரேறுபடலமெனக் கந்தபுராணத்துளது. அன்றியுஞ் சேவலங்கொடியோனென்று முருகனை நூல்களெல்லாம் கூறுகின்றன.

வினு :—உலகத்தார் வைகுண்டவாசருக்கு வாகனமாகிய கருடனிடத்தும், சண்முகப் பெருமானுக்கு வாகனமுங் கொடியுமாகிய ஆடு கோழிகளிடத்தும் ஒருபடித்தான அன்பும் வழிபாடும் செய்கின்றார்களா ?

விடை :—அப்படியில்லை. கருடனைக்கண்ட மாத்திரத்தில் வணக்கமும், தோத்திரமும் செய்கின்றவர்கள் குகப்பெருமானது வாகனமும், கொடியுமாகிய ஆடு கோழிகளுக்குக் கும்பிடும் தோத்திரமும் வேண்டுவதேயில்லை, கத்தி எடுத்து வம்பிடாதிருந்தால் போதும்! உலகத்தில் பிறந்திறக்குந் தெய்வங்களுக்குப் பிரார்த்தனை செய்துகொள்பவர்களெல்லாம் பலிக்கு முதன்மையாகக் கொள்வது நம்பெருமானுக்கு வாகனமும் கொடியுமாகவுடைய ஆடுங் கோழியுந்தானே! இன்னும் பிரபலப் பிரார்த்தனை செய்பவர்கள் இதோடு வைகுந்தவாசர் கொண்ட திருவுருவமாகிய வராகத்தையும் சேர்த்துப் பலியிடுகிறார்கள். கருடனுக்குத் தோத்திரமும் வணக்கமும் செய்யுமன்பர்கள் வைகுந்த

பதமடைவதும் சத்தியம். குகப்பெருமானது வாகனத்துக்கும், கொடிக்கும் இன்னல் செய்யும் பாதகர் ரௌரவாதி நரகத்தை யடைவதும் சத்தியம்.

வினா:—உலகத்தில் தெய்வங்களில் உயர்வு தாழ்வு உண்டோ?

விடை :—உண்டு.

வினா :—அவற்றுள் உயர்வான தெய்வங்கள் யாவை ?

விடை :—சிவபெருமான், பராசத்தி, விநாயகர், சண்முகர், விஷ்ணு, இலக்குமி முதலான தெய்வங்களெல்லாம் உயர்வானவை.

வினா :—தாழ்வான தெய்வங்க ளென்பன யாவை ?

விடை :—ஊத்துக்காட்டாள், பெரியபாளையத்தாள், மதுரைவீரன், காத்தவராயன், மன்னார்சாமி, பத்திரகாளி, நாட்டாரயன், இருசி, காட்டேரி முதலிய பிறப்பிறப்போடு கூடிய சிறு தெய்வங்கள்.

வினா :—இவ்விருவகைத் தெய்வங்களுள் நாம் குல தெய்வமாகக் கொள்வது எதனை ?

விடை :—சிவபெருமான் முதலான தெய்வங்களை. இஃதன்றி வேறு சில சிறு தெய்வங்களைக் கொண்டாடுகின்றவர்களை நோக்கில், விளக்கிருக்க மின்மினித் தேடுதல் போலவும், நெற்குத்தி யுண்ணாது உமிகுத்தி வருந்துதல்போலவும், நிழலோடு கூடிய நல்வழி யிருக்க முட்கள் நிறைந்து அளறு தங்கிய தீவழி செல்வது போலவுமாகும். இதுபற்றியன்றோ 'பிறந்திறக்கும் தெய்வப் பிணங்களைக்கொண்டாடேன்' என்று குகை நமச்சிவாய தேவரும், 'சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோமல்

லோம்' என்று ஸ்ரீவாகீசரும், 'திருவருளாலே இருக்கப்பெறின் இறைவா உள்ளேன் பிறதெய்வ முன்னையல்லாதெங்களுத்தமனே' என்று மாணிக்கவாசகரும் 'தலைவநின்னலதோர் தெய்வம் பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணானந்த வாழ்வே' எனத்தாயுமானவரும் கூறியுள்ளார்கள். அன்றியும் காஞ்சிப் புராணம்

"ஆனே றுயர்த்தருளி யன்றிணா ரூரெரித்த
கோனே யெனக்குக் குலதெய்வ மாம்பேற்றால்
யானே பெருஞ்செல்வன் யானே பெருஞ்செல்வன்
யானே பெருஞ்செல்வ னெல்லா வுலகிலுமே"

என்று கூறும்.

இவை போன்ற ஆன்றோர்கள் வாக்கினால் சிவபெருமானே நங்குல தெய்வ மென்பதாயிற்று.

வினா :—ஆனால் சிறு தெய்வங்களை வழிபடுதலும் குலதெய்வமாகக் கொள்ளுதலும் உலகத்திலில்லையோ?

விடை :—சிலர் தங்கள் கன்மானுசாரத்துக்குத் தக்கபடி மதுரைவீரன், மன்னார்சாமி, மாரி முதலான சிறு தெய்வங்களைக் குலதெய்வங்களாகக் கொள்ளுதலுமுண்டு.

வினா :—ஆனால் சிலர் தாங்கள் வழிபடும் அத்தேவதைகளுக்கு ஆடு, பன்றி, கோழி, எருமைக்கடா முதலியசாதுவான பிராணிகளைப் பலியிடுகின்றார்களே, அஃதேன்?

விடை :—அஃது அறியாமையே யாகும். அவர்கள் அவமே தேவதைகளைப் போலி முன்னிலையாக வைத்துக்கொண்டு பலிகொடுத்துத் தங்களுக்கு உணவாக்கிக் கொள்ளுகிறார்கள்.

வினு :—ஆனுல் தங்கள் மனக்கோரிக்கை நிறை வேறவும், பெண்டு பிள்ளைகளுக்குப் பெரும்வியாதி வந்தகாலத்து உயிர்க்குயிர் கொடுத்து வியாதிநீங்கி அவர்கள் பிழைக்கும் வண்ணமும் பலியிடுவதாகச் சொல்லுகிருர்களே அஃதெப்படி?

விடை :—அப்படி அவர்கள் மனக்கோரிக்கை நிறைவேறவும், பெண்டு பிள்ளைகள் வியாதி நீங்கிப் பிழைக்கவும் செய்கிரேுமென்று சொன்னுல், அவர்கள் மனக்கோரிக்கை நிறைவேற்றமும் பெண்டு பிள்ளைகள் வியாதி நீங்கிச் சுகமடைதலும் உலகத்தில் வெகுவாய்க் காணேும். அன்றியும் ஒருவர் மிகுந்த வியாதியோடிருந்த காலத்துப்பூசாரி கட்டுப் பிடித்துப் பார்த்து இது காளியம்மன் குற்றம், ஜோடு ஆட்டுக்கடாக்கள் பிரார்த்தனைபண்ணி மும்முறை சுற்றி விட்டால் இவர் உயிர் பெற்றெழுவாரென்று அம்மன் சொல்லுகிறதென்று சொன்னுன். அவர்கள் மறுதினம் காலையே பூசாரி சொன்னபடிச் செய்தார்கள். அன்று மாலையே அவர் மாணமடைந்தார். உலகத்தில் பெருஞ் செல்வ வந்தர்களும் பெரிய உத்தியோக பதவியிலிருப்பவர்களும் சிலர் இளமைப் பருவத்திலேயே மரணமடையக்காண்கிரேும். இப்படி உயிர்க்குயிர் கொடுத்துப் பிழைப்பதானுல் எவ்வளவுபேர் இது வரையிலும் பிழைத்திருக்க வேண்டும். ஆனதால் இது முற்றும் நம்பத்தக்கதன்று, பொய்யே யாகும். ஈசுவர நியமத்தை மாற்ற வேறு சிறு தெய்வங்களால் முடியாது.

வினு .—ஆனுல் இவர்களிடும் பலியைத் தேவதைகள் அங்கீகரிக்கின்றனவா, இல்லையா ?

விடை :—அவை ஒருக்காலும் பலியை அங்கீகரித்தல் இல்லை. அதெப்படியெனில், அத்தெய்வத்துக்கு அபிடேக அலங்காராதிகள் செய்து தேங்காய் பழம் பொங்கல் முதலானவைகளை எதிரில் வைத்துத் தூபதீப நைவேத்யம் செய்கிறார்கள். அப்படிச் செய்கின்ற அவர்களே அவ்வாலயத்தின்கதவைமுற்றும் சாத்திவிட்டோ அல்லது திரையிட்டோ வெளியில் பலியிடுகின்றார்கள். அவர் செய்கையினாலேயே அப்பலி அத்தெய்வத்துக்குப் பிரீதியில்லை யென்பது சாட்சியாகும். அன்றியும் பலியிடுதல் வேண்டு மென்கிறவர்களின் கருத்தையே அநுசரித்துக் கொஞ்சங் கூறுவாம். ஓ தெய்வமே, எங்கள் பிள்ளைக்குப் பெரும் வியாதி வந்த காலத்து உயிர்க்குயிர் கொடுப்பதாகப் பிரார்த்தனை பண்ணிக்கொண்டபடியே உன் கோயிலில் கொண்டு வந்து ஆடு பன்றி முதலானவைகளை நிறுத்தி யிருக்கிறோம். உயிர்க்குயிர் கொடுப்ப தாகத்தானே பிரார்த்தனை. கத்தியெடுத்து நாங்களிவற்றைக் கொல்வது பாவமென்று பல நூல்களும் பெரியோர்களும் சொல்லுகிறார்கள். ஆனதால் நீயே இவைகளின் உயிரை வாங்கிக்கொள்ளென்று அத்தெய்வத்தின் முன் சொல்லட்டும். அப்படிச் சொன்னவுடனே அது அவ்வுயிர்களைக் கொள்ளுமானால் அதற்கு அப்பலி பிரீதி யென்று ஒருவாறு மத்திமமாக ஒப்புக்கொள்ளலாம் என்று சொன்னது பூர்வபட்சம். ஆனால் இதே மாதிரி தங்களுக்குரிமையும் அருமையு முள்ள மனைவி, புத்திரர் முதலானவர்களைக் கொண்டுபோய் நிறுத்தி இவர்களுயிரை வாங்கிக் கொள்ளென்று சொன்ன மாத்திரத்தில், அத்தெய்வம்

அவர் உயிரை வாங்கிக்கொள்வது நிச்சயமானல் யாராவது அப்படிச் செய்வார்களா?செய்யவேமாட்டார்கள். மறந்தாயினும் சொப்பனத்தாயினும் அக்கோயில் வழி செல்வார்களா? செல்லார்கள். அன்றியும் தங்கள் புத்திரர் முதலானவர்கள் தெரியாமல் அக்கோயில் வழிச் சென்றால் அக்கொடுந் தெய்வம் அவர்கள் உயிரை வாங்கிக்கொள்ளு மென்னும் பயத்தால் அவ்வூரை விட்டு வெளியூருக்குப் போய்விடவும் நினைப்பார்களல்லவா? நமக்குச் சரீரத்தின் மீது இருக்கும் பிரியத்தைப் போலப் பிற உயிர்களுக்கு மிருக்கு மல்லவா? ஆனதால் நாம் அப்பிராணிகளை அத்தெய்வத்தின் முன் நிறுத்தி அவ்வாறு சொல்வதும் கூடா தென்பது சித்தாந்தம்.

விஞ:—மாரியம்மன், பிடாரி முதலான தேவதைகளுக்கு உற்சவகாலங்களில் பலி செலுத்துவதும் உறுப்புச் செலுத்துவதும் செய்கிறார்களே, அதெப்படி ?

விடை:—ஆலயங்களில் பலியை அங்கீகரியாத தேவதைகளுக்கு வெளியில் உற்சவகாலங்களில் பலிமுதலானவைகள் அங்கீகாரமாகுமா? ஒருகாலுமாகாது. ஆனதால், அவ்வுயிர்ப் பலியிடுதற்குப் பதிலாகத் தேங்காய், கலியாணபூசுணைக்காய், எலுமிச்சம்பழம் முதலானவைகளைப் பலியாகச் செய்யலாம். இந்தப் பிரகாரம் நமது சுற்றுப் பக்கம் பல கிராமங்களிலும், திருப்போரூர், திருவண்ணமலை முதலான பல விடங்களிலும் நடந்து வருகின்றது.

வினு :—ஆனல் ஆலயத்தும் உற்சவகாலத்தும் இப் பலிமுதலானது செய்யாவிடின் அவர் குடும்பத்துக்கும் அவ்வூருக்கும் பல கெடுதிகள் வருமென்று சொல்லுகிறார்களே அதெப்படி ?

விடை :—இப்படிச் சொல்வது மூடவபிப்பிராயம். சிறுதெய்வங்கட்கு உயிர்ப்பலி யிடாதிருக்கும் குடும்பத்திலும், ஊர்களிலுமிருக்கும் சுகம், பலியிடுவோர் குடும்பத்திலும் அவர் வாழுமிடத்திலும் கிடையாது. இதற்குத் திருஷ்டாந்தம் முன் சொன்ன ஊர்களே சான்றாகும்.

வினு :—தேவதைகளைப் போலி முன்னிலையாகக்கொண்டு உயிர்வதை செய்யும் பாதகர்க்கு எமலோக தண்டனை யுண்டோ ?

விடை :—உண்டு. உயிர்வதை செய்தவனைத்தேகாந்தியத்தில் காலதூதர் பிடித்துக்கொண்டு போய்த் தருமராஜனிடம் விட, சித்திரகுப்தரென்னும் கணக்கப்பிள்ளைகள் இவன் தெய்வங்களுக் கென்று பலியிட்ட ஆடு, கோழி, பன்றி, எருமைக்கடாக்கள் அனந்தமென்று வாசிக்க, அவனைநோக்கி நீ செய்தது உண்மைதானு வென்று தருமன் கேட்க, அவன் அத்தெய்வத்துக்குச் செய்த தென்று சொல்ல, அத்தெய்வத்தை அழைத்து வரும்படி தூதருக்கு உத்தரவு செய்ய, உடனே அது வந்து கூற்றுவன் எதிரில் நிற்க, அதைப் பார்த்துத் தருமன் இவன் உனக்கு வெகுகாலமாகப் பல உயிர்களைப் பலி கொடுத்தது மெய்தானுவென்று வினவ, உடனே அத் தேவதை நடுநடுங்கி "ஓ தென்திசைக்கடவுளே! நான் உலகத்திலிருக்கிற சர்வஜீவகோடிகளையும் புத்திரர்

களைப் போலச் சமரசமாகப் பார்ப்பது. அப்படியிருக்க எனக்கு இவனிடத்தில் பிரியமும் ஏனைய ஆடுமுதலான ஜீவர்களிடத்து அப்பிரியமும் கிடையாது. இவனை நான் சத்தியமாகப் பலிகேட்டதேயில்லை. இவன் எனக்குப் பிரதிவருடமும் என் ஆலயத்தில் அபிடேக அலங்காரம் செய்து தேங்காய், பழம், பொங்கல் முதலானவைகளை வைத்து நிவேதிப்பான். இதுதான் எனக்குச்செய்வது; இவை தான் நான் அறிவேன். பிறகு என் கோயிற்கதவைச் சாத்திவிடுவார்கள். அதன் பிறகு எனக்கு ஒன்றும் தெரியாது. ஓ தருமராஜனே! மதுமாமிசத்தையும், கொலையையும் விரும்புவது ஓர் தெய்வமாகுமா? இவைகளெல்லாம் தாங்கள் அறியாதவையா? இக்கொலைஞனுக்கு அறிவுறுத்த வேண்டியன்றோ என்னை இங்கு வரவழைத்தது? இவன் குற்றத்துக்குத் தக்கபடித்தண்டியுங்க"ளென்று சொல்லித் தருமனிடம் உத்தரவுபெற்றுப் போய்விட்டது. பிறகு தருமன் உத்தரவுப்படித் தூதர்கள் அக்கொடியவனை இருபத்தெட்டுக் கோடி நரகங்களிலும் புகுத்தி வருத்துவாராயினர். அன்றியும், பல சிவாலயங்களுக்கும் திருப்பதிமுதலான விஷ்ணுஆலயங்களுக்கும் இடபப் பிரார்த்தனை செய்துவிடுகிறார்கள். அவ்விடபங்கள் ஆலயத்திலிருந்தாலும் வெளியிலிருந்தாலும் பார்ப்பவர்களெல்லாம் அதற்குப் பிரியத்தோடு ஆகாரம் முதலானதும் கொடுக்கிறார்கள். இது தவிர, வேறு இம்சையான காரியம் செய்கிறவர்கள் ஒருவருமில்லை. இதுபோலப் பிடாரி முதலான தெய்வங்களுக்குப் பிரார்த்தனை செய்த ஆடு முதலான

வைகளை என்மேற்சொன்ன வண்ணம் செய்யப்படாது? இப்படிச் செய்வதுதான் பிரார்த்தனைக் கழகாகும்.

வினு:—இப்பிறப்பில் ஒருவன் தேவதைகளுக்கு ஆலயத்தில் ஆடு முதலானவைகளைப் பலியிடுவானுனல் மறுபிறப்பில் அவ்வாலயத்தில் முன்பலி யிடப்பட்ட பிராணிகளால் இவன் பலியடைவான் என்பது உண்மையா ?

விடை :—ஆம், அடைவான். இதற்குத் திருட்டாந்தமாக ஒரு சரிதையுண்டு. பக்த விஜயம் கபீர்வாக்கு: நேபாள நகரத்துக்கடுத்த ஓர் பட்டணம் உண்டு. அதற்கரசன் அபிமச்சன். அவ்வரசனும் மந்திரியும் தங்களிஷ்ட காமியார்த்தத்தை முடிக்க வேண்டித் தங்கள் நகரத்துக்கிருகாததூரத்திலுள்ள பத்திரகாளி கோயிலில் அர்த்தராத்திரியில் சென்று பிரார்த்தித்து வந்தனர். இப்படி நெடு நாள் செய்துவர, ஒரு நாள் காளி பிரசன்னமாகி எனக்கு ஒரு நரபலி கொடுப்பீரானுல் உங்களிஷ்ட காமியார்த்தம் முடியுமென்றுள். பிறகு இருவரும் யோசித்துப் பலிக்கு அவ்விரவில் அங்கொருவருமில்லாமையால் அக்காளியை அர்ச்சனை செய்யும் கிழப்பிராமணனைப் பலியிடுவோமென்று அவரை யழைத்து, "ஐயா! உமக்கு வயோதிகம் வந்துவிட்டது,இப்பலிக்கு ஒத்துக் கொள்ளும், உமது புத்ரர்களுக்கு எமது நகரத்தில் பாதி தருகிறோ"மென்று சொல்ல, அதைக்கேட்ட அந்தணன் தனக்கு முடிவுகாலம் வந்ததென்று நிச்சயித்து, ஆனுலும் நெடுநாளாய்ப் பூசித்துவரும் என்னைத்தான இக்காளி பலிகொள்ள வேண்டுமென்று சந்நிதானத்தில் போய்க் காளியின் கன்னத்திலறைந்து

நீயுமுன் கோயிலும் பழாய்ப்போக, ஏழாண்டு முதல் எழுபதாண்டு வரையில் பூசித்த என்னைத்தானு பலி கொள்ள ஆலோசித்தாயென்று அலறும்போது, காளி பிரசன்னமாகி, "ஓ பிராமணு! நானிதற்கென்னசெய் வது. நீ முற்பிறப்பில் சூத்தானுயிருந்து உன்னிஷ்ட காமியார்த்தமாய் இரண்டாடுகளைக் கொண்டுவந்து என்முன் நிறுத்திவாளாலிரண்டையும் ஒரே வெட்டாய் வெட்டி மடித்தாய். அவையிரண்டு மிப்பிறப்பில் இவ் வூருக்கு அரசனு மமைச்சனுமாகி உன்னை வெட் டத்துணிந்தன. அவர்களிவரும் இப்போது ஏககாலத் தில் உன்னைப் பலி கொடுக்காவிடில், இன்னமோர் ஜன்மமெடுத்து மறுபடியும் பலியாகவேண்டியதாய் நேரிடும். நீ முற்பிறப்பில் செய்தபழி இப்பிறப்பில் வந்துனக்குச் சம்பவித்தது. அதற்கு நான் என்ன செய்வது? என்னை வெறுக்காதே" என்று சொல்லி மறைந்தருளினுள். உடனே பிராமணன் அவர்களிடம் வந்து நீங்களிருவரும் ஏககாலத்தில் என்னை வெட் டுங்களென்ன, ராஜமந்திரிகளிருவரும் பிராமணனைக் கொலைசெய்யும் தோஷம் தங்களைச் சாராவண்ணம் பத்ரகாளியால் மீண்டும் எழுப்பிக் கொள்வே மென்று யோசனைசெய்து கொண்டு பிராமணனை இரு வரும் ஒரேவெட்டாய் வெட்டிக் காளியைத்துதிக்க, உடனே காளி பிரசன்னமாகி உங்களுக்கு வேண்டும் வரங்களைக் கேளுங்களென, அரசன் கிழப்பிராமணனை யெழுப்பித்தரல் வேண்டுமென்றும், மந்திரி இஷ்ட காமியார்த்தம் வேண்டுமென்றும், அம்மனைப்பணிய, அவ்விருவருக்கும் அவ்வரங்களைக் கொடுத்ததுமன்றி

இன்னும் வேண்டும் வரங்களையுங் கொடுத்துக் காளி மறைந்தனிள். பிறகு அம்மூவரும் சந்தோஷத்தோடு நகரம் வந்துசேர்ந்து, யாராவது தம்நாட்டில் ஒருஜீவஹிம்சை செய்வார்களானல் அவர்களைப் பத்ரகாளிகோயிலில் கொண்டுபோய்ப் பலியிடுவமென்று பறையறைவித்துத் தம்நாடு முற்றும் ஜீவகாருண்ய விரதத்தைச்செலுத்தி அந்தியத்தில் மூவரும்மோக்ஷமடைந்தார்கள். அந்தப் பத்ரகாளி ராஜமந்திரிகளை நரபலி கேட்டகாரணம் என்னெனில், முற்பிறப்பின் செய்கை இம்மூவர்களும் அறியார்களாகையால் அவர்களுக்கு அதை விளக்கிப் பழிக்குப் பழி முடிப்பதற்கேயாம். அதன்றியும், அவ்வரசன் விதித்த கட்டளையால் அந்நகரத்துள்ளார் யாதொரு ஜீவக்கொலையும் செய்யாமல் அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடந்ததுபோலத் தற்காலம் அரசுபுரியும் அரசர் அவ்வகைப்பட்ட ஓர் சட்டம் ஏற்படுத்துவார்களானல் யாவரும் அதே வண்ணம் கீழ்ப்படிந்து நடப்பார்கள். நம் நாடும் ஜீவகாருண்யம் நிறைந்த புண்ணியபூமியாக விளங்கும். எல்லாம்வல்ல இறைவன் நம்மரசனுக்கு இவ்வகைப்பட்டசட்டம் ஏற்படுத்தும்படி அருள்புரிவாரென்று நாம் பன்முறையும் பிரார்த்திக்கின்றோம்.

வின:—உயர்குலத்துப் பிறந்தானெருவன் கொலைசெய்பவனைப் பார்ப்பதாலும் அவனுக்கு ஏதேனும் உதவி செய்வதாலும் அவனடையும் பலன் என்ன?

விடை:—அதனல் தானும் பெருந்துன்பத்தை அடைவன். இதற்குத் திருட்டாந்தமாக ஓர் சரித முண்டு.

**பக்த விஜயம்:** சஜ்ஜனசாருகர் என்றவர் இல்லறத்திலே ஒழுகுபவர். இவர் ஜகந்நாத யாத்திரை போகும் வழியில் சூரியன் அஸ்தமிக்க, ஓர் ஊரில் தங்கினர். அங்கொரு விபசாரி இவரழகைக்கண்டு மோகங்கொண்டு அவராகாரத்திற்கு வேண்டிய ஏற்பாடுசெய்து போஜனம் முடிந்தபின், அவ்வீட்டுரேழியில் நித்திரை செய்தார். அம்மாதானவள் நடுநிசியில்வந்து தன்னைச் சேரும்படிக் குறிப்பிட்டாள். அதற்கு அவர் பயந்து பெண்ணே, இதுதகாது, உன்நாயகனேடு கூடிச்சுகித்திருவென, அவளதைக்கேட்டு தன் நாயகன் தலையையரிந்து வந்து தாசரெதிர்வைத்து இவனிறந்துவிட்டான், இப்போதென்னைச் சேரவேண்டுமென, அதையவர் கண்டு இவள் மாபாவியென்று அவ்விடம் விட்டு வெளிப்பட, அவள் நீ என்னிஷ்டப்படி நடவாததால் உன்னைக் கொல்லுவிக்கிறேனெனச் சொல்லித் தெருவில் வந்து இன்றிரவு என் வீட்டில் சமையல் செய்து சாப்பிட்டுப் படுத்திருந்து அர்த்தராத்திரியில் என் புருஷனைக்கொன்றுவிட்டுப் போகிருனென்று கூக்குரலிட, அவ்வூரார் அவரை அரசனிடம் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். அரசனம்மாது வாக்கியங்கேட்டு தாசரிருகரங்களையும் வெட்டிவிட்டான். பிறகு தாசர் ஜகந்நாதயாத்திரைக்குப் புறப்பட்டுச் செல்ல வழியில் சூரியன் அஸ்தமிக்க, அடுத்த ஓர் ஊரில் தங்கினர். அன்றிரவு ஜகந்நாதப் பெருமான், அர்ச்சகர், தருமகர்த்தர் முதலானவர்கள் கனவில் தோன்றி நம்மன்பன் சஜ்ஜனசாருகன் இவ்வூருக்குச் சமீபம் வந்திருக்கி

ருன், அவனை நீங்கள் போய்ப் பல்லக்கிலழைத்துக் கொண்டுவாருங்களென, அவர்களப்படியே சென்று, தாசரைவணங்கிப், பல்லக்கி லெழுந்தருள வேண்டும், இது ஜகந்நாதப்பெருமான் கட்டளையென்று சொல்ல, தாசர் கண்களில் ஜலம் பெருக, பகவானைப் பலவாறு தோத்திரம்செய்து நானோரபராதமுஞ் செய்யாதிருக்க அரசனைக்கொண் டென்கரங்களை யறுக்கும் படிச் செய்தீர். ஆபத்சகாயனென்னும் பேர் நான் கண்டிலேன். அப்படியிருக்க இப்போது பல்லக்கும் மற்று முண்டான விருதுகளெதற்கென்று பிரலாபித்துத் துக்கப்படப், பகவான் மனமிரங்கிப் பிரத்தியட்சமானார். உடனே அவரிரண்டு கரங்களும் வளர்ந்தன. அவர் பகவான் திருவடிகளில் சாட்டாங்கமாக வணங்க அவரை ஜகந்நாதப் பெருமானெடுத்து மார்போடணைத்துக் கொண்டார். அப்போதவர் பகவானைப் பார்த்து, நானொருவருக்கு மொருதீங்குஞ் செய்யவில்லையே, அப்படியிருக்க என்கையறு படும்படிச் செய்தாயே, இதுதானோ தாசரிடத்து வைக்கும் கருணை யென, அதற்குப் பகவான் சொல்வதாவது: நீ பூர்வ ஜன்மத்திலோர் பிராமணன்; ஓர் நாள் கங்காநதியில் மூழ்கி அந்நதிக்கரையி லென்னைத் தியானித்துக் கொண்டிருந்தாய். அப்போதொரு கொலையாளி கொல்லும் பொருட்டுக் கட்டிவைத்திருந்த ஓர் பசுவான தறுத்துக் கொண்டுவர, அவனதைத்தேடிக் கொண்டவ்வழியாய் வந்துன்னைக் கேட்டான். அப்போது, நீ வாயால் சொல்லாமற்போனாலு மிவ்வழி

யாகப் போயிற் றென்று இருகாங்களையுஞ் சுட்டிக் காட்டினுய். அப்படியே அவன்போய், பசுவைப் பிடித்துக் கொலைசெய்தான். அக்கொலை செய்தவன டுத்த பிறவியில், நாயகனுகவும் கொலையுண்ட பசு பத் தினியாகவும் ஜனித்து இல்லறத்தை நடத்தினுர்கள். அன்றவ ளுன்மீது மோகங்கொண்டு முன் ஜன்மத்தில் தன்னைக் கொன்றபழிக்குப் பழி இப்பிறப்பில் நாயக ளுக வந்தவனைக் கொலை செய்தாள். நீ அப்போது இருகரங்களாலும் பசு சென்றவழியைக் காண்பித்த தால், அவளரசனைக் கொண்டு உன்னிருகாங்களையுந் துணிப்பித்தாள். என்னைத் தியானிக்குங் காலத்தில் கொலைஞனைக் கண்டபாவத்தால் இப்பிறப்பில் தாழ்ந்த வருணமாகிய சாருகனுய்ப் பிறந்தாய். ஆனுலுமுன் தபோபலத்தால் உனக்குத் தரிசனம் கொடுத்தே னென்று சொல்லிப் பகவான் மறைந்தருளினுர். பிறகு ஜகந்நாதஞ் சென்று பகவானைத் தரிசித்துத் தம் பதி வந்து சேர்ந்தார். இதனுல் உயர்ந்த வருணத்தில் பிறந்து பகவத்தியானத்தில் கொலைஞனைப் பார்த்தகி னுல் தாழ்ந்த ஜன்மமும், கொலைஞனுக்கு வழிகாட்டிய தால் கையறுப்புண்டும், பெருந்துன்பமனுபவிக்க நேர்ந்தது.

(இ. உ. ம்.)

கொல்லா விரத குலமே,குலமென்று
நல்லோர்க ளெல்லாம் நவின்றிருக்க—கொல்வார்
தரிசித்தா லும்பாவம் தீயன்முக நோக்கிப்
பரிசித்தா லும்பாவம் பார்.

—சிவஞான வள்ளல்.

தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார் சொற்கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது. —ஔவையார்.

எனும் ஆன்றோர் வாக்கே சான்றாகும்.

வினா:—'அண்ணாமலையா ரருள்பெற்றாரை மன்னார்சாமி ஒன்றும் செய்யாதென' உலகத்தார் சொல்லும் வார்த்தையின் கருத்தென்ன?

விடை:—ஈச்வரானுக்கிரகத்தைப் பெற்ற வடியவர்கட்குச் சிறுதெய்வங்களா லாகவேண்டிய காரிய மொன்று மில்லை. அத்தெய்வங்க ளிவர்களைக் கண்டமாத்திரத்தி லஞ்சுந் தன்மையுள்ளவை. ஆனால் அத்தெய்வங்கட்கு விபத்து வருங்காலத்து இவர்களைப் பணிந்து இவர்கள் மூலமாகத் தங்கள் துக்கத்தை மாற்றிக் கொள்ளும். இதற்குத் திருட்டாந்தமாக விருத்தாசலத்தில் பெரியநாயகியார் திருவருட் பிரசாதத்தைப் பரிபூரணமாய்ப் பெற்றுள்ள குமாரதேவ ரென்னும் பெரியாரெழுந்தருளி யிருக்குங்காலத்து அவ்வூர்ப் பத்ரகாளி பால்ய மங்கையுருவந் தாங்கி, அவர்பால்வந்து பணிய, அதுகண்ட சுவாமிகள் நீயாரென்று வினவ, நானிவ்வூர் பத்ரகாளி யென்று கூற, நம்மாலுனக்காக வேண்டுவதென்னென, சுவாமி, ஓர் மாந்திரீகன் இன்றிரவு என்னை வசப்படுத்தித் தன்னூர் கொண்டு போக வந்திருக்கிறான், ஆனதால் அதற்குப் பயந்து தங்களிடம் வந்தேன் தாங்களின்றிரவு எனது கோயி

லில்வந்து என் சிரசின்மீது தங்கள் பாதத்தைவைத்த ருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்வாறே ஆலயஞ் சென்று சுவாமிகள் செய்ய, மாந்திரீகன் வந்து மந்திர உச்சாடனஞ்செய்ய, அவன் கண்ணிரண்டும் பொட் டென அவிந்தன. உடனே மாந்திரீகன் மிகவும் பீதி யடைந்து பொழுது விடிந்ததும் இவ்வூரில் பெரியா ருளரோ என்று விசாரிக்க, குமாரதேவர் பெருமையை அவணுற்றூர் சொல்ல, உடனே அவன் அவர்பாற் சென்று பாதத்தில் விழுந்து நமஸ்கரித்துத் தன்தவறு தல் சொல்லி மன்னித்தருள வேண்டுமென்று பிரார்த் தித்துச் சுவாமிகள் திருவடிசாட்சியாக மாந்திரீகத்தை விட்டேனென்று சத்தியம் செய்து கொடுக்க, சுவாமி கள் கிருபை கூர்ந்து ஒருகண் தெரியும்படி அவனுக் கனுக்கிரகித்தார். இப்பெரியார் சரித்திரத்தின் கருத்து தான் உலகத்தார் சொல்லுங் கருத்தாகும்.

வினு.—சிவபெருமான் பெருமையையும், அவனடியார்கள் பெருமையையும், ஆசாரியர் பெருமையையு மறிந்து அவர்களுக்கு வந்தனை வழிபாடு செய்யாத மூடஜனங் களை இச்சிறு தெய்வங்கள் என்ன செய்கின்றன ?

விடை. — அவர்கள் இனிமேலாகிலும் நல்லறிவைப் பொருந்தி, குருலிங்க சங்கமத்தை வழிபட்டு நற்கதி யடையும் பொருட்டு அத்தெய்வங்கள் அவர்கட்குத் தண்டனை விதிக்கின்றன.

அவை வருமாறு:—

பாம்புசேர் தோளிணையாள் பாலையத்து மாமாரி
சாம்பசிவன் றன்னடியைச் சாராரை - வேம்பி

ணிலையை உடுத்தியவ ரீனம்மா னம்போக்கித்
தலையில்விளக் கேற்றிவைப்பா டான்.

என்று சிவப்பிரகாச சுவாமிகளும்,

ஆண்டகுரு வைச்சிவனை யறியாத மானிடரைத்
தூண்டி விடவொருத்தித் தோன்றினாள்—நீண்ட்புகழ்
திக்கெல்லாம் போற்றுதிரு வண்ணா மலைவாழு
மெக்கலா தேவி யிவள்.

என்றும் குரு நமச்சிவாய தேவரும் அருளியதால் விளங்கும். இவற்றுள் முதற் பாட்டில் சொன்னது வேப்பிலையின் ஆடை உடுத்தல், தலையில் விளக்கேற்றுதல் என்பவையாம்.

இரண்டாவது செய்யுளில் தூண்டிவிடுதலாவது செடல் குத்தல் என்பதாம்.

இதுவன்றியும் கொலைசெய்யும் பாதகர்கள் சிறுதெய்வ மென்று பல பெயரிட்டுக் கொலை செய்வதற்கு, ஆடு, பன்றி, கோழி, கடாமுதலிய உயிர்களைக்கொண்டு போகுங்காலத்தும் அவ்வகைப்பட்ட கொலைசெய்யும் கோயிலைக் கண்ட காலத்தும் மனம்நொந்து உளம் நடுக்குற்று மிகவும் பயந்ததாக ஆன்றோர்கள் கூறியுள்ளார்கள். உதாரணம்: திருவருட்பிரகாசவள்ளலார், சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்,

"நலிதரு சிறியதெய்வ மென்றையோ
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர வாடுபன்றி குக்குடங்கள்
பலிக்கடா முதலிய வுயிரைப்

பொலிவுறக் கொண்டே போவதுங்கண்டே
புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறியதெய்வ வெங்கோயில்
கண்ட காலத்திலும் பயந்தேன்”

எனக் கூறியது காண்க.

இன்னும் ஆன்றோர் வாக்குக்களால் சிவபெருமான் திருவருளைப் பெறுவதே மேலானதென்று நமக்கு நன்கு விளங்குகின்றது.

சீவகாருண்யஞ் சிறந்து விளங்குஞ் சீரியர்காள்! தவசிரேட்டராயும் சாபானுக்கிரக சாமர்த்திய முடைய ராயுமுள்ள மாண்டவ்ய முனிவரை அரசன் கழுவேற்றியது, முற்பிறப்பில் பரிபூரணவறிவு நிரம்பாத சிறுவயதில் ஓர் தும்பியைப் பிடித்து அதன் வாலில் ஒரு சிறு துரும்பைச் சொருகிப் பறக்கவிட்டு வேடிக்கைப் பார்த்தது என்று சொன்னால், நிரபராதியான உயிர்களைக் கொலைசெய்யும் பாதகர்கள் தேகாந்தியத்திலும் மறுமையிலும் அடையும் துக்கம் யாவரால் சொல்ல முடியும்? சிறு தெய்வங்களைப் போலி முன்னிலையாகக்கொண்டு பலி நடத்தும் ஆலயங்கள் சென்னைக் கடுத்தவை பெரியபாளையம், ஊத்துக்காடு, மலையனூர், விருத்தாஜலத்துக் கடுத்த மாடுவெட்டிமங்கலம்பேட்டை, கோயமுத்தூர் ஜில்லாவிலுள்ள நாட்டாரயன்கோயில். இவை போல ஆடு, பன்றி, கோழி, எருமைக் கடாக்களைப் பலியிடும் ஆலயங்களுக்கு உலகத்தில் இவ்வளவென்று கணக்கேயில்லை. இவர்கள் நாய், கழுதை, குரங்கு முதலானவைகளை யேன் பலியிடுவதில்லை? யோசிக்குமிடத்தில் அவைகளின்

மாமிசம் தமக்குப் பிரயோசனப்படாது என்று கருதி விட்டு விட்டார் போலும்! ஆனதால் ஜீவகாருண்யமுள்ள அவ்வவ் வாலய தர்மகர்த்தர்கள் உயிர்க் கொலையை நிறுத்தி, ஆல யத்திலோர் உண்டி அமைத்துத் திருப்பதியில் உண்டி செலுத்துவதுபோலப் பிரார்த்தனைக்காரர் பொருளை உண்டியி விடும்படி செய்யவேண்டும். அத்தர்மகர்த்தர்கள் அப் பொருளை ஆலயத்திருப்பணி, ஏழைகளுக்கு அன்னமிடுதல் முதலிய நற்காரியங்களில் செலவழிப்பது நன்மையாகும்.

ஜீவகாருண்யம் சிறந்து விளங்கும் அன்பர்களுக்கு ஓர் ஞாபகம். ஒவ்வொரு ஜில்லா, தாலூக்கா, ஊர் முதலான விடங்களிலுள்ள பட்டக்காரர், பெரியதனக்காரர், நாட்டாண் மைக்காரர் முதலானவர்கள் தங்கள் அருமையான மனைவி, புத்திரர் முதலான பந்துக்களுக்கு வரும் துக்கத்தை நிவர்த் திக்க முயல்வதுபோல் மேற்சொன்ன ஆலயங்களுக்கு அன் பர்கள் பலரும் சென்று ஆலய தர்மகர்த்தர்கள் அவ்வூரார் முதலானவர்களைச் சேர்த்து அவர்களுக்கெல்லாம் நூற்பிர மாணமாக ஜீவகாருண்யத்தை விளங்கச்சொல்லி ஆலயங் களில் உயிர்ப்பலி இடவொட்டாமல் செய்தலே அவர்கள் முக்கிய கடமையாகும். அன்பர்களே! இவ்வுலகத்தார் சொல்லும் ஓர் பழமொழியை உங்களுக்கு ஞாபகப்படுத்து கிறேன். 'பத்துப்பேர் இருக்கு மிடத்துக்கு வந்த பாம் பும் சாவாது' என்பது பழமொழி. இப் பாம்போ கடித்தவுடனே விஷவேகத்தால் பிராணனைப் போக்கக் கூடிய கொடிய ஜந்து. அப்படியிருந்தும் பத்துப்பேர் நிறைந்த சபையில் அது வந்ததானல் அங்குள்ளாரில் சிலர் அதை அடிக்க உத்தேசிப்பார்கள். வேறு சிலர் வேண்

டாம் அது நம்மை யொன்றும் செய்யவில்லையே யென்று சொல்லி அதை வெளியே ஓட்டிவிடுவார்கள். இதுபற்றியே தான் முன் உலக வார்த்தை அவ்வாறு நிகழ்ந்தது.

இப்படியிருக்க, மிக்க சாதுவாயும், உபகாரமுடைய வாயுமிருக்கும் ஆடு, பன்றி, கோழி, எருமைக்கடாக்களை ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருக்கும் தெய்வ ஆலயத்தின்முன் அவற்றின் உயிர்களைப் போக்கலாமா? ஜீவ காருண்யமுடைய அன்பர்கள் பலரும் அக்கொலையைத் தடுக்காமல் அதனுவியைப் போக்கப் பார்க்கலாமா? அந்தோ பரிதாபம்! அப்பிராணிகள் இவ்வண்ணமன்றோ சொல்லித் துக்கப்படுகின்றன:

(இ - உ - ம்.)

“ தங்கண்மக்களும் தாங்களும் படுதுயர் தமக்கோர்
எங்கண்மக்களும் யாங்களு மென்செய்தோ மினிமேல்
எங்கண்மக்களும் யாங்களு மின்றுறு துயரைத்
தங்கண்மக்களுந் தாங்களும் படுவர் சத்தியமே ”

—விவேகசிந்தாமணி.

கொலைசெய்வோர் பழிக்குப் பழி கொலையுறுவ ரென்பதற்கு இந்நூலில் பல திருட்டாந்தங்கள் உள. தேவதைகளைப் போலி முன்னிலையாகக்கொண்டு ஆலயத்தில் பல நூற்றுக் கணக்காகப் பலியிடும் அன்பர்களுக்கு ஓர் சட்டம் ஞாபகப் படுத்துவோம். ஆலயத்தும், வேறிடங்களிலும் எருமைக் கடா, ஆடு, பன்றி, கோழி முதலானவைகளைக் கொலை செய் வாராயின் அவர்களுக்கு முறையே மரண தண்டனை, பத்து வருடம், எட்டுவருடம், ஐந்துவருடம் கடுங்காவல் செய்வ தென்று நம்மன்னர் ஓர் சட்டம் ஏற்படுத்தி, அவ்வண்ணமே

ஆலயம் முதலான விடங்களில் போலீஸ் காவலும் இருந்தால் யாராவது மேற்சொல்லப்பட்ட இஃவகைப் பிராணிகளில் ஒன்றையாவது ஓரிடத்திலாவது கொலைசெய்வார்களா? செய்யவேமாட்டார்கள். ஏனெனில், மரணதண்டனை, கடுங்காவல் முதலான துக்கங்களுக்குப் பயந்து, நமது இந்துதேசத்திற் பிறந்து ஜீவகாருண்யம் நிறைந்துள்ள நமது ஆன்ம நேய சோதரர்களுக்கு இவ்வகைப்பட்ட ராஜதண்டனையே வேண்டுவதில்லை. 'சொல்லப்பயன்படுவர் சான்றோர்' என்னும் பெருந்தன்மையுடையவர் இவர்கள். நமது இந்து சமயத்துக்குரிய, திருக்குறள், நாலடியார், பெரியபுராணம், திருவிளையாடல், சிவதருமோத்தரம் முதலான பல நூல்களாகிய சட்டங்களில் கொலை செய்பவனுக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

ஆனதால் பட்டக்காரர், பெரியதனக்காரர் முதலானவர்களெல்லாம் நமது இந்து சட்டமாகிய ஜீவகாருண்யத்தை அவர்களுக்குப்போதித்து, எவ்விடங்களிலும் அவர்கள் கொலைசெய்யாதிருக்கும்படி செய்யவேண்டுமென்று உங்களை மன்றாடி மிக்க வந்தனத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஸ்ரீராமர் வாலியை ம்றைந்து கொலைசெய்த தோஷமானது மறுபிறப்பில் ஸ்ரீராமர் கண்ணபிரானாகப் பிறந்து, வாலி வேடுவனாகப் பிறந்து முன்செய்த பழிக்குப் பழி கண்ணபிரான்மீது வேடுவனாகிய வாலி அம்பெய்து கொலை செய்தானென்றால், கொலைசெய்யும் பழிக்குப்பழி யாவரை விடும்?

(இ - உ - ம்)

" பிறர்க்கின்னா முற்பகல் செய்யின்
தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்" —திருக்குறள்.

வினா :—இக்காலத்தில் பசுக்கள் எருதுகள் முதலியவைகளைக் கொலை செய்கிறார்களே, அது சரியானதா?

விடை :—அது கெடுதியான காரியந்தான். ஆனால் தற்காலம் அரசுபுரியும் நம்மரசர் கொலை செய்யப்படாதென்னும் ஓர் சட்ட மேற்படுத்தாமையாலது நடந்துவருகின்றது.

வினா:—ஆனால் முற்காலத்து அரசர், பசுக்கொலை செய்தவர்களுக்குத் தண்டனை செய்ததுண்டோ ?

விடை :—உண்டு. பேரியபுராணம். மனுச்சோழர், திருவாரூரை ராஜதானியாகக்கொண்டு உலகத்தை அரசுபுரிந்தவர். அவர்க்குப் பிறந்த ஓர் அருமைச்சுதன் வீதிவிடங்கனென்னும் பெயர்பூண்டு வளர்ந்து வருங்காலத்து, ஓர்தினம் இரதமேறிப் பலருந் தன்னைச்சூழ வீதிவலம் வருங்காலத்து ஓர் பசுவி னிளங்கன்றானது ஓடிவந்து தவறிச் சக்கரத்தி லகப்பட்டுக்கொள்ள இரதம் போனவேகத்தால், கன் றிறந்துவிடவும் தாய்ப் பசுவானது கதறியழுது அரசன் மாளிகைக்குப் போய் ராஜசபையில் கட்டியிருக்கு மாராய்ச்சி மணியைக் கோட்டா லசைத்தடிக்கச், சத்தங்கேட்ட மனுச்சோழர் வந்து பசு படுந்துயரத்தைக் கண்ணுற்று, நடந்த செய்தியை விசாரித்துத் தெரிந்துகொண்டு உடனே ஒரு மந்திரியையேவி, பசுக்கன் றிறந்துபோன விடத்தில் தம்புத்திரனைக் கொலைசெய்து வரும்படி யனுப்ப,

அவர் அரசகுமாரனைக் கொல்லாது தம்முயிரைப் போக்கிக்கொள்ள, அதைக் கேள்வியுற்ற மன்னர் பசுக்கன்றி னுயிருக்குப் புத்திரனுயிரும், மந்திரியுயி ருக்குத் தன்னுயிருங் கொடுப்பதென்று சொல்லிப் புறப்பட்டுப் பசுக்கன் றிறந்தவிடத்துக்குப் போய், ஒருமைந்தன் தன் குலத்துக்குள்ளா னென்பதும் நினை யாமல் தருமந் தன்வழிச்செல்லுதலே கடமையென்று கண்ணுறும் மண்ணவர் கண்மழை பொழியத் தன்ன ருஞ் சுதனைத் தேர்ச் சக்கரத்தின் கீழிருத்தித் தானே ரதத்தை மேலூர்ந்தார். இவ்வருமந்த செய்கைக்கு விண்ணவர் பூமழை பொழிந்தனர். அக்கணமே 'அண் ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடைமேல், விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங்கப் பெரு மான்'. அப்போதே பசுவின் கன்றும் பார்த்திபன் சுத னும் மந்திரியு முயிர்பெற் றெழுந்தனர். மன்னர் பெரு மான் பரசிவப்பிரபுவைப் பலவாறு தோத்தரித்துக் களிக்கட லுளாழ்ந்தனர். இவர் பசுக்கன்றி னுயிரை யும், தம் புத்திரனுயிரையும் சமரசமாகப் பார்த்து நடந் ததனுல் சர்வலோக நாயகராகிய சிவபெருமா னிவர்க் குத் தரிசனமுங் கொடுத்து இவர் குறைகளையும் நீக்கி னார். இவரைப்போல நாமெல்லா வுயிர்களிடத்தும் சம ரசமாகச் சீவகாருண்யத்தைச் செலுத்துவோ மானல் நமக்கு யாதொரு குறையும் வாராமல் சிவபிரான் றிரு வருள் செய்வது சத்தியம்.

'கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே'

என்றார் த்ாயுமானவரும்.

தற்காலம் திருவனந்தபுரம் இராணியவர்களும் ஆலயங்களிலும், பொதுஸ்தானங்களிலும் உயிர்ப்பலியிடுதல் கூடாதென ஓர்சட்ட மேற்படுத்தி யிருப்பதாகத் தெரிகிறது.

ஆனாலும், இக்காலத்தில் மகாத்மா காந்தியவர்கள் மகம்மதியர்கள் வெகுகாலமாக நடத்திவந்த பசுக்கொலைகளைப் பலவிடங்களிலும் நிறுத்திவிட்டதாகவுமேற்படுகிறது. அல்லாமலு மிந்துதேசம் சிறப்படைய வேண்டுமென்றும், நம்மவர்கள் சகல சுதந்தரமும் பெற்று உயர்வடையவேண்டுமென்றுங் கருதி டில்லி, சென்னை மாகாணம் முதலிய சட்டசபைக்குச் செல்லும் அறிவாளரும் கல்வி கேள்விகளிற் சிறந்தவரும் கன தனவான்களுமாகிய அங்கத்தினர்கள் இந்து தேசத்துக்கு அவர் செய்யும் முதல்நன்மை யாதெனில், இத்தேசத்தில் பசுக்கள் எருது முதலியவைகளை யாவரும் கொலைசெய்யா திருக்கும்படி எல்லாரு மொருங்கேபேசி ஓர் சட்ட மேற்படுத்துவதே முக்கிய கடமையாகும்.

வினா :—சிலர் ஆடுகளை மந்தைமந்தையாய் வளர்க்கிறார்களே அது பாவந் தருவதா, புண்ணியந் தருவதா ?

விடை:—ஆடுகளை வளர்ப்பவர் வளர்த்துப் பிறகு கொலை செய்பவனுக்கு விற்கிறார்கள். ஆனதால் கொலைக்கு முதற்காரணமாக இருப்பவர்கள் இவர்களே. இதற்குத் திருஷ்டாந்தமாக ஓர் சரிதம்: அருகர் நிறைந்துள்ள ஓர் ஊரில் ஒருவன், ஓர் மேடத்தின் குட்டி வாங்கி வேறொரு குடியானவனிடத்துவிட்டு வளர்த்து வந்தான். அதையறிந்து அவன் பந்துக்கள் அவர்கள் குருவைத் தருவித்து ஓர் கூட்டம்போட்டு அவனை விசாரித்ததில் உண்மை விளங்கிற்று. உடனே ஆசாரி

யர் கொலைக்கு ஏதுவாக ஓர் ஆடுவாங்கிவிட்டு வளர்த்த தனால் அவனுக்கு இருநூறுவராகன் அபராதம் விதித் தார். மீண்டும் கொலைத்தொழிலுக்கு அவன் முன்னி லையாய் நின்றதால் பந்துக்களோடு சேர்வதற்கு நூறு வராகனபராதம்விதித்து அதைக்கொண்டு பிராயச்சித் தஞ்செய்து அவனைப் பந்துக்களில் சேர்த்துக்கொண் டார்கள். ஒரு சீவக்கொலைக்கு ஏதுவாக நின்றவனு க்கு இவ்வளவு அபராதம் விதித்துச் சேர்த்துக்கொண் டார்கள். நம் சமயத்துக்குப் புறம்பாகிய சமண்சமயத் தவர் இவ்வண்ணம் நடந்தார்களென்றால் சீவகாருண் யம் நிறைந்துள்ள சைவசமயம், விஷ்ணுசமயம் முத லான சமயங்களிற் பிறந்த நம்மவர்களிற் சிலர் மந்தை மந்தையாக ஆடுகளை வளர்த்துப் பிரதிவருடங்களிலும் கொலைத்தொழில் செய்பவனுக்கு விற்கிறார்கள். ஈசுர பத்தியிற்சிறந்து, உயர்ந்த வருணத்திற் பிறந்தவர்களா கிய இவர்கள் செய்யும் காரியம் மிகவும் சிறப்புடை யது! கொலைசெய்யும் கொடியரும், புலாலைநுகரும் புலை யருஞ்சேரும் நரகத்தில் அவர்களுக்கு முன்னதாகவே சேரப்பட்டவர்கள் இப்புண்ணியவான்கள். ஓர் உயி ரைப் பிறகு கொலைசெய்வதற்காக முன்னம் வளர்ப்பது பாவமென்பதற்குப் பிரமாணம்.

அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றங்
கொலைப்பாலிற் கொண்டூன் மிசைத்தலுங் குற்றஞ்
சொலற்பால வல்லாத சொல்லுதலும் குற்றம்
கொலைப்பாலும் குற்றமே யாம்.

—நான்மணிக்கடிகை.

வினு :—சிலர் வியாபாரமூலமாக எருதுகளையும் பசுக்களையும் வாங்கிப் பலதேசங்களுக்குக் கொலைக்காரணமாக அனுப்பி விற்பனை செய்துவருகின்றார்களே, ஈதென்ன நற்காரியமா ?

விடை :—அந்தோ பாவம்! இது மிகவும் கொடுஞ்செயல். எருதுகள், பசுக்கள் முதலானவைகளை வளர்த்துக் கொலை நிமித்தமாக விற்பவரும், அதை வாங்கிக் கொலை முன்னிலையாக வியாபாரஞ் செய்பவரும், சீவகாருண்யமில்லாத கொடியவராகின்றார்கள். இவர்கள் ஈசுவரனை மனோவாக்குக் காயங்களால் எப்போதும் வழிபடினும் சோடசதானம், முப்பத்திரண்டு தருமங்களைச் செய்தாலும் இப்பாதகர்களடைவது நரகமே. இது சத்தியம்.

(இ - உ - ம்.)

சீவகா ருண்யமில்லார் செயுந்தவ மவமாய்ப் போகும்
சீவகா ருண்யமில்லார் செயுமறம் மறம தாகும்
சீவகா ருண்யமில்லார் சேருவ ரந்த காரம்
சீவகா ருண்யமில்லார் தீமைசெய் நிருத ராமே.

—பக்தவிஜயம்.

இன்னமும் சீவகாருண்யமில்லாதவர்கள் சகல சாஸ்திரங்களையும் ஐயந் திரிபறக் கற்றபோதிலும், பெருமையில் உயர்ந்தவராயினும், மனோமயக்க மொழிந்த ஞானிகளாயினும், உலகமெல்லாம் புகழ வரையாது கொடுக்கும் வள்ளியராயினும் எழுவகையான நரகங்களை யடைவது சத்தியம்.

(இ - உ - ம்.)

கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தா னேனும்
மலையென வுயர்ந்தா னேனு மனமய லகன்று னேனு

முலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய கைய னேனும்
இலகிய விரக்க மின்றே லெழுநர கடைவ னன்றே.

—சிவஞானவள்ளலார்.

என்னும் சுருதிப் பிரமாணமும் இதற்குச் சான்ருகும்.

வினு :—விவசாயம், வர்த்தகம் செய்பவர்களிற் சிலர், உழவுத் தொழிலுக்குரிய எருதுகள், கடாக்கள் முதலியவைகளை உழுதல், வண்டியோட்டுதல் முதலான தொழில்களைச் செய்து அதனுல்வரும் பலனையடைந்து வயோதிகத்தில் அவைகளைக் காப்பாற்ருமல் சொற்ப தொகைக்குக் கொலைசெய்பவனிடம் விற்றுவிடுகிருர்களே, அதெப்படி ?

விடை :—இது மிகவுங் கொடுமையான காரியம். செய்ந் நன்றி கொன்ற பாதகரில் இவர் முதன்மையானவர். இப்படிச் செய்பவர் இம்மையிலேயே பலவிதத் துன்பங்களை யடைந்து தேகாந்தியத்தில் சொல்லும்படியான இருபத்தெட்டுகோடி நரகங்களிலும் வருந்தி நரக சேடத்தால் மறுஜன்மத்தில் அவ்வெருது கடாக்களாகப் பிறந்து, சகல துக்கமு மனுபவித்து அவ்வண்ணமே கொலையடைவார்கள்.

(இ - உ - ம்.)

எந்நன்றி கொன்ருர்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. —திருக்குறள்.

என்னும் ஆன்ருேர் வாக்கே இதற்குச் சான்று.

வினு :—பசுக்களை நாம் எவ்வண்ணம் வைத்திருத்தல் வேண்டும் ?

விடை :—உலகத்தில் பசுக்களும், பிராமணர்களும் உயர்ந்தவர்களென்று பல நூல்களில் கூறியுள்ளது. அன்றியும் பசுவினது சரீரத்தில் சர்வதேவர்களும் வசிக்கின்றனர். ஆனதால் பசுவை நாமெல்லாம் போஷித்தும், பூசித்தும் வரவேண்டும். இவைதான் மேலான தர்மமாகும். இவ்வகையன்றிச் சிலர் பசுமாடுகளை ஏரிற்பூட்டி உழுவது கவலையடிப்பது முதலான தகாத காரியம் செய்கிறார்கள். இப்புண்ணியவான்கள் இம்மை மறுமையில் பலவகையான துயரங்களை யடைவார்.

வினா :—உலகத்தில் பாம்பு, தேள், செய்யான், பூரான், எலி, மூஷிகம் முதலானவைகள் வீட்டில் வந்துவிட்டால் அவைகளைக் கொலைசெய்யலாமா ?

விடை :—இவைகள் துஷ்டப்பிராணிகளே. ஆனாலும், இவைகள் வீட்டிலிருந்தால் நமக்கும் கெடுதியில்லாமல் அவைகளுக்கும் சீவஹிம்சையில்லாமல் பாம்புப் பிடாரனைக் கொண்டு அவைகளைப் பிடித்து ஊருக்குப் புறத்தில் கொண்டுபோய் விட்டுவிடலாம். எலி, பெருச்சாளி முதலானவைகளையும் பெரிய கூடு முதலானவைகளை வைத்துப்பிடித்து ஊருக்குப்புறத்தில் கொண்டுபோய் விட்டுவிடலாம். இப்படியே தங்கள் வீடுகளில் வந்த துஷ்டப்பிராணிகளைச் சமண் சமயத்தவர் அவைகளுக்கு யாதொரு உபத்திரவம் இல்லாமல் மேற்சொன்னபடி செய்வதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள். நம்மவர்களும் இவர்களைப்போலவே செய்வது உசிதமாகும். எந்தத் துஷ்டப் பிராணியாயிருந்தாலும் ஈசுர நியமமின்றி யாருக்கும் ஒருகெடுதியும் செய்யமாட்டா.

'சிவபிரான் உத்தரவின்றிச் சிற்றெறும்பும் தீண்டா' தென்னும் உலகத்தார் சொல்லும் வார்த்தையே இதற்குச் சான்ருகும். இதற்குத் திருட்டாந்தமாக, பாரதம் தருமபுத்திரருக்குப் பீஷ்மர் சொல்லுவது. கிராதபுயங்க சம்வாதம்.

ஒரு அக்ராரத்தில் உத்தமப்பிராமணன் ஒருவனிருந்தான். அவன் பத்தினி புண்ணியவதி. அவர்களுக்கு ஒரே அருமைப் புத்திரன். அப்புத்திரனை அரவுதீண்டி, மணிமந்திர ஔடதங்களில் பிழையாமல் இறந்துபோனன். அவர்கள் சுற்றத்தாரோடு துக்கப்பட்டுக்கொண் டிருக்கையில், அந்நகரத்துக் கடுத்த ஆரண்யத்தில் வசிக்கும் பொருச்சுனன் என்னும் வேடன் கடித்த அச் சர்ப்பத்தைப் பிடித்துக் கொண்டு வந்து, அப்பிராமணஸ்திரீயை அழைத்து, அம்மா உன் புத்திரனைக் கடித்த பாம்பு இது, ஆதலால் இதைக்கொன்று விடுகிறேனென்று சொல்ல, அப்புண்ணியவதி வேண்டாம் அதைக் கொலைசெய்வதால் என் புத்திரன் எழுந்துவரப் போகிருனு, இல்லையே? அல்லாமலும் நீ அதைக்கொல்லும் போது அதன் உயிர் நீங்கும்காலத்தில் அது எவ்வளவு துன்பத்தையடையும், அதை யான் கண்டு சகியேன்; அதைச் சும்மா விட்டுவிடு, அதுபோய்த் தன்னினத்துடன் சுகமாய் இருக்கட்டுமென்றுசொல்ல, வேடன்பழிக்குப்பழி, இதைக் கொலைசெய்துதா னுகவேண்டுமென, அப் புண்ணியவதி அதற்குச் சம்மதியாமல் மறுக்க, அச்சமயத்து அவ்வேடனை அப்பாம்பானது பார்த்து ஓ! வேடனே, காட்டில் உன்குடிசையினிடத்து என்னை எத்தனைநாள் பார்த்திருப்பாயென, நான் உன்னைப் பலநாளும் பார்த்திருக்கிறேன், அன்றியும்

சில சமயத்தில் என்னை யறியாது உன்னை மிதித்ததுமுண்டு என்று சொல்ல, அதற்குப் பாம்பானது அக்காட்டிலிருக்கும் உன்னைவிட்டு இவ்வக்ராரத்துக்கு வந்து தாய்தந்தையின் நடுவில் படுத்திருக்கும் இப்பிள்ளையை ஏன்கடிக்கிறேன். மிருத்துதேவதை எனக்கு உத்தரவுசெய்தது. அவ்வுத்தரவுப்படி நான் கடித்தேனென்று சொல்ல, அவன், பழிக்குப்பழி உன்னைக் கொலைசெய்தே, பிறகு அம்மிருத்து தேவதையினிடம் செல்லவேண்டுமென்று சொல்லுஞ் சமயத்து, மிருத்து தேவதை பிரசன்னமாகி ஓ! வேடனே,என் வீணுகப் பாம்பைக் கொல்லப்போகிருய். என் எஜமானனுன காலன் உத்தரவுப்படி நான் சொன்னதென, உடனே காலன் பிரசன்னமாகி யமதருமராஜன் உத்தரவுப்படி நான் சொன்னதென, அவரும் சித்திரகுப்தர் கணக்கின்படி சொன்னது, அதுவும் பிரமனுல் விதிக்கப்பட்ட கணக்கு, அப்பிரமனும், இவன் முன்னை வினைக்கீடாக விதிக்கப்பட்டுள்ளதாகும். ஆனதால் இவன் செய்த முன்னைவினையே இப்பால்யத்திலேயே உயிரிழப்பதற்குக் காரணமாய் நின்றது என்றுசொல்லி, அவ்விருவரும் மறைந்துவிட, உடனே வேடனும் அப்பாம்பை விட்டுவிட்டான். பின்பு அவ்வக்ராரத்தி லுள்ளவர்களும் அச்சவத்தை எடுத்துக்கொண்டு போய்த் தகனம் செய்துவிட்டார்கள்.

இக்கதையி னபிப்ராயம் பற்றியே, நரை மூதாட்டியாரும்,

தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
யொறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்ருய்
வெறுத்தாலும் போமோ விதி.

என்று அருளிச்செய்துள்ளார்.

வினு :—உலகத்தில் சிலர் பிறன்மனை சேர்தல், திருடுதல், பிற உயிர்களை உபத்திரவப் படுத்துதல், பிற உயிர் களைக் கொலைசெய்தல் முதலான தீயகாரியங்கள் செய் தவிடத்து அவர்களைப் பார்த்து நல்லோர்கள் இத்தீய காரியம் செய்யலாமா வெனக் கேட்டால் அதற்கவர் கள் ஊழின்படி நடக்கிறதென்று சொல்லுகிறார்களே அதெப்படி ?

விடை :—மும்மலத்தால் பந்தப்பட்டு யானென தென்னுஞ் செருக்கோடும்,பேதபுத்தியோடு மிருப்பவர்கள் சொல் லும் இவ்வார்த்தை முற்றுந் தவறாகும். ஊழின்படி நடக்கிற தென்று சொன்னால் தன் மனைவியைப் பிற னொருவன் சேருங்காலத்து, ஊழின்படி நடக்கிற தென்று சந்தோஷிப்பானு? தன் பொருளைப் பிறர் அபகரிக்கும் காலத்து ஊழின்படி போனதென்றிருப்பானு? தன்னையும், தன்னைச்சேர்ந்தாரையும் பிறர் வருத்துங் காலத்து ஊழின்படி நடக்கிறதென்று சும்மா விருப் பானு? தனது மனைவி, புத்திரர் முதலானவர்களுக்குப் பிறரால் கொலை நேர்ந்த காலத்து ஊழின்படிகொலை யடைந்தார்களென்று, கொலை செய்தவருக்கு யாதொ ரு உபத்திரவமும் செய்யாதிருப்பானு? உலகத்தில் ஒரு க்காலும் ஒருவருமிரார். ஆனதால் தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் வருந் துன்பத்தைப் போலவே பிற உயிர்களுக்கும் இருக்கு மென்பதே ஜீவகாருண்ய த்தின் முக்கிய கடமை யாகும். இப்படிச் சொல்பவர் கள் இம்மையில் அடையும் துக்கத்துக்கும் தேகாந்தி

யத்திலடையும் நரக வேதனைகளுக்கும் அளவே யில்லை. இதனை

"தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்"

எனவரும் திருக்குறளால் கண்டுகொள்க.

வினா:—உலகத்தில் சிலர் காடை, கவுதாரி, மைனா, கிளிப் பிள்ளை முதலான பக்ஷிகளையும், குரங்கு, மான் முதலான மிருகங்களையும் கூட்டிலடைத்தும் கட்டுப்படுத்தியும் வளர்க்கிறார்களே அது நற்காரியமா?

விடை:—அது மிகவுங் கொடுமையான காரியம். இப்படிச் செய்பவர்களெல்லாம் தேகாந்தியத்தில் நரகத் துன்பத்தை யனுபவித்து நரகசேடத்தால் மறுசன்ம மெடுத்தபோது அப்பிறவியில் தங்களுடைய மனைவி, புத்திரர் மற்றுமுண்டான பந்துக்களையும் விட்டுநீங்கித் தம் பகைவர்களுக் கடிமையாகி விலங்குபூண்டு சிறைச் சாலையி லிருப்பார்கள்.

(இ - உ - ம்)

இரும்பார்க்குங் காலராய் ஏதிலார்க் காளாய்க்
கரும்பார்க் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்கும்
காட்டுளாய் வாழும் சிவலுங் குறும்பூழுங்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார். —நாலடியார்.

பூவைகிளி தோகைபுண ரன்னமொடு பன்மா
ஆயவவை தங்கிளையி னீங்கியழ வாங்கி
காவல்செய்து வைத்தவர்க டங்கிளையி னீங்கிப்
போவர்புகழ் நம்பியிது பொற்பிலது கண்டாய்.
—சீவகசிந்தாமணி.

எனும் ஆன்றோர் வாக்குக்களாற் கண்டுகொள்க.

இதற்குத் திருட்டாந்தமாகப் பக்த விஜயம்: ராம்தாஸ ரென்பவர், முற்பிறப்பில் பன்னிரண்டு வருடம் கிளியைக் கூட்டிலடைத்து வளர்த்ததால் பன்னிரண்டு வருடம் சிறைச் சாலேயி லிருந்தார். ஆனதால் பட்சிகளேயும் மிருகங்களேயும் கூட்டி லடைத்தும் கட்டுப்படுத்தியும் வளர்க்கப்படாது.

வினு:—உலகத்தில் யாகாதி கிருத்தியம் செய்கிருர்களே அது எத்தனே வகை?

விடை:—யாக மைந்து விதமாகும். அவை: பிரமம், தெய்வம், பூதம், பிதுர், மானுஷம் என்பனவாம். வேத மோதல் பிரமயாகம், ஓமம் வளர்த்தல் தெய்வ யாகம், பலியிடல் பூதயாகம், தர்ப்பணம் முடித்தல் பிதுர்யாகம், இரப்போர்க்கு உணவு முதலிய ஈதல் மனுஷயாகம் என்று வேதங்கள் முறையிடுகின்றன.

வினு:—ஆனுல் உயர்ந்த குலத்தில் பிறந்தவரும் சகலசாஸ்திரங்களில் பாண்டித்ய முடையவருமாகிய பிராமணர்கள் பசுக்களேக் கொன்று யாகஞ் செய்கிருர்களே அதனுலவரடையும் பய னென்ன? வேதம் முதலான பல நூல்களிலும் அஸ்வமேதயாகம் முதலான பல யாகங்களும் சொல்லப்பட்டிருக்கின்றனவே அவைகளினபிப் பிராய மென்ன?

விடை:—ஆம், பிராமணர்கள் யாகஞ் செய்கிருர்கள். ஆனுல் பிரமம், தெய்வம், பிதுர், மானுஷம் என்னும் உயிர்ப் பலியில்லாத நான்கு யாகங்களுமே உத்தமமானவை யாம். உயிர்ப்பலி கொடுத்துச் செய்யும் பூதயாகம் மத்

திமமாகும். அப் பூதயாகத்தைச் செய்பவர்கள் மந்திரப் பிரயோகத்தால் அப்பசுவினுயிர்ப் போக்கி யாகம் முடிந்த பிறகு மீண்டு மந்திரபலத்தா லதை எழுப்பவேண்டும்; அவர்களே இந்த யாகத்தைச் செய்வதற் குரியராவர். ஆனல் இந்தயாகம் காமியார்த்த நிமித்தம் செய்வது. இது மதுமாம்சத்தி லிச்சையுள்ளார்க்கே யுரியது. இதற்குடன்படுவோர் மாயாசம்பந்தமுடையவர்களே. இதை எவ்வளவு சிறப்பாகச் செய்தாலும் சாகினி, டாகினி முதலான பூதங்களே களிப்படையு மென்பது வேதத்தின் கருத்து. ஆனல் அவ்வேதமும், இன்னும் பலநூல்களும், அதைச் சொல்வ தெதற்காக வெனில், மந்த வதிகாரிகளைத் திருப்பி அவர்கள் மேல் நிலைக்கு வரவேண்டிய நிமித்தம் அவ்வேதம் பூர்வபட்சமாகச் சொன்னது. ஆனல் அவ்வேதத்தின் முடிவான அபிப்பிராயமென்னவெனில், மன்னுயிரையெல்லாம்தன்னுயிர்போல் பார்ப்பதே அதன் முக்கிய கருத்தாகும்.

(இ - உ - ம்)

க்ள்ளு மூனுநீ விரும்பினல் மகங்கள்செய்.
காமத்தின் ம்னதானல்
கொள்ளும் பெண்டொடுங் கலவிசெய் யெனிலிவன்
குறையெலாந் தொடானென்றே
தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சகலமுந்
தவிர்வதே கருத்தாகும்
விள்ளு மிவ்விதி யென்னெனிற் பூருவ
நியமமாம் விதியன்றே. —கைவல்யம்.

என்பதனல் மாமிசபட்சண முதலியவற்றைச் செய்பவர்களை

அதினின்று நீக்க வேண்டிய நிமித்தம் பூர்வபட்சமாகச் சொல்லப்பட்டது.

வினு:—ஆனல் இப்பூதயாகஞ் செய்பவரும் அதிலிருந்த யாகப்பசுவும் மேலடையும் பலனென்ன ?

விடை:— யாகஞ் செய்தவரும் யாகத்திலிருந்த பசுவும் சொர்க்கலோக மடைவதாக நூல்கள் கூறுகின்றன. அந்த யாகத்திலிறந்த ஆடானது சொர்க்க லோகத்தி லிருந்து தன்னைக் கொலை செய்தவனைப் பழிக்குப்பழி கொலைசெய்ய வேண்டுமென்று கோபமேலிட்டுக் கண் களில் நெருப்புப் பொறிபறக்க எஃகினுலாகிய கொம்பு களுட னிவன்வரவை எதிர்பார்த்திருக்கும். அப்படி யவன் வந்ததும் அதிதீவிரமா யவன்மீது பாய்ந்து தன் கூரிய கொம்புகளால் குத்தி வயிற்றைப்பிளந்து துன் பப் படுத்திவிடும். அந்தோ பரிதாபம்! மிகுந்த பொரு ளைச் செலவழித்துத் தேகசிரமத்துடன் யாகஞ்செய் தவனடையும் பலனிதுவாகும்!

(இ - உ - ம்.)

அயம கத்தினி லரசநீ படுத்தவம் மறிகள்
செயிர்த மைந்துகண் டீயுக வரவுபார்த் திருக்கும்
பயில்வி சும்புசெல் காலையில் வெருவரப் பாய்ந்து
வயிறு போழும்வல் லிருப்பினை் மருப்பினின் மாதோ.

படுத்திடு மறிகள் வேள்வி புரிந்த வன்பனி விசும்பி
னடுத்திடுங் கால நோக்கி யழல்விழி யொழுகப் பாய்ந்து
வடித்தகா ரிருப்பிற் செய்த மருப்பினுல் வயிறு போழ்ந்த
தெடுத்துநா முரைக்குங் கேட்டி யிறைவவென் றுரைக்க லுற்றான்.
—பாகவதம்.

என்பதினால் வேதத்தில் பூர்வபக்ஷமாகச் சொன்ன யாகத்தை எவ்வளவு சிறப்பாகச் செய்தாலும், இவன் கொலை செய்த பழிக்குப்பழி கொலையுறுவனென்பது நிச்சயம். அன்றியும் யாகத்தா லடையும் பலன் சொர்க்க போகந் தானே. அங்கு இவனடையும் சுகமென்ன? ஆகமங்களெல்லாம் யாகஞ்செய்பவனை மத்திமனென்றும் அங்கடையும் போகம் அற்பமென்றும் கூறுகின்றன.

(இ - உ - ம்.)

தருநிழலும் நல்லமிர்துந் தண்டாத மங்கையரும்
வருமென்று வேள்விசெயு மத்திமர்காள்—தருமாமே
அமிர்தம் பசுவின்பா லாயிழையார் வேசியென
வுமைபங்க னாகமமோ தும். —சிவஞானவள்ளலார்.

அன்றியும் பொன்னாட்டு வாழ்வு பலவிதமான துன்பந்தருவதென்றும், அதனினும் சிவபெருமா னளிக்கும் மோட்ச சாம்பிராச்சியமே மேலானதென்றும் ஏற்படுகின்றது.

(இ - உ - ம்.)

காடு போந்தன னிந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனும் சிறையிடைப் பட்டான்
நாடில் விண்பதச் செய்கையீ தெம்பிரா னல்கும்
வீட தேயலாற் றுன்பறு மாகமம் வேறுண்டோ
—ஸ்காந்தபுராணம்.

இஃதன்றியும், பொன்னாட்டி லிருக்குந் தேவர்களுக்கு ஆசை, கோபம், பகை, நோய், விரகவேதனை, காயம், பிறருக்கு வணக்கம், கற்பத்தே இரத்தல் முதலான துக்கங்களுமுண்டு.

(இ - உ - ம்.)

தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிகவுண்டு
நோயுண் டனங்க ஞருண்டு நோய்கட் கெல்லாந் தாயான
காய முண்டு கைதொழவேண் டுனரு முண்டு கற்பத்தே
மாயுந் தன்மை யுண்டானல் வானோர்க் கென்னை வளனுண்டே
—பெருந்திரட்டு.

என வரும் ஆன்றோர் வாக்காலும் பொன்னாட்டு வாழ்வு பெருந்துன்பமென விளங்குகின்றது.

வேதத்தில் உயிர்ப் பலியிட்டு யாகம் செய்யவேண்டுமென்று கூறவில்லை. யசுர்வேதம், நாலாவது காண்டம் பிரம்ம ஞானத்தையும், முதல் பதின் மூன்று காண்டங்களில் அஸ்வமேதத்தையும் பிரஸ்தாபித்துப்பேசுகின்றது. இந்த யசுர்வேதத்தில் சொல்லியிருக்கும் அஸ்வமேத புருஷமேதாதி யாகங்களில் உண்மையாகவே குதிரைகளையும் புருஷர்களையும் பலி கொடுப்பதாகச் சிலர் எண்ணுகிறார்கள். அந்தோ! அது தப்பெண்ணம். அஸ்வமேத யாகத்தில் (609) மிருகங்கள், பசு, பட்சியாதி ஜந்துக்களை (21) யாகஸ்தம்பங்களில் கட்டியும், வீட்டுக்குரிய சாதுவான மிருகங்களைக் கற்றூண்களுக்கு மத்தியில் கட்டியும் யாகஸ்தோத்திரங்களைச் செப்பிய பிறகு அப்பிராணிகளுக்கு எவ்வித வருத்தமு மில்லாதபடி அவிழ்த்துவிடும்படி விதிகளிருக்கின்றன. இதன்றியில் புருஷமேத யாகத்தில் பற்பல குலத்தரான (185) புருஷரை (11) யாகஸ்தம்பங்களில் கட்டி ஒட்டலங்காரமான நாராயண பலிகீதங்களைப் பாடி முடிந்த பின் அப்புருடர்களுக்கு எவ்விதமான வருத்தமும் கொடாமலவிழ்த்து விடும்படி விதிகளிருக்கின்றன. ஆகவே இந்த யாகங்களெல்லாம் கேவலம் ஒட்டலங்

காரமே யொழிய யதார்த்தமான பலிகளல்லவென்று (சாநித வியாக்கியானங்களால்) ஸ்பஷ்டமாகின்றன. அன்றியும் யாகத்தில் உண்மையாகவே பலி யிடுகிறவைகளை உண்ண வேண்டுமென்ற விதிகளிருப்பதால் புருஷர்களை யாகவஸ்துக் களாகக் கொண்டு சடங்குகளைச் செய்வோர் அந்தயாக புருடருடைய மாமிசத்தையு முண்ணவேண்டு மென்றல்லவா ஏற்படுகிறது. இதை யாரேனு மொப்புவார்களா? அதே வேதத்தில் மனுட மாமிசத்தை உண்ணக்கூடாதென்று விதி யிருப்பது பிரத்யட்ச மாகையால் இந்த யாக பலிக ளெல்லாம் ஒட்டலங்காரமேயாம். சதபதப் பிராம்மணம் 14வது காண்டத்தில் பலிகளைக் கண்டித்திருத்தலும் பிரத்தியக்ஷம்.

வினா :—யாகம் செய்து பொன்னாடு சேர்ந்தவர்களும் தாழ்வான நிலைமைக்கு வருவ துண்டோ?

விடை :—உண்டு. மண்ணுலகத்தரசனாகிய நகுஷனென்பவன் அருமையாக நூறு அசுவமேத யாகஞ் செய்து இந்திர பட்டத்தை யடைந்தான். அப்பட்டத்தைப் பெற்று அவனடைந்த கதி யென்ன? மலைப்பாம்பாகத்தானே பூமியில் விழுந்தான். அங்கு அவனைக் கெடுத்தவை காமக்குரோதமாகிய இவை யிரண்டுந்தானே. அவ்விந்திர பதவியை இவனடைந்ததினா லல்லவா இந்திராணி போகத்தை யிச்சிக்கவும், பெரியாராகிய அகஸ்தியர் தன்னைச் சபிக்கவும் நேர்ந்தது. இவ்வளவுக்கும் இவன் யாகங்களைச் செய்து இந்திர பதவியை யடைந்ததே காரணமாயிற்று. இதை நன்றாய் யோசித்துப் பார்ப்பவர்கள் யாகஞ் செய்து அதன் பலனை

யடையவேண்டு மென்று சொப்பனத்திலும் நினைப் பார்களா? பேரறிவாளர் நினைக்கவே மாட்டார்கள்.

வினா :—உலகத்தி லெச்சமயத்தாரு மங்கீகரிக்கும் நூலு ளதோ?

விடை :—உண்டு.

வினா :—அஃதெது?

விடை :—தெய்வப் புலமைத் திருவள்ளுவர் திருவாய் மலர்ந் தருளிய திருக்குறள்.

வினா :—அவர் யாகஞ் செய்யவேண்டு மென்று கூறியுள் ளாரா?

விடை :—முப்பாலையும் சொல்லிமுடித்த பெரியா ரெப்பாலி லும் ஓரதிகாரமு மதற்கென்று சொல்லவில்லை.

வினா :—ஆனால் உயிர்வதை செய்து நடத்தும் பூதயாகத்தி லவர் கருத்தென்ன?

விடை —அதைச் செய்யப்படாதென்பதே அவர் கருத்தா கும். பல அதிகாரங்களில் கூறியுள்ளார். எப்படியெ னில் 26ம் அதிகாரம் புலான் மறுத்தலில், நெய் முத லிய அவிகளைச் சொரிந்து ஆயிரம் யாகஞ் செய்தலி னும் ஒருயிரைப் போக்கி அதன் மாமிசத்தைத் தின்னா திருத்தலே யாகங்கள் செய்வதால் வரும் பயனினும் பெரும்பயனு மென்று கூறியுள்ளர்.

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று. —திருக்குறள்.

அன்றியும் 32-ம் அதிகாரம் இன்னா செய்யாமையில், யோகச் சிறப்பினாலே தரப்படுவனவாகிய அணிமா முதலிய அட்டசெல்வங்களைப் பிற உயிர்கட்குத் துன்பந்தருங் காரியஞ்செய்து ஒருவன் பெறுவதினும் எவ்வுயிர்களுக்கும் துன்பம் செய்யாதிருப்பதே நலமென்பது ஆகமங்களை யுணர்ந்த பெரியோர்கள் துணிபாம். ஆனதால் அட்டமாசித்திகள் பிற உயிர்களுக்கு இம்சை செய்து பெறுவதாயின் அது மிகவுங் கெடுதி என்பதாயிற்று.

(இ - உ - ம்.)

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். —திருக்குறள்.

அன்றியும் முப்பத்து மூன்றாமதிகாரங் கொல்லாமையில், யாகத்திலே ஒருயிரைக் கொன்று அதனாலடையுஞ் சுவர்க்க வின்பமானது மத்திமர்களுக்கு மேலானதென்று சொன்னாலும், அறிவால் நிறைந்த பெரியோர்களுக்குக் கொலைசெய்து வருவதனாலுண்டாகிய இன்பம் கடையென்றதினால், அற்பசுகத்தை விரும்பிக் கொலை செய்யப்படாதென்று இதனால் தெரிகின்றது.

(இ - உ - ம்.)

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை. —திருக்குறள்.

என்பதினா லறிக. இன்னு மிதுபற்றி நாயனார் கூறியுள்ள பாக்கள் பல உள.

விரிக்கிற் பெருகுமென விரிவஞ்சி விடுத்தனம். யாகஞ் செய்யவேண்டு மென்று தாமருளிச் செய்த நூலில் கூறும

லும், யாகத்தைக் குறைவு படுத்திக் கூறியிருப்பதாலும், இக்காலத்திலிது செய்யப்படாதென்பதே ஆசிரியர் வள்ளுவனார் கருத்தாகும். அன்றியும் சென்ற யுகங்களில் நரமேதயாகஞ் செய்து வந்தார்களே, ஏனிக்காலத்தி லதைச் செய்யக் காணோம் ?

இக்காலத்தில் செய்வதானால் லட்சக்கணக்கான பொருள் கொடுத்தாலும் யாவர் தங்களுயிரைக் கொடுக்கத் துணிவார்கள் ? ஒருவருமே ஒப்புக்கொள்ளமாட்டார்கள். வாயற்ற சாதுவான ஆடு, குதிரை முதலானவைகளுக்கென்றால் கேள்விமுறை யில்லை. ஒருவன் தனக்கு ஒருசிறுதுன்பம் வருங்காலத்தும் தன்னுயிர்க்கு இறுதிவருங் காலத்தும் என்ன துன்பத்தை யடைகிறான். இதுபோல்தானே பிறவுயிர்களுக்கு மிருக்கும்.

(இ - உ - ம்.)

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். —திருக்குறள்.

எனுந் திருவாக்கைக் கவனியுங்கள்.

அன்றியும், வேறோருயிரினது உடம்பை யுண்டு உயிர்கள் மாட்டுக் கருணையுடையோ னென்று கருதுபவனும், பொருளுக்காகத் தான் செய்யுமுயற்சியி லுடன்படுத லில்லாதிருந்தும் முன்னை வினையானது அப்பொருளைத் தனக்கூட்டுமென்று கருதியிருப்பவனும், ஒருபயனைப் பெறவேண்டிச் செய்யவிரும்புகின்ற யாகத்தில் ஒருயிரைக் கொலை செய்பவனுமாகிய இம்மூவரும் தம் புல்லறிவால் தாங்க ளறிந்தபடியே அறிந்தவ ராவார்.

(இ - உ - ம்.)

ஊனுண் டுயிர்கட் கருளுடையே னென்பானுந்
தானுடன் பாடின்றி வினையாக்கு மென்பவனும்
காமுறு வேள்வியிற் கொல்வானு மிம்மூவர்
தாமறிவார் தாங்கண்ட வாறு. —திரிகடுகம்.

இதுநிற்க, சகல வேதங்களையுங் கற்றுப் பிரமசரியத்தில் வழுவாத ஒரு பிராமணச் சிறுவன் ஓர் கைம்பெண்ணைக் கலந்து அவ்விருவர் சுக்கில சுரோணிதத்தால் யாகப்பூர்த்திசெய்கின்றவிதனைப் பௌண்டரிக யாகம் என்று சொல்லுகிறார்கள்.

(இ - உ - ம்.)

செம்மையிற் றிறம்பல் செல்லா மறைபயில் சிறுவ னங்கோர்
கைம்மையைக் கலத்தல் நோக்கிக் கலிமகிழ்சிறந்து செல்வான்
வம்மினென் றமரர் தம்மை மறையினுற் கூறக் கேளா
அம்மவோ மகமென் றஞ்சி யலக்கணுற் றகன்று போனன்.
—நைடதம்.

எனக் கூறியுள்ளது. ஆகு லிவ்வகைப்பட்ட யாகம் பேரறிவாளர் மனதுக்குப் பொருத்தமா யிருக்குமா? இராது.

வின:—ஆனல் யாகஞ் செய்தால்தான், மழைபெய்து உலகம் க்ஷேமமாகு மென்று சொல்லுகிறார்களே, அஃதெப்படி?

விடை:—பிறவுயிர்களை யிம்சித்துச் செய்யும் யாகத்தால் தான் மழை பெய்யு மென்பது பொருந்தாத விஷயம். உயிர்ப்பலியில்லாத ஏனைய நான்கு யாகத்தால் உலகஞ் சுகமடையும். மேற்சொன்ன பூதயாகஞ் செய்தால் தான் மழை பெய்யுமென்று நாயனர் திருக்குறளி

லோர்பாவிலுஞ் சொல்லக்காணேம், ஆனல் பதியைத் தொழும் சதி மழை பெய்யென்றல் பெய்யுமென்று கூறியுள்ளார். அன்றியும் திருஞானசம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும், திருவீழிமிழலையில் சிவபிரானிடம் படிக்காசு பெற்று வந்த காலத்து உலகம் மழை பெய்து சுகமடைய ஏன் மேற்சொன்ன யாகஞ் செய்யவில்லை. அம்மகான்களுக்குத் தெரியாத விஷய மூலகத்தி லுண்டோ? ஆனலடியார்களுக் கன்னமிடுதலென்கிற ஓர் யாகம் செய்தனர்.

வினு—ஆனல் இந்த பூதயாகத்தை உலகத்திருக்கும் பிராமணர்க ளெல்லாரும் செய்கிறர்களா?

விடை :—இல்லை. முப்போதுந் திருமேனி தீண்டுவாரென்று வன்றெண்டப் பெருமானல் சிறப்பித்துச் சொல்லப்பட்ட ஆதி சைவர்களும், திருமண் தரித்து வைகுண்டவாசனைப் பூசிக்கும் வைணவப் பிராமணர்களும் இப் பூதயாகஞ் செய்வதில்லை.

"அஸ்வாலம்பம் கவாலம்பம் சந்யாசம் பலபைத்ருகம்
தேரேணு சுதோத்பத்தி கலௌபஞ்ச விவர்ஜயேத்து"

அஸ்வாலம்பம் - அஸ்வமேதயாகம், கவாலம்பம் - பசு (வெள்ளாடு) யாகம், சந்யாசம் - சந்நியாசம் பெற்றுக் கொள்ளுதல், பலபைத்ருகம் - பிதுர்க்கள் ஸ்ராத்தாதி கிரியைகளில் மாமிசத்தைச் சேர்த்தல், தேவரேணுசுதோத்பத்தி - குருவைக்கொண்டும், பெரியோரைக்கொண்டும், தேவர்களைக் கொண்டும் புத்திரர்களை உற்பவம் செய்து கொள்ளுவது ஆகிய இவ்வைந்தும் கலியுகத்தில் நீக்கப்பட்டன.

மேல் ஸ்லோகப்படி கலியுகத்தில் அசுவமேதயாகம், பசுயாகம், சந்யாசம், பிதுர்த்தினத்தில் மாமிசத்தைச் சேர்த்தல், தமக்குப் புத்திரனில்லாத விடத்துக் குருவைக்கொண்டும், பெரியோர்களைக் கொண்டும் புத்திரரைப்பெறுதல் ஆகிய இவ்வைந்தும் இக்கலியுகத்தில் கூடாவாம். முற்காலத்தில் குருவைக்கொண்டு புத்திரரைப் பெற்றார்களென்பதற்குப் பிரமாணம்:

'காவலன் றனக்குப் பின்னோர் கான்முளை யில்லை யென்று
பூவல யத்திலுள்ளோர் புகல்வதும் பொருந்தார் வீறும்
யாவையு முணர்ந்த நீதி வசிஷ்டனுங் கியல்பி னுய்ந்து
பாவருந் துயரந் தீர்க்கும் படிநினைந் தினைய செய்தான்.'

அருந்ததி யனைய கற்பின் மதயந்தி யணங்க னுள்பாற்
பொருந்தியின் கலவி துய்த்தோர் புதல்வனைத் தந்து தீரா
இருந்துய ருலகந் தீர வியற்றினன் முனிவ னிப்பாற்
பெருந்தகை தவஞ்செய்வானைப் பேய்மக ளொருத்திபற்றி.'
—பிரமோத்தரகாண்டம்.

இஃதன்றியும் வியாசர் மூலமாகத் திருதராட்டிர பாண்டு விதுரர்களும் குந்திதேவிக்குத் தேவர் முன்னிலையாகச் சுதரும் பிறந்தார்கள். இக்காலத்தில் அதை நாம் கொள்ளாததுபோல இக்காலத்தில் யாகங்களையும் மாமிசமுண்பதனையும் கொள்ளப்படாது.

வினு :—உயிர்ப் பலியோடு கூடிய பூதயாகஞ்செய்து பேரின்ப வீடு அடைவ துண்டோ ?

விடை :—இல்லை. சிறிதுகாலம் சுவர்க்க போகத்தை யனுபவித்து மீண்டும் பூலோகத்திற்கு வந்து பிறந்திறந்துழலவேண்டுவதுதான்.

வினு :—ஆனுல் சிவபிரான் திருவடிப் பேற்றை யெதனு லடையலாம் ?

விடை :—சரியை, கிரியை, யோகம் என்னுஞ் சாதனங் களால் சிவ ஞானத்தை யடைந்து திருவடிப் பேருகிய சிவசாயுச்சியத்தை யடையலாம்.

வினு :—துஷ்ட மிருகங்களால் பயிர்களுக்குக் கெடுதியும் மனிதர்களுக்கு உபத்திரவமும் நேரிடுகிறதே, அதற் கென்ன செய்வது?

விடை :—இவ்வகைப்பட்ட துஷ்ட மிருகங்கள் மனிதர்க ளுக்கும், அவர்கள் செய்யும் பயிர் முதலானவைகளுக் கும் கெடுதி செய்வதா யிருந்தால், வேட்டையாடி அவைகளைத் தூரத்தே போக்குவதும் கொலை செய்வ தும் அரசர்களுடைய கடமை. முற்காலத்தரசர்களும் வேட்டையாடினர்களென்று நூல்களிற் கூறியுள்ளது. அன்றியும் நல்லோர்க்குத் தீயவர் கெடுதி செய்வாரா யின் அவர்களுக்கு இராஜாக்கள் கொலைமுதலான தண் டனை செய்யலாம். ஆனுல் மேற்சொன்ன காரியங்களை இல்லறத்தி லொழுகுபவராகிய நாம் செய்யக் கூடாது. அப்படிச் செய்யில் இம்மை மறுமையில் பெருந்துன்ப மடைவோம். இராஜாக்கள் கொலை முத லான தண்டனை விதிக்கலா மென்பதற்குப் பிரமாணம்:

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட்ட தனேடு நேர்." —திருக்குறள்

இது ராஜ தருமமாகும்.

வினு :—நாம் பூமியில் நடக்கும்போது சிறு ஜந்துக்க ளிறக்கின்றனவே அது பாதகம் அல்லவா? எவ்வண்ணம் நடக்கவேண்டும்?

விடை —பாம்பு, தேள், செய்யான் முதலான விஷ ஜந்துக்களிருக்கிற இடத்தில் ஒருவர் சென்றால் தனக்கது உபத்திரவம் செய்யா வண்ணம் எப்படி ஜாக்கிரதையாக முன்னும் பின்னும் பக்கங்களினும் பார்த்து நடப்பார்களோ, அதுபோலத்தாம் நடந்து செல்லும்போது சிதல், எறும்பு, புழு முதலான சிறு ஜந்துக்களுக்கு உபத்திரவமில்லாமல் கீழே பார்த்து நடத்தல் வேண்டும். நித்திரைமுதலான காலங்களில் தன்னை யறியாமல் வரும் கொலை முதலானவைகள் ஈசுவர வழிபாட்டால் நீங்கும். முற்காலத்து ஜடபரதர் அரசன் பல்லக்குச் சுமந்து சென்ற காலத்துப் பூமியி லுறையும் புழு முதலானவைகளுக்கும் உபத்திரவம் இல்லாமல் கீழே பார்த்து நடந்ததாக நூல்களில் பார்க்கிறோம்.

வினு :—இக் கொல்லாமையைப் பற்றி யிவ்வளவு வற்புறுத்திக் கூறுவதென்ன?

விடை :—இது நாம் கூறுவதன்று. சுருதி, மனுசம்மிதை, மற்று முண்டான நூல்களிற் கூறியுள்ளதையே யிங்குக் கூறப்பட்டது.

சுருதி :—நஹிம்ஸ்யாத் ஸர்வ பூதானி (எந்தச் சீவனையும் ஹிம்ஸை செய்யக்கூடாது.)

சுருதி :—'அஹிம்ஸா பரமோ தர்ம' (ஹிம்சை செய்யாதிருப்பதே முக்யமான தர்மமாகும்.)

"எந்த சாஸ்திரத்திலாயினும் விதிக்கப்பட்டிருந்தாலும் சரி, விதிக்கப்படாமலிருந்தாலும் சரி, ஆன்ம லாபமடைய விரும்புபவன் புலாலுண்ணலை நீக்கவேண்டும்" என்று மஹாபாரதம் வேறு சாஸ்திரங்களையுஞ் சட்டை செய்யாது முடிவுரை கூறுகின்றது.

மனுஸம்ஹிதை [5-வது அத்தியாயம் 15-வது ஸ்லோகம்] எந்த மிருகத்தினுடைய மாம்ஸத்தை யாயினும் சாப்பிடுமொருவன், அந்த மிருகத்தையே சாப்பிட்டவனுகின்ருன். ஒரு மாம்ஸத்தைச் சாப்பிட்டவன் எல்லா மாமிஸத்தையும் சாப்பிட்டவனுகிருன். ஆகையால், அவன் மாம்ஸ போஜனத்தினின்றும் ஜாக்கிரதையாய் விலகவேண்டும்.

மனுஸம்ஹிதை [5-வது அத்தியாயம் 48-வது ஸ்லோகம்] ஜீவஜந்துக்களுக்கு ஹானியில்லாமல் மாம்ஸத்தைச் சம்பாதிக்க முடியாது. மிருகங்களைக் கொல்வதிஞல் மோக்ஷ வழிக்குத் தடையாகிறது. ஆகையிஞல் மனிதன் கொலை செய்யாதிருக்கட்டும்.

மனுஸம்ஹிதை [5-வது அத்தியாயம் 38-வது ஸ்லோகம்] ஒரு மிருகத்தைக் கொல்பவன் அதன் உடம்பில் எத்தனை மயிரிருக்கின்றனவோ, அத்தனைதரம் பிறந்து இறக்க வேண்டும்.

அன்றியும் சடகோபர் கூறுகிருர். 'ஆ! ஈதென்ன பித்துலகம், பலவகையாலும் வருத்தி மீன்களைப் பலமானவலையுட் படுத்தி குமைத்திட்டுக் கொன்று தின்கிருர்கள்.'

"மறுக்கிவல் வலைப்படுத்திக் குமைத்திட்டுக் கொன்றுண்பர்
அறப்பொருளை யறிந்தோரா ரீதென்ன வுலகியற்கை"

எனும் ஆன்ருேர் வாக்கும்,

கொல்லா விரதங் குவலய மெல்லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே.
கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே.

கொலைகளவு கட்காமங் கோபம்விட் டாலன்ருே
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே.

எனும் **தாயுமானவர்** திருவாக்கும் இங்கு காணத்தக்கன. இனிப் புலாலுண்பதும் பாவமென்பதைப்பற்றிக் கூறுவாம்.

**விஞ:**—சைவசமய மென்பதென்ன?

விடை:—சைவம் சிவத்தோடு சம்பந்தமானது என்ருலும் சைவம் என்பதன் விசேடத்தை இவ்வுலகத்தார் சொல்லும் வண்ணம் இங்கு விரிவாகக் கூறுவாம். புறமதஸ்தஞகிய கிறிஸ்தவன் ஒருவனைப்பார்த்து இவர் ஒருவருடமாகச் சைவமாய் விட்டார் என்றும், வைணவ சமயத்தவ ரொருவரைப் பார்த்து இவரும் இரண்டு வருடமாய்ச் சைவமாய் விட்டாரென்றும் உலகத்தார் சொல்லுகிருர்கள். இன்னுஞ் சில புறமதஸ்தர்களைப் பார்த்து இவர்களுஞ்சிலகாலமாகச்சைவராயிருக்கிருர்களென்றும் சொல்லக்கேட்கிருேம். இப்படிச் சொல்வோருடைய கருத்தென்ன? 'இப்படி மேலே சைவர்களென்று சொல்லப்பட்டவர்களெல்லாம் தங்கள் தங்கள் சமயத்துக்குரிய சின்னங்களணிதலை நீக்கிச் சைவ சமயத்துக்குரிய விபூதி, உருத்திராக்கம் முதலிய சின்னங்களை அணிந்து கொண்டார்களா? இல்லையே. அப்படியிருக்க அவர்களைச் சைவமென்று உலகத்தார்

சொன்னதற்குக் காரணமென்னவெனில், முன் அவர்கள் மதுமாம்ஸ பக்ஷணிகளாக்விருந்து பின் விட்டுவிட்டதனால் அவர்கள் சைவமாய் விட்டார்களென்று உலகத்தில் பலரும் பலவிடங்களில் சொல்லக்கேட்கிறோம். ஆனதால் சைவமென்ற வார்த்தைக்கு மதுமாம்ஸ பக்ஷணங்களை உண்ணாமல் விலக்குவதே இச்சைவத்தின் முக்கியமான கொள்கை யென்று வெள்ளிடைமலை யெனத் தெள்ளிதிற் புலப்படுமென்றால் சைவசமயத்திலேயே பிறந்து, சைவ சமயத்துக்குரிய விபூதி, உருத்திராக்கதாரணஞ் செய்து சிவபெருமானை வழிபடும் இச்சமயத்தவர் எந்த வண்ணம் நடக்கவேண்டும்? இவர்கள் சீவகாருண்யம் நிறைந்த மனதோடு மதுமாம்ஸ பக்ஷணங்களைச் சொப்பனத்திலும் விரும்பாதவர்களாயிருக்கவேண்டுமன்றோ?

வினா :—ஆனால் சிவ சின்னங்களை யணிந்து சிவபெருமானை வழிபடும் இச்சமயத்தவர்கள் மேற்சொன்ன வண்ணம் நடக்கின்றார்களா?

விடை :—இச்சமயத்தவரில் சிறு பான்மையோர் மேற்சொன்ன ஆசாரத்தின்படி நடக்கிறார்கள். பெரும்பாலார் சீவகாருண்ய மில்லாமலும் மதுமாம்ஸ பக்ஷணமுள்ளவர்களாகவுமே யிருக்கிறார்கள்.

வினா :—இச் சைவசமயத்தைப் போலவே வைணவசமயமும் சீவகாருண்யம் முதலானவைகள் நிறைந்துள்ளது தானா?

விடை :—ஆம். அதற்கென்ன சந்தேகம். இவ்வுலகத்திலுள்ள பல சமயங்களுள்ளும் இரு கண்களைப் போல்

விளங்கக் கூடிய இவ்விரு சமயங்களுந்தான் சீவகாருண்யம் நிறைந்துள்ளவையாயும் மதுமாம்ஸ பக்ஷணங்களைச் சொப்பனத்திலும் விரும்பாமலுமிருக்கிற உயர்வாகிய சமயங்களாகும்.

வினா :—அப்படி யிருக்க இவ்விரு சமயங்களிலும் பலர் ஜீவகாருண்யமின்றி மதுமாம்ஸ பக்ஷணிகளா யிருக்கின்றார்களே, அது என் ?

விடை :—சைவ சமயாசாரியர்களும், ஆழ்வாராதிகளு மிருந்த காலத்தில் எல்லாம் பரம்பரைச் சைவர்களே. பிற்காலத்தில் அரசுரிமைகொண்ட மகம்மதிய வரசர் முதலான நீச ராஜாங்கத்திலுட்பட்ட இவர்கள், 'அரசனெவ்வழி குடிகள் அவ்வழி' என்பதுபோல் தங்களாசாரத்தினின்றும் தவறினார்கள். அச்சந்ததியிலேயே பழகிவந்து விட்டமையால் இப்போதிருக்கும் இவர்களும் இவ்வண்ணமானார்கள். இனிமேல் ஜீவகாருண்ய விளக்கமுதலிய பல நன்னூல்களைப் பார்த்து இவ்வசுத்தமாகிய புலைப்பொசிப்பை யொழித்து முன்போல் பரம்பரைச் சைவர்களாவார்களென்பதற்கு யாதொரு தடையுமில்லை.

வினா :—இம்மாம்ஸத்தைப் புசிக்கின்றவர்களே இதை அன்னிய பதார்த்தமென்று சொல்லுகிறார்களே அது என்ன ?

விடை :—ஆறறிவுள்ள மனிதர்களாகிய நம்மவர்களுக்குக் காய், கனி, கிழங்கு, கீரைமுதலானவைகளெல்லாம் சொந்த பதார்த்தமாகும். நம்மில் வேறாகிய சில

துஷ்ட மிருகங்களுக்கும், பட்சிமுதலானவைகளுக்கு முரியது அன்னிய பதார்த்தமென்று ஏற்படுகிறது.

வினு :—புலையரென்று சிலரைச் சொல்லுகிருர்கள். அவர்களைத் தீண்டப்படாது, தீண்டினுல் ஸ்நானம் செய்ய வேண்டுமென்கிருர்களே அது என்ன ?

விடை :—புலாலுண்பவன் புலையன், கொலை செய்பவன் கொலைஞன், வலையைக்கொண்டு மச்சங்களைப் பிடிப்பவன் வலைஞன் என்று அவர்கள் செய்யுமிழிதொழிலால் அவரவர்களுக்கு இப்பெயர்கள் வந்தன.

வினு :—அப்படியானுல் உயர்ந்த குலத்தில் பிறந்து புலாலுண்பவரை யென்னென்று சொல்வது?

விடை :—அவர்களும் புலையரேயாவார். பன்றி, கோழி முதலானவைகள் புலையர் சேரியிலவர்கள் மலமெல்லாந்தின்று தங்கள் சரீரங்களை வளர்க்கின்றன. புலையரைத்தொட்டால் ஸ்நானஞ்செய்யும் புனிதர்கள், புலையர்மலங்களைத்தின்று சரீரம்வளர்க்குமிவைகளைத் தீண்டினுல் ஸ்நானஞ் செய்யத்தானேவேண்டும் ? இதுவன்றியும் தம்மினத்தவரில் ஒருவன் தம்மில் தாழ்ந்தகுலத்தான் வீட்டில்சென்று போஜனம் செய்து வருவானுகில் அதைக் கேள்விப்பட்டுத் தாழ்ந்த குலத்தில் போய்ச் சாப்பிட்டுவிட்டு வந்தாயாதலின் நீயும் தாழ்வடைந்தாய், உன் வீட்டில் தாகசாந்தியும் செய்யமாட்டேனென்று நின்று விடுகிருன். இவ்வளவு உயர்வுடைய இவன் மேற்சொன்ன பன்றி, கோழி முதலானவைகளின் மாம்ஸத்தை நாணமின்றிப் புசிக்கிருன். இப்படிப் புசிக்கிறவனெவ்வள வுயர்வுடையவனுகிலும்

புலையரினும் கீழ்ப்பட்ட புலையனாவான். இது சத்தியம். மாம்ஸம் தின்பவர் புலையரென்பதற்குப் பிரமாணம்.

பறையரைப் பறையரென்று பறைந்திடு மனிதர்கேளீர்
பறையர்தம் மலத்தைத்தின்ற பன்றியைப் புசிப்பதென்னோ
கறையதே யாகுமந்தக் கறிதனைக் கலத்தினிட்டு
மறையவே வைத்துத்தின்னு மனிதரே பறையர்கண்டீர்.

புலையென்னும் புலைதீரப் புனலென்னும் புனன்மூழ்கி
யலைகின்ற மூழமூட ரறிவென்ன வறிவென்ன!
புலையன்றன் மலமுண்ணு மெமையுண்ணும் புலையர்க்குக்
குலமென்ன நலமென்ன கூகூவென் றனகோழி.

—சிவவாக்கியர்.

அன்றியும் மாம்சம் தின்பவன் வீடும் புலையன் வீடே யாகும்.

(இ - உ - ம்.)

கடும்புலையன் வீடே விடக்குண்பான் வீடு.

—சிவவாக்கியர்.

கொலைவினை யார்கிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. —திருக்குறள்

என்னும் ஆன்றோர் வாக்குப்படி மாம்சபக்ஷணம் செய்பவன் வீடும் புலையன் வீடே.

வினா:—உலகத்தவர் பிணமிருக்க அருந்தப்படா தென்கிறார்களே அதென்ன?

விடை:—ஒருவரிறந்து போனா லப்பிணத்தை யெடுத்து சுத்தஞ் செய்து சுடுகாட்டில் கொண்டுபோய்த் தகனம்

அல்லது புதைத்தல் செய்து திரும்பிவந்து ஸ்நாநம் செய்து சாப்பிடுவது வழக்கம்.

**வினா:**—இப்படியானால் உயிர் நீங்கியதெல்லாம் பிணந் தானே. அவைகளை யெல்லாம் அப்படிச் செய்கின்றார் களா?

**விடை** :—இல்லையே. ஆடு, பன்றி, கோழி, பட்சிகள் முத லானவைகளின் உயிரைப்போக்கி அப்பிணங்களைச் சமைத்து அருவருப்பின்றி உண்ணுங் கலத்தில் வைத்து நாச்சுவையோடு நாவைத்தட்டி மிக நன்றாய் இருக்கிறதென்று சொல்லிச் சந்தோஷத்தோடு தின் கிறார்களே, பிணமிருக்க அருந்தப்படாதென்று சொல் லும் இவர்கள் பேரறிவு இப்போது எங்கு போயிற்று? இவர் கருத்து மனிதப் பிணங்களுக்குத்தான் தீட்டு, தகனஞ்செய்வது, ஸ்நானஞ் செய்வது, மிருகம், பட்சி முதலானவைகளுக்கு இந்தத் தீட்டில்லை யென்பதே யாகும். இவர்களைப் போன்ற பேரறிவாளர்கள் உலகத் தில் தேடியெடுத்தாலும் கிடைப்பதருமையாகும்!

(இ - உ - ம்.)

பிணங்கிடக்க நாணுகரே னென்றுநீ பேசுங்
குணங்கிடக்க வேண்டியதென் கூறாய் - பிணத்தைக்
கலத்திலே யிட்டுக் கலந்து நாவாரப்
புலத்தினுற் றின்றாய் புகல். —புலான்மறுத்தல்.

எனு மான்றோர் வாக்கா லறிக.

**வினா** :—சுடுகாடென்பதென்ன?

**விடை** :—உயிர்போன பிணங்களைக் கொண்டு போய்ச் சேர்க்குமிடம் சுடுகாடென்று சொல்லப்படும்.

வினு :—அப்படியானுல் உயிர்நீங்கிய எல்லாப் பிணங்களே யும் அச்சுடுகாட்டில்தானே கொண்டுபோய் அடக் கஞ் செய்யவேண்டும் ?

விடை :—ஆம், அப்படிச் செய்யக் காணுமே. மேலேபறக் கும் பட்சிகளேத் துப்பாக்கி முதலானவைகளேக் கொண்டு கொலேசெய்தும், கீழே நடக்கும் மிருகங் களேக் கத்திமுதலான கொலேக் கருவிகளேக் கொண்டு கொலேசெய்தும் அப்பிணங்களே யெல்லாம், துன்பத் தைத்தரும் பாபகாரியங்களில் சுகித்திருந்து அவற் றைப் போக்கிக்கொள்ளும் வழியில் சேரமாட்டாத பிணங்களாகிய அற்பவறிவுள்ள துட்டர்கள் வயிருகிய சுடுகாட்டில் அடக்கஞ்செய்கிருர்கள்.

(இ - உ - ம்.)

துக்கத் துட் டுங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்குங் காடே புலன்கெட்ட
புல்லறி வாளர் வயிறு: —நாலடியார்.

பாவிகள்வயிறே இறந்த பசு, பட்சி முத்லானவைகளேப் புதைக்கும் சுடுகாடென்று நிந்தனே செய்தலினுல் பேரறிவாளர்கள் சொப்பனத்தும் மாமிசத்தை யிச்சி யார்.

வினு :—உலகத்தில் தின்னுஞ்சாதி, தின்னுத ஜாதி எனஜாதி யிரண்டு; அவைகளுள் தின்னுஞ்சாதி மாமிசத்தைத்தின் றே வரவேண்டும்; தின்னுதஜாதி மாமிசத்தை ஒருகா லுந் தின்னப்படாதென்கிருர்களே இவற்றின் கருத் தென்ன ?

விடை :—மேல் சொன்னது சத்தியம். தின்னுஞ் ஜாதி தின்னுவிடினும், தின்னாத ஜாதி யொருக்காலுந் தின்னவே யொண்ணாது. இதில் தின்னுஞ்ஜாதி யெதுவென்றால் பூதம், பிசாசு, நாய், நரி, கோட்டான், கழுகு, பருந்து, ஈ, எறும்பு, காகம் முதலியவைகள். யாதொரு பிணங் கிடக்கக் கண்டவிடத்து அதனசுத்தம் துர்க்கந்த முதலானவைகளைப் பார்த்து அருவருப்பின்றிச் சூழ்ந்து கொண்டு பிடுங்கித் தின்னுதலாலும், இது நல்லது இது தீயதென்றும், இது புண்ணிய மிது பாவமென்றும், பகுத்துங் கேட்டு மறிதற்கு ஓர் விவேகமில்லாத படியினாலும் அவைகளே தின்னுஞ் ஜாதி. வேதாகமங்களைக் கேட்டுப் பாவமிது புண்ணிய மிது வென்றறிந்து புண்ணியத்துக் குள்ளும், பாவத்துக்குப் புறம்புமாக நடந்து போக மோக்ஷங்களை யடையவேண்டினவனாதலால் மனுஷனே தின்னாத ஜாதி.

(இ - உ - ம்.)

நாய்கழுகு கூகைநரி காகமீ யெறும்பு
பேயிவைக ளாவி பிரிந்தவூன்—நேயமொடு
தானருந்த லல்லாது சற்காரிய மனிதர்
தானருந்த லாவதோ தான். —புலான்மறுத்தல்.

அப்படித் தின்னுஞ் ஜாதியாகிய மிருகம் பட்சிகளுள்ளும் முன்னம் ஒரு நாரையானது கொல்லா விரதியாயிருந்து ஞானத்தை யடைந்து மதுரையில் சிவசாரூபம் பெற்றது.

(இ - உ - ம்.)

பிரிவறக் கொன்றுதின்னுங் கடைப்படும் பிறப்புநாரை
வானுறு தேவராகி வான்றொழ விருப்பக்கண்டீர்

கருதுதிரென்றும் பொல்லாக் கடையராயினுங் கொல்லாம
லாணவந் திப்பரேல் வானுள்வதற் கையமின்றே.
—திருவிளையாடல்.

இன்னும் அகஸ்தியராதி மகரிஷிகளிருக்கு மிடங்களிலுள்ள துட்ட மிருகங்களும், மச்சம் முதலானவைகளை அருந்தும் பட்சிகள் முதலானவைகளும் தம்மை எவர்கள் கொன்று அருந்துகிறார்களோ அவர்கள் அவ்விலங்கு பட்சிகளின் மயிர்களெத்தனையோ அத்தனை கோடி காலம் ரௌரவாதி நரகத்திலழுந்திப் புலாலுண்ட வாயில் புழுக்கள் நெளிய வருந்துவார்களென் றறிந்து கொல்லா விரதியராய் ஞான நெறி பூண்டு விளங்கின வென்று வேதாகம புராணங்களிற் கூறியுள்ளன.

(இ - உ - ம்.)

கொன்று விலங்கின் றசைநுகருங்
கொடுமை யோரவ் விலங்கினுடல்
துன்று மயிரெத் துணையாமத்
துணைய காலம் வெந்நரகி
னென்றி நுகர்வாய்ப் புழுவொழுக
வுழப்ப ரென்கை யுணர்ந்தேயோ
கன்று சினவெங் கொடுவிலங்கும்
புலவூன் றின்னக் கருதாவால்.

ஒருமீன் புலவு வாய்மடுப்பி
னொழியுந் தசைக ளனைத்தினையும்
பரிவால் நுகர்ந்தோர் வீழ்கின்ற
பாழ்வெந் நரகிற் படிவரெனு

அருமா மறையின் பொருடேர்ந்தோர்
அந்தா மரைநாண் மலர்ப்பொதுளும்
விரிநீர் வாவி பயின்மீன்கள்
விழுங்கா துலவும் புள்ளினமே.

ஆனதா லிதுவரையில் மாம்சம் தின்னுஞ் ஜாதி மிருகம் பட்சி முதலானவைகளென்று மவைகளிலுஞ் சில கொல்லா விரதியாயிருந்து வீடடைந்தன வென்றும், மனிதப் பிறவி யெடுத்தவர்க ளெல்லாரும் தின்னாத ஜாதி யென்று மேற்பட்டன.

வினா :—ஆனால், தங்களைத் தின்னுஞ் ஜாதியென்று பேர் வைத்துக்கொண்டு மாம்சத்தைத் தின்கிறார்களே, எல்லாப் பிராணிகளின் மாம்சத்தையுந் தின்கிறார்களா ?

விடை :—இல்லை. மச்சங்களைப் புசிப்பதுபோல், முதலை அட்டை முதலானவைகளைப் புசிப்பதைக் காணோம். கோழி, கொக்கு முதலானவைகளைப் புசிப்பதுபோல் கருடன், பருந்து, கழுகு முதலானவைகளைப் புசிக்கக் காணோம். உடும்பு, ஆமை முதலானவைகளைப் புசிப்பதுபோல் ஓணான், பல்லி முதலானவைகளைப் புசிக்கக்காணோம். ஆடு, மாடு, பன்றி முதலானவைகளைப் புசிப்பதுபோல் குதிரை, கழுதை, நாய் முதலானவைகளைப் புசிக்கக்காணோம். இதுவன்றியு மிவர்களுண்ணுமாகாரத்தில் ஈ, எறும்பு, பாச்சி, கறுப்பான் முதலானவைக ளிறந்திருக்கக் கண்டால் அரோசிக மடைந்து உண்ட அன்னத்தையும் வாந்தி செய்து மிச்ச அன்னத்தையும் புறம்பே கொண்டு

போய் எறிந்து விடுகிறார்கள். இதுவன்றியும் இவர்கள் சாப்பிடும் ஆடு முதலான மிருகங்கள், இவர்கள் போஜனம் பண்ணுமிடத்தில் வந்து சாணம், மூத்திரம், கோழை முதலியவைகளை விசர்ச்சனஞ் செய்யுமாகில் மிக்க அருவருப்படைந்து அவற்றை வெளியில் துரத்தி அந்த இடத்தைச் சுத்திசெய்து ஆகாரங்கொள்ளுகிறார்கள். முன் சிறுபிராணிகள் அன்னத்திலிறந்து போயிருத்தலைக்கண்டு உண்ட அன்னத்தை வாந்தி செய்து, மிச்ச அன்னத்தை எறிந்துவிட்ட போறிவாளர்கள், ஆடுமுதலானவைகளின் மாமிசத்தை அன்னத்தில்கலந்து அருவருப்பின்றிப் புசிக்கின்றார்களே! இப்பரிசுத்தர்களைப் போன்ற மேலோர்கள் உலகத்தில் ஒருவர் கிடைப்பது அருமையாகும். அன்றியும் நாய், கழுதை, பன்றி, கோழி இவைநான்கும் மலத்தைத் தின்கின்றன. மலத்தைப்புசிக்கும் பிராணிகள் தாழ்ந்தவைகள் தானே. இவைகளைத் தீண்டலாமா? புசிக்கலாமா? அப்படிப் புசிப்பதாயிருந்தால் இந்நான்கு பிராணிகளையும் தாராளமாய்ச் சாப்பிடலாமே. ஏனோ பாவம் நாயையும், கழுதையையும் தள்ளிவிட்டார்கள். இவர்களுக் கில்வுலகத்தும் மறு வுலகத்தும் வேறாகிய நரகமென்பது ஒன்று வேண்டுவதேயில்லை.

(இ - உ - ம்.)

உண்டிடுஞ் சோற்றினூடே யோர்மயி ரெறும்பியாதுங்
கண்டுமுன் பருந்திலாய்முன் பயின்றதுங் கான்றிட்டாயான்
மண்டனிற் பன்றியாதி மலத்தைமுன் பழக்கத்தாலுட்
கொண்டிட விரும்புமாறென் கூறுதி யறிவிலாதோய்.

தகருன தெதிரேசிந்தத் தான்தெரித் திட்டகோழை
புகலுமுன் மீதிற்ருக்கப் பொருதுளங் குலேந்துற்ருயாற்
பகர்தரு மவற்றினூனைப் பற்றிய மூளையோடு
மகமகிழ்ந் தயின்றவாறென் னறைகுதி யறிவிலாதோய்.

கூறுநாய் கழுதைபன்றி கோழியு மலத்தைத்தின்னும்
வீறுடன் கழுதைநாயை விரும்பியே தின்னுதென்கோ
தேறியே தெளிந்துபார்க்கிற் றீதான மலமாமெல்லாம்
வேறுமோர் நரகத்தெல்லே விதிக்கவு மிவர்க்குவேண்டாம்.
—சிவவாக்கியர்.

மேற்சொன்னவைகளுக்கு இவ்வான்ருேர் வாக்கே பிரமாணம்.

வினு :—பலர் பலநூல்களேயும் கற்றறிந்து காலட்சேபம், பிரசங்கம், உபந்யாசம், இவைகளின் மூலமாகப் பிறருக்கு ஜீவகாருண்ய முதலான நல்லறிவைப் போதிக்கின்ருர்கள். அவர்களிற் சிலர் தாங்கள் மாத்திர மிவ்வண்ணம் நடவாமல் சைவத்துக்கு விரோதமாக மதுமாம்ச பட்சணம் செய்கிருர்களே? அது நற்காரியமா ?

விடை :—அல்ல. உலகத்தில் ஞானத்தைத் தரும் கல்வியானது மேலானதுதான். அதைப் பழுதற வாசித்தல் வேண்டும். அப்படிக் கற்றபிறகு அந்நூலெவ்வண்ணஞ் சொல்லிற்ருே அவ்வண்ணமே நடத்தல் வேண்டும்.

இதுபற்றியே நாயனுரும்,

கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக. —திருக்குறள்.

எனக் கூறியுள்ளார்.

வாசித்தவர்க ளிடத்துக் காருண்யம் வேண்டுமென் பதை 'மன்னுகலை கற்ரோர்க் கழகு கருணையே' யென நீதி நூலாரும் கூறியுள்ளார். ஆனலிக் கருணையின்றிச் சைவத் துக்கு விரோதமாக வாசித்தவர்கள் மதுமாம்ச பட்சணங்க ளைச் செய்வாராகில் அவர் இம்மை மறுமைகளிலடையும் துன்பத்துக்களவே யில்லை. தெரியாதவன் செய்த குற்றத் துக்கு ஒரு பங்கு தண்டனையானல் தெரிந்து செய்தவன் குற்றத்துக்கு ஆயிரமடங்கு தண்டனை யதிகமாகும். நூல்கள் சொன்ன வண்ணம் நடப்பவர்களே உத்தமர்கள். அப்படி நடவாதவர்கள் கர்த்தபத்திற்குச் சமானமானவர்கள்.

(இ - உ - ம்.)

கழுதைக்கும் கற்றவர்க்கும் கட்டுரை யொப்பொன்றே
கழுதை பிறர்க்குதவும் கற்பூரம்—முழு நூலாய்ந்
தோதுவார் தாம்பிறருக் கோதியுணர்ந் துள்ளபடி
சாதியா ராதலி ஞற்ருன். —சிவஞானவள்ளல்.

விஞ :—இப்படிப்பட்டவர்கள் சொல்லும் சாஸ்திரார்த்தங் களை நாம் கேட்கலாமா?

விடை :—கேட்கப்படாது. எனெனில், சத்தியம், ஆசாரம், ஒழுக்கம், கருணை முதலானவையில்லாமல், கொலைசெய் தல், மதுமாம்ச முண்ணல் முதலான பாதகங்களையே நன்னெறியாகக் கொள்ளுந் தீயோர் சிவபெருமானல் அருளிச் செய்யப்பட்ட வேதாகம புராணங்களை வாசி த்தல் கூடாது. அவர்கள் வாசித்துப் பிறருக்குப் போ தித்தாலும், அதை நாம் கேட்கப்படாது. கல்வி விசே டந்தானே, அதைக் கேட்டா லென்னவெனில்,

நீலோற்பல மலரானது புலையர் வசிக்கும் சேரியில் அவர்கள் சாக்கடை நீர் தங்கு மிடத்துப் புஷ்பித்திருந்தால் அது ஒருவருக்கும் பயன்படாது. அன்றியும் தீயவர்களிடத்தில் கல்வியானது விசேடமா யிருந்தாலும், அவரை மேலானவர்க ளென்று நினைத்து அவரோடு நெருங்கிப் பழகுதலும், அவர் வார்த்தையைக் கேட்டலுங் கூடாது.

(இ - உ - ம்.)

நிலையுறுதி யாசார மொழுக்கஞ்சில
நிறையறிவு கருணை தவ நெறிநிலாமற்
கொலைகளவு கட்காம முதலாவுள்ள
கொடும்பாவ மேதவமாக் கொள்ளுந்தீயோ
ருலகிலருஞ் சிவனருணூ லோதலாகா
தோதினுமங் கவருரைகொள் ளொணாதுநீலம்
புலையர்மரு விடுங்தெருவிற் பொல்லாக்கும்பி
பொருந்தியிடுங் குழியதனுட் பூத்ததாமே.
—சிவஞான தீபம்.

தீயவர்பாற் கல்வி சிறந்தா லு மற்றவரைத்
தூயவரொன் றெண்ணியே துன்னற்கச்—சேயிழையே
தண்ணொளிய மாணிக்கஞ் சர்ப்பங் தரித்தாலும்
நண்ணுவரோ மற்றதனை நாடு. —நீதி வெண்பா.

என்று ஆன்றோர்கள் கூறியுள்ளதால் தீயவர்களிடத்துக் கல்வியானது புலையர் சேரியிலிருக்கும் நீலோற்பல மலரும், விடம் நிறைந்த சர்ப்பத்தி னிடத்திலுள்ள மாணிக்கமும் போல் பயன் படாததாகும்.

வினு :—ஞானி, அக்கினிக்கொப்பென்றும், யாதொரு பொருள் வந்து சார்ந்ததாயினும் அக்கினி அதனைச்சுட்டுநீறுக்குதல் போல ஞானியானவனும் யாதொரு புசிப்புவந்தடைந்த போதிலும் நன்று தீது பாராமல் கொண்டு அதை ஞானக்கினியால் தகனம் பண்ணிப் போடுவான். ஆதலின் ஞானமில்லாதவரே புலாலுணவை விடவேண்டும். ஞானியுண்பதில் கெடுதியில்லையென்று சொல்லுகிறார்களே, அதெப்படி ?

விடை :—மேற்சொன்ன வார்த்தை பழுதாகும். அக்கினிக்குச்சமானம் ஞானி யென்பதொக்கும். அது பற்றி முற்கூறியது அர்த்தமன்று. மற்றெங்ஙனமெனில், ஞானியானவன் சஞ்சித கர்மத்தைக் குரு கடாட்சத்தால் போக்கிப், பிராரத்த கர்மத்தையெடுத்தவுடலின் கண்ணே அநுபவித்துத் தொலைத்து மேலுமொரு ஜன்மத்துக் கேதுவாகவரும் ஆகாமிய கர்மத்தைத் தற்போத மிறந்த விடத்துண்டாகிய ஞானக்கினியாற் சுடுதலின் ஞானி அக்கினிக் கொப்பென்பர். அன்றியும் உலகத்தில் ஞானியானவன் தோற்றப் பட்ட பொருள்களை யெல்லாம் வேறு வேறாகப்பாராமல் எல்லாம் பகவத் சொரூபமாகப் பார்ப்பன். இது பற்றியே ஞானிகள் பேதபுத்தி யில்லாதவர்களென்றும், அபேதபுத்தியுடைய வர்களென்றும் சொல்லப்படுவர்.

(இ - உ - ம்.)

பார்த்தவிடமெல்லாம் பரமன்கா ணம்மானை
பாராம லிந்நாளும் பாழ்பட்டே னம்மானை

—திருவம்மானை.

தேவராய் நிற்கு மத்தேவு மத்தேவரில்
மூவராய் நிற்கு முதுபுணர்ப்பும் — யாவராய்
நிற்கின்ற தெல்லாம் நெடுமாலென் றோராதார்
கற்கின்ற தெல்லாங் கடை. —நாலாயிரப் பிரபந்தம்.

எனும் ஆன்றோர் வாக்காலுணர்க. அன்றியும், ஞானியானவன் நன்று தீது பாராம லெந்த வாகாரத்தையும் புசிப்பானென்றால் நாய், கழுதை, குதிரை முதலானவைகளின் மாமிசத்தையும் புசிக்கவேண்டும். மலாதிகளை ஒருவரிட்டாலும் புசிக்கவேண்டும். இப்படியவர் நடப்பாரெனிலிதுவறியாமையில் முதன்மை யாகும். ஆனதாலிது ஞானிகளிலக்கண மன்று. பிறப்பை யொழிக்கவல்ல ஞானிகள் நடக்கு மொழுக்கம் யாதெனில் ஆசாரத்தையே ஆடையாகத் தரித்து, மோட்ச வீடே வமிர்தமாகக் கொண்டு, ஞானமாகிய மடந்தையைத்தமக்குரிமையாக்கி, அருளையேகொடையாகக் கொண்டு அறத்தையே கடைப்பிடித்து, குற்றத்தை முழுதும் விடுத்துச், சாந்தமென்பதைப் பிடித்துத் தன் சரீரத்தையே தவக்குகையாக்கி ஆசாரியர் திருவடித் தாமரை மலரைச் சிரசுக் கணியாக்கி நடப்பார்கள்.

(இ - உ - ம்.)

உடுப்பது சீல முணவு வீட்டமுத
முவப்பது ஞானமா மடந்தை
கொடுப்பது மருளைக் கொள்வது மறத்தை
யிருப்பது மருந்தவக் குகையாம்
விடுப்பது குற்றந் தொடுப்பது சாந்தம்
வெல்வதுந் தன்மை மெய்க்குரவ
னடித்தல மலரே முடிப்பது பிறப்பை
யறுப்பவர்க் கருந்தொழி லிவையே.
—மெய்மொழிச் சரிதை.

இதன்றியும், மெய்ஞ்ஞானிகள், வேதாகமங்கள் விதித்த நன்னெறியில் சிறிதேனும் தவறாமல், பிறரால் தமக்கு ஒரு கெடுதி வரினும் அவர்களுக்குப் பதில் கெடுதி செய்ய நினையாமல், ஈசுவர நியமமாகத் தமக்கு அக்கெடுதி வந்ததென்று கொள்ளும் கொள்கையராய்ப் பிற உயிர்களுக்குக் கெடுதியான காரியங்களைச் செய்யவே மாட்டார்களென்பதனால் அஞ்ஞானிகள் ஆசை மிகுதியால் கொலை புலாலுண்ணுதல் முதலிய துர்க்கருமங்களைச் செய்வரென்பதாயிற்று.

(இ - உ - ம்.)

வேதத்தி லாக மத்திற் புகறாய விதிதவறார்
கோதுற் றிடினுந் தமதற் றிருப்பர்கள் கொள்கையன்றித்
தீதைத்தின முனைப்போலும் புரிந்து செந்நெறியா
வாதிப்ப ரோகெடு வாய்சிவ ஞானங்கை வந்தவரே.

—அருட்பிரகாசம்.

அன்றியும், திருக்குறள், திருமந்திரம், மூவர் தேவாரம், திருவாசகம், வேதாகம முதலிய நூல்களும் ஞானிகள் கொலையாதி பாதகம் செய்யலாமென்று சொல்லவேயில்லை.

நிலையாம் புலமைகொள் வள்ளுவர் மூலர் நிகழ்த்துசைவத்
தலையாய மூவர் திருவாத வூரர் தருதமிழு
ளிலையாக மாதியுங் கூறா வுனக்கிவ் விருநிலமேற்
கொலையாதி ஞானி பணலாமென் றாரெவர் கூறுகவே.

—அருட்பிரகாசம்.

அன்றியும், ஆணைப்பெண்ணாக்கியும், பெண்ணை ஆணாக்கியும், இறந்தவர்களை யெழுப்புகின்ற வல்லமையுடையவனானாலும், காருண்யமின்றிக் கொலைக்கருவியைக் கொண்டு

பிறவுயிர்களைக் கொலை செய்து உண்பானேயாகில், ஆசாரியர், சிவபெருமான் இவர்கள் ஆணையாக அவனை ஞானியென்று சொல்லவே கூடாது.

மருவாணைப் பெண்ணுக்கி யொருகணத்திற்
கண்விழித்து வயங்கு மப்பெண்
ணுருவாணை யுருவாக்கி யிறந்தவரை
யெழுப்புகின்ற வுறவ னேனுங்
கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக்
கடிந்துண்ணுங் கருத்த னேலெங்
குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொ ணுதே.

—இராமலிங்க சுவாமிகள்.

எனும் பெரியோர் வாக்கால் கொலை செய்து மாம்சம் புசிப்பவன் ஞானியல்ல வென்று ஏற்பட்டது.

வினு :—உலகத்தார், படிப்பது, திருவாசகம், இடிப்பது சிவாலயம்; படிப்பது திருவாய்மொழி, இடிப்பது திருமாலாலயமென்று சொல்லுகிறுர்களே ; இக்கூற்றுக்களின் கருத்தென்ன?

விடை :—இவ்வுலகத்திலுள்ள சகல ஆன்மகோடிகளின் சரீரங்களிடத்து ஈச்வரன் அந்தராத்மாவாக விருக்கிறுர்.

(இ - உ - ம்.)

எறும்புகடை யானைமுதல் பேதாபேதம்
எண்பத்து நான்குநூ றுயிரத்துள்
உறும்பொருளாய் நின்றசிவன் ஒருவன்

—உடலறி விளக்கம்.

என்றுஆன்ஞேர் கூறியவண்ணம் எல்லாச் சரீரங்களும் ஈசுரனிருக்கும் ஆலயங்களாகும். ஈசுரனைக் குறித்து ஆன்ஞேர் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகம், திருவாய்மொழி முதலிய தோத்திரப் பாக்களை எப்போதும் அருமையாகப் பாராயணம் பண்ணுபவர் ஈசுரனுக்கு ஆலயங்களாகவுள்ள சரீரங்களை ஆலயங்களாகக் கருதாமல் கொலைசெய்துண்பார்களாயின் அவர்களே அவ்வாலயங்களை யிடிப்பவராகின்ஞேர்கள். ஆனதால் ஈசுரபத்தியோடு தோத்திரப்பாக்களைப் பாராயணம் பண்ணும் அன்பர்கள் எல்லாச் சரீரங்களையும் ஈசுராலயங்களாகவும் அவைகளில் தங்கிய உயிர்களைத் தம் உயிரைப் போல் பாராமல் கொன்றுண்பார்களாயின் அவர்களைத் தேகாந்தியத்தில் யமதூதர் கொண்டுபோய்ப் பலவகையாகத் தண்டித்து இரும்பை யுருக்கி யவர்வாயில் வார்த்துக் கொடிதாகிய எழுவகை நரகங்களிலும் அழுத்தி வருத்துவார்களென நூற்கள் கூறும்.

(இ - உ - ம்.)

எவ்வுயிரும் பராபரன்சந் நிதியதாகு
மிலங்குமுட லுயிரனைத்து மீசன்கோயில்
எவ்வுயிரு மெம்முயிர்போ லென்றுநோக்கி
இரங்காது கொன்றருந்து மிழிவிஞேரை
வவ்வியம தூதருந் தண்டஞ்செய்து
வல்லிரும்பை யுருக்கியவர் வாயில்வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்திமாரு
வேதனைசெய் திடுவரென வோதுநூலே.

—சிவஞானதீபம்.

வினு :—கொலை செய்யாதவரைக் கொலை செய்யும்படிக்கும் மாம்சந் தின்னுதவரைத் தின்னும்படிக்கும் தண்டித்தவர் அடையும் கதி என்ன?

விடை :—அப்படிச் செய்தவர்கள் சிவபெருமானுணையாக எழுநரகங்களிலும் விழுந்து நெடுங்காலம் துன்பமனுபவிப்பார்கள்.

(இ - உ - ம்.)

கொன்றிலா ரைக்கொலச் சொல்லிக் கூறினர்
தின்றிலா ரைத்தினச் சொலித்தண் டித்தார்
பன்றி யாய்ப்படி யிற்பிறந் தேழ்நர
கொன்று வாரர னுணையி துண்மையே.

—சிவதருமோத்தரம்.

வினு :—அவர்களுக்குப் பயந்து கொலைசெய்தவனும், மாமிசந் தின்றவனும் அடையுங் கதி என்ன ?

விடை :—அப்படிச் செய்பவரும் நரகமே யடைவர்.

(இ - உ - ம்.)

கொலையஞ் சாதொரு வற்கஞ்சிக் கொன்றுளோர்
சிலர்சொ லஞ்சிப்பு லாவினைத் தின்றுளோர்
நிலைய தாய்நர கத்திடை நிற்பரென்
றலகி னூன்மறை யாகம மோதுமே.

—சிவதருமோத்தரம்.

ஆனதால் தம்மினும் மேம்பட்டார் தண்டனையால் கொலை செய்தலும், புலாலுண்பதும் நேர்ந்தால் உடனே இப்பாவ மொழியவேண்டும் என்னும் தீவிரத்தோடு, விஷமுண்டவனொருவன் அதைப் போக்கிக்கொள்ள மாற்றவிழ்

தந் தேடுவது போல, பெரியோர்பாற் சென்று விண்ணப்பித்து அவர் வாக்குப்படியே பாவம் நீங்கப் பரிகாரம் செய்துகொண்டு அத் துஷ்டர்களின் கூட்டுறவை ஒழித்துவிட வேண்டும். அப்படிச் செய்யாமல் மீண்டும் அவர்களோடிருந்து அவர் சொன்னபடியே செய்வானானால் இவனும் நரகமடைவது சத்தியம்.

வினா :—தாங்களோருயிரையும் கொல்வதில்லை, கொலை செய்பவரையும் பார்ப்பதில்லை, புலால்மாத்திரம் வாங்கிப் புசிப்பதுண்டு, அதனாலெங்களுக் கென்ன பாவமென்று சொல்லுகிறார்களே, அதெப்படி?

விடை :—உலகத்தில் புலாலுண்பவர்க ளில்லாதிருந்தால் உயிர்க் கொலை செய்து மாம்சம் விற்பவரே யில்லையாகும். இதுபற்றியே நாயனாரும்,

தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். —திருக்குறள்.

எனக் கூறியுள்ளார்.

அன்றியும், மாம்சபட்சணஞ் செய்பவன் மனது கொலையையே யிச்சித்திருக்கும். அவன் ஒருவன் கொலை செய்யுமிடத்து அதை விலக்கினால் அம்மாமிசந் தான் வாங்க அகப்படாதென்று விலக்கமாட்டான். ஆகவே கொலையை யிச்சித்த தோஷம், கொலை தடுக்காத தோஷம், மாம்சபக்ஷணதோஷம் ஆகிய இம்மூன்று விதப் பாவங்கள் அவனைச் சேரும். மாம்சம் தின்பவனை விழுங்கிய நரகமானது மீண்டுமுமிழ்தற்கு வாய் திறவாது எனவும் ஆன்றோர் கூறியுள்ளார். அன்றியும்

மாம்ச விச்சையால் கொலை செய்ய நினைப்பவன், கொலை செய்வதைக் கண்டிரங்காதவன், கொலை செய்பவரைத் தடுக்காதவன், அவரை நேசித்தவனாகிய நால்வரும் நரகத்தை யடைவர்.

(இ - உ - ம்.)

"உண்ண ஊனை விரும்பி உயிர்க்கொலை
யெண்ணு வான்கொலை கண்டிரங் கான்கொலை
பண்ணு வாரைத் தடுத்துப் பகர்கிலா
நண்ணு வானிவ ரோடெனும் நால்வரும்.

—சிவதருமோத்தரம்.

அன்றியும், கொலை செய்தவன், கொலை செய்யச்சொன்னவன், அதைச் சேதித்து விற்றவன், அதைச் சமைத்தவன், அம்மாமிசத்தைத் தின்றவன், மாமிசந்தின்பது பாபமென்று சொல்லி விலக்காம லவனோடு சேர்பவனாகிய இவ்வறுவரும் பலகோடி நரகங்களில் நெடுங்கால மழுந்தி வருந்துவார்.

(இ - உ - ம்.)

கொன்றான் கொலச்சொனான் கூசவறுத் தானட்டான்
றின்றான் விலக்கிடான் சென்றென்று—கொன்றவனக்
குட்டவங்க ளிட்டெரிக்க வெந்துகொடு வெந்நரகிற்
பட்டழுன்று வீழ்வார் பதைத்து. —இதிகாசம்.

ஆனதால் மாமிச டட்சணஞ் செய்தல் முதலானவை யெல்லாம் மிக்க பாதகம்; நிரயத்துன்பந் தருமென்றாயிற்று.

வினா :—'கொன்ற பாவம் தின்றால் தீரும்' என்று உலகம் சொல்லும் வார்த்தையின் கருத்தென்ன ?

விடை :—பிறவுயிர்கள் வருந்தும்படி கொலைசெய்ததனால் வந்த பாவம் அவ்வகையான கொலைத் துன்பத்தைத் தானனுபவித்தால் நீங்கும்.

நல்வினை தீவினைப் பயன்களை யனுபவித்தே தீரவேண்டு மென்பதனை

'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்'

என்ற ஔவையார் வாக்கினாலறிக.

வினா :—தன்னியல்பாய் மரித்த சீவன் மண்ணினை மாத் தினை யொக்கும். அதைச் சாப்பிட்டால் பாவமில்லை யென்கிறார்களே, அதெப்படி ?

விடை :—எவ்வண்ணமாவது மாம்சத்தைத் தின்பானாகில் அவனுக்கு அருளென்பதில்லை. அவனடைவது நரகமே.

(இ - உ - ம்.)

பொருளாட்சி போற்றா தார்க்கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு. —திருக்குறள்.

எனவும்

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். ஷை

எனவுங் கூறலால் மாமிசந் தின்பவன் நரகமடைவது சத்தியம், மாமிசந்தின்னும் புலையரை யமதூதர்கள்கொண்டு போய்த் தீவாய்நரகிடை மல்லாக்கத்தள்ளி மறித்துவைப்பர்.

(இ - உ - ம்.)

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
யெல்லா ருங்காண வியமன்றன் றூதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய் நரகிடை
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே.—திருமந்திரம்.

அன்றியும், நாள்தோறும் தவறாமல் கங்கையில் ஸ்நானம் செய்தாலும், சிவபெருமானைத் திரிகாலங்களிலும் வழிபட்டாலும், கைம்மாறு கருதா மேகம் போல் சோடசதானம், முப்பத்திரண்டு தருமங்களும் செய்தாலும், ஐயந்திரிபில்லாமல் ஞான சாஸ்திரங்களை யெல்லா முணர்ந்தாலும் மாமிசம் புசிப்பவன் போய் நரகமடைவது சத்தியம்.

(இ - உ - ம்.)

கங்கையிற் படிந்திட் டாலுங் கடவுளைப் பூசித் தாலும்
மங்குல்போற் கோடி தன்மம் வள்ளலாய் வழங்கி னாலுஞ்
சங்கையில் லாத ஞான தத்துவ முணர்ந்திட் டாலும்
பொங்குறு புலால் புசிப்போன் போய்நர கடைவனன்றே.

எனவரும் ஆன்றோர் வாக்காலு முணர்க.

வினா :—ஒருவன் தன் சரீரத்திலுள்ள பெரும் புண்ணைப் பார்த்து அருவருப் படைகின்றான். அவனே பிறஉயிரின் தேகமாகிய புண்ணை அருவருப் பின்றி உண்கிறானே, அதெப்படி ?

விடை :—அதைக் கூறுமிடத்து மிகவுமனுசிதமாகத் தானிருக்கிறது. ஒருவனுக்குத் தன் தொடையில் பெரிய கட்டிவந்து பலநாள் உபத்திரவப்பட, ரணவைத்தியர் வந்து சுத்தஞ்செய்து மருந்துவைத்துக் கட்டுக்கட்டுவது வழக்கம். இப்படியிருக்க ஒருதினம் கட்டவிழ்த்துச் சுத்தஞ்செய்யும்போது அவன் தன் கட்டியிலுள்ள இரத்தம், சீழ், தசை, மூளை, கிருமி முதலானவைகளைக் கண்டு அருவருப்புற்றுத் திரும்பித் தன் கண்களை மூடிக் கொண்டான். பிறகு அப்புண்ணைக் கண்டவனு

சிதமானது தன்மனதைவிட்டு நீங்காமையா லன்று பக லுண்ட வாகாரத்தையும் வாந்திசெய்து இரவிலுமாகா ரங்கொள்ள மனது பிடியாமல்,மறுநாட்காலையில் வைத் தியர் வந்தவுடனே, வைத்தியரே! இதுவரையில் நீங்க ளென் கட்டியின் கட்டை யவிழ்க்கும்போது நான தைப் பாராமல் முகத்தைத் திருப்பிக் கண்களை மூடிக் கொள்வது வழக்கமல்லவா? அப்படியிருக்க நேற்றைய தினமதைப் பார்க்கலாமென்று நான் பார்த்த மாத்தி ரத்தில் அதிலுள்ள, இரத்தம் சீழ், நிணம், மூளை, கிருமி முதலானவைகளைப் பார்த்து மிக்க அருவருப் படைந்து பார்க்கச் சகியாமல் உடனே என் கண்களை மூடிக்கொண்டேன். அதுவன்றியும் பகலாகாரம் செய் யும்போது அவ்வனுசித மென்மனதைவிட்டு நீங்கா மையால் உண்டவன்னத்தையும் வாந்தி செய்து விட் டேன்; நேற்றிரவும் சாப்பிடவில்லை. அதை நினைக்குந் தோறும் எனக்கு மிகவருவருப்பாய் இருக்கிறது. நீங் கள் கேட்கும் பொருளைத் தடையின்றிக் கொடுக்கிறே ன், நான்குதினத்தில் கட்டியைக் குணப்படுத்தி விடுங் கள். உங்களுக்கு மிக்கவந்தன மென்று சொல்லுகிறா ன். இது இவனுடைய சொந்த சரீரம். மாதா, பிதா, மனைவி,புத்திரர் முதலானவர்களிடத்து வைத்திருக்கும் பற்றைக் காட்டிலு மிச்சரீரத்திடத்திவனுக் கதிகப்பற் றுகும். அன்றியும் பலவித முயற்சி செய்து பொருள் தேடுவது மிவன் சரீர போஷணைக்கே யாகும். இவ்வ ளவு அருமையான சரீரத்தில் ஒரு புண்வந்தபோது மிக்கவருவருப்டைந்து உண்டவாகாரத்தையும் வாந்தி செய்தவன் ஆடு, பன்றி, கோழி, புறு முதலான

பிராணிகளின் சரீரமாகிய புண்ணை இப்பரிசுத்தனு கிய பரமபுத்திசாலி உண்கலத்தி லெப்படி வைத்துக் கொண்டானே,இவன்கை யெப்படி அருவருப்பின்றித் தொட்டதோ, இவன் கண்களெப்படிக் கூசாமலதைப் பார்த்ததோ, வாய் எப்படிக் குமட்டாமலதை உட் கொண்டதோ, பற்களெப்படி அதை மென்றதோ, நாக்கெப்படி யதைச்சுவை பார்த்து உள்ளே தள்ளிற் றே,இவன் வயிறுகிய சுடுகாடு இவற்றையெப்படியடை க்கலமாகக் கொண்டதோ, இவைகளுக் கெல்லாம் தலைமையான மனது எப்படி சகித்திருந்ததோ, வென் பது தெரியவில்லை. முன் தன் சரீரத்திலுள்ள புண்ணை ப்பார்த்துத் தன்னினமாகிய இவைகளெல்லாம் அரு வருத்தன. மனதும் துக்கமடைந்தது. இப்படியிருக்க ஆபாசமான மிருகங்கள் முதலானவைகளின் மாம்சத் தை உண்ணுங் காலத்துத் தேகத்திலுள்ள அவயவங் களுக்கும் மனதுக்கும் அருவருப்புந் துக்கமுஞ்சிறிது மில்லை போலும்! அந்தோ! பரிதாபம், இவ்வகைப் பட்ட மனிதஜன்மமு மிவ்வுலகத்தி லிருக்கிறது.

(இ - உ - ம்.)

உண்ணுமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். —திருக்குறள்.

எனும் ஆன்றோர் வாக்கா லுணர்க.

விஞ :—இவ்வுலகத்தில் சிலர் மாக்கறி பதார்த்தத்தைக் காட்டிலும் மாம்சபோசனஞ் செய்வது சரீரத்துக்கு வலிமை யென்று சொல்லுகிறுர்களே, அதெப்படி?

விடை :—அப்படியவர் சொல்வது அறியாமையே யாகும். எப்படி யெனில் இவ்வுலகத்தில் யானை, குதிரை ஒட்டகம், எருது, குரங்கு, மான் முதலானவைக ளெல்லாம் சாகபக்ஷணந்தானே செய்கின்றன. இவைகளில் ஒட்டகம் பாரமான சுமையைத் தாங்கிச் செல்கிறது. குதிரை வண்டி முதலானவைகளை வேகமாக இழுத்துச் செல்கிறது. வண்டியடித்தல், ஏர் உழுதல் முதலான கடினமான வேலைகளை எருது செய்கின்றது. யானை முன் சொன்னவைகளைக் காட்டிலும் அதிக பலமுடையது. மானைப்போ லோடுகிற சக்தி வேறு பிராணிகளுக்குக் கிடையாது. குரங்கைப் போல் ஒருமரத்திலிருந்து பிறமரத்தில் தாவுஞ் சக்தி வேறெந்த மிருகத்துக்கும் கிடையாது. ஆனதால் மாம்சபட்சணம் பண்ணுவதில் வலிமையுண்டென்பது சிறிதும் பொருந்தாது. இதனுல் மாம்ச போஜனத்தைக் காட்டிலும் மரக்கறி போஜனத்தில் சரீரவல்லமை அதிகமென்று ஏற்படுகிறது. அன்றியும் மாமிசங்களை யுண்பது சரீரத்திற்குப் பலக்குறை வென்றும், அது சர்வ வியாதிகளுக்கு மேது வென்றும், அவர்களுக்கு வியாதிவந்தால் சீக்கிரம் நிவர்த்தியாகா தென்றும், மரக்கறி பதார்த்த முண்பதால், சரீரந் திடகாத்திர மடையுமென்றும், அவர்களுக்குக் கொடுமையான வியாதிகள் வாராவென்றும், வந்தாலும் சீக்கிரத்தில் நிவர்த்தியாகுமென்றும், மிருகம் பட்சி முதலானவைகளின் மாமிசத்திலிருக்கும் வலிவைக்காட்டிலும், உளுந்து, துவரை, பச்சைப் பயறு, கோதுமை, பட்டாணி, உருளைக்கிழங்கு, கருணைக் கிழங்கு, கத்தரிக்காய், வாழைக்காய், அரைக்

கீரை, பால், தயிர், நெய், பாலேடு, முதலானவைகளை உண்பதால் பதின்மடங்கு வலிமை யதிகமென்று தற்காலத்தில் பிரபல ஆங்கிலேய டாக்டர்கள் பற்பலரும் தங்கள் வைத்திய சாஸ்திர ஆராய்ச்சியின்படி மிக விரிவாகவும் தெளிவாகவும் எழுதியிருக்கிறார்கள். அன்றியும், யுத்தவீரர்களிலும் (சிப்பாய்களிலும்) மாம்ச பக்ஷணம் பண்ணும் வீரர்களைக் காட்டிலும் மரக்கறி பதார்த்தமுண்ணும் வீரர்கள் மிக்க தைரியத்தோடும் உற்சாகத்தோடும் யுத்தஞ் செய்வதாகச் சொல்லுகிறார்கள். ஆனதால் மரக்கறி பதார்த்தமே சரீரத்துக்குச் சுகத்தையும், பலத்தையும், நோயின்மையையும் தருவதென்றேற்படுகிறது.

வினா :—மாம்சபக்ஷணம் பண்ணும் பிராணிகளின் குணமும் சரீர நிலைமையும, சாகபக்ஷணம் பண்ணும் பிராணிகளின் குணமும் சரீர நிலைமையும் ஒன்றுக்கொன்று வித்தியாச முண்டோ?

விடை :—உண்டு. மாமிச பக்ஷணம் பண்ணும் புலி, காடி, சிங்கம், கோநாய், குடத்தி முதலான இவைகளெல்லாந் துஷ்ட குணமுள்ள மிருகங்கள். இவைகள் கொடிய குணத்தால் ஒற்றுமையாகவுங், கூட்டமாகவுமிரா. காட்டில் தனித் தனியாகத் தான் வசிக்கும். அன்றியும் மாம்சத்தை யுண்ணும் துஷ்ட மிருகங்களுக்குப் பிராணிகளை உண்பதற்கே பல் வரிசைகள் திரட்சியாயும், கூர்மையாயும் அமைக்கப் பட்டிருக்கின்றன. மாம்சத்தை யுண்ணு மிவைகளுக்கு ஜீரணக் கருவியான குடல்களும் குறுகி யிருக்கின்றன. இவை

களின் கால் விரல்களிலுள்ள நகங்களும் கூர்மையா யிருக்கின்றன. ஆனால் சாகபக்ஷணம் பண்ணுகிற மனிதர், ஆடு, மாடு, மான், யானை முதலானவைக ளெல்லாம் சாந்தகுணத்தோடு ஒற்றுமையாக விருந்து கூட்டங் கூட்டமாக வசிக்கக் காண்கிறோம். பல் வரிசைகளும் தட்டையாகவே அமைக்கப்பட் டிருக்கின் றன. நீண்ட சுற்றளவுள்ள ஜீரணக் கருவியான குடல்களு முண்டு. இவைகளுக்குக் கூர்மையான நகங்களு மில்லை. ஆனதால் மாம்ச பக்ஷணிகளுக்கும் சாக பக்ஷணிகளுக்குமுள்ள குணத்திலும் தேகவமைப்பிலும் வித்தியாசம் காணப்படுகிறது. இவ்வித தேகவமைப் பினாலும் குணுகுணங்களாலும் மனிதன் சரீரம் சாக பக்ஷணத்துக்காகவே கடவுளால் அமைக்கப்பட்ட தென்று நன்றாய்த் தெரிகின்றது.

வினா:—ஆனால் இந்து தேசத்தி லிருக்கப்பட்ட நம்மவர்க ளெந்தக்காலமும் தவறாமல் மாம்ச பக்ஷணம் செய்து வருகிறார்களா?

விடை:—அப்படிச் செய்வதில்லை. வருஷப்பிறப்பு, அமாவாசை, கிருத்திகை, சிரார்த்தம், சோமவாரம், ஏகாதசி, சிவராத்திரி முதலான விரதகாலங்களிலும், புரட்டாசி, கார்த்திகை முதலான மாதங்களிலும், விவாக காலங்களிலும், இறந்த வீட்டில் கர்மம் நடக்கும் வரையிலும் பலர் மாம்சம் புசிப்பதில்லை. அன்றியும், தினே தினே அவர்கள் பூஜைசெய்யும் விநாயகர், சண்முகர், நடராஜர், கிருஷ்ணமூர்த்தி, இராமமூர்த்தி முதலான திருவுருப்படங்களுக்குத் தேங்காய், பழம், பொங்கல்,

சித்ரான்னம், மரக்கறி பதார்த்தங்களை நிவேதனம் செய்வதுபோல் அவர்கள் புசிக்கும் மாமிசத்தையும் அவைகளுக்கு நிவேதிக்கிறார்களாவென்று கேட்டால், 'என்ன ஐயா எங்களை அப்படிக் கேட்கின்றீர்கள், அவ் வசுத்த பதார்த்தங்களையா அத்தெய்வங்களுக்கு நிவேதிப்பது? அப்படிச்செய்தா லது எங்களுக்கு மாபாதகமல்லவா? அது அன்னிய பதார்த்தந்தானே, எங்கள் வீட்டிலது சமைக்குமிடமும் வேறு, அதற்குச் சமையல் பாத்திரங்களும் வேறு, அப்படியிருக்க, அதைச் சுவாமிக்கு நிவேதிக்கிறீர்களா வென்று நீங்கள் கேட்பது, எங்களுக்கு நாணமாயிருக்கிறது' என்று சொல்லுகிறார்கள். அந்தோ! பரிதாபம், இவர்களுக்கு விரத தினங்களில் கிடையாது. விவாக காலங்களில் கிடையாது. இறந்த வீட்டில் கர்மம் நடக்கிறவரையில் கிடையாது. இவர்கள் வீட்டிலிருக்கும் சுவாமிகளுக்கும் நிவேதிப்பதில்லை. இவர்கள் வீட்டில் சமைக்கும் இடமும் பாத்திரமும் வேறு. வேறென்று சொல்லும் புனிதர்கள், ஏனோ இன்னும் இந்த மாம்சத்தை விடக்காணோம். தற்காலத்தில் பிறந்ததுமுதல் முழு மாம்ச பக்ஷணிகளாகவே தினந்தினம் தவறாது புசித்துவரும் மேல்நாட்டாராகிய வெள்ளையர்களில் பலர் மாம்ச ஆகாரத்தைக் காட்டிலும் மரக்கறி பதார்த்தமுண்ணுதல் சரீர வலிமையும், நோயின்மையும், புத்திக் கூர்மையும், தருவதென்று தங்களனுபவத்தில் கண்டறிந்து காய்கறிகளும், பாலும், நெய்யும், பழவர்க்கங்களுமே சிறந்தனவென்று உண்டு வருங் கூட்டம் (வெஜிடேரியன் சொசைடி) நாளுக்கு நாள் விருத்திய

டைந்து வருகிறது. அம்மேல்நாட்டில் ஆதிகாலத்தில் வசித்திருந்த பிரபல மேதாவியர்களான, ப்ளூடார்க், பிதோகோராஸ், ஸெனிகா முதலானவர்களும் பிற்காலத்தில் மில்டன், ந்யூடன், ரே, தாம்ஸன், போப் டாக்டர் ஹால்க்வெட், டாக்டர் சைம், நியூமன் இன்னும் பல மேற்புல மேதாவிகளும் மாக்கறியாகாரத்தை அனுஷ்டித்தவர்களாகத் தெரிகிறது. முற்காலத்தில் அமெரிக்காவிலும் பலர் சைவ ஆகாரத்தையே உண்டு வந்ததாகவும் இப்பொழுதும் பலர் மாக்கறியாகாரத்தை உண்டுவருகிறதாகவும் நாம் கேட்கிறோம். அன்றியும் இப்போது இங்கிலாந்தில் கோபால்டு என்னும் கார்தூசியா மடத்திலுள்ள கிறிஸ்தவத்துறவிகள் புலாலுணவு கொள்வதே கிடையாதாம். அதனாலவர்களுக்கு நோய்கள் மிகுதியுமில்லையாம். அன்றியும் சுற்றுப் பக்கங்களில் விஷக்காய்ச்சல் மிகவும் கொடுமையாய்ப் பரவியபோது, மடத்திலுள்ளாரைத் தொடரவில்லையாம்.

வினா:—உலகத்தில் கொடும் வியாதியா லிறப்பவர்கள் யாவர்?

விடை—வாந்தி பேதி, பிளேக், வைசூரி, க்ஷயரோகம் முதலானகொடிய வியாதியாலிறப்பவர்களுள் நூற்றுக்குத் தொண்ணூற்றேழு பேர் கொலை செய்து மதுமாமிச பட்சணஞ் செய்யும் கொடியவரே யாகும்.

வினா:—கருடனிடத்து வணக்கமும் தோத்திரமும் செய்யுமன்பர்கள் வைகுந்தவாசர் கொண்ட திருவுருவங்களிடத்து அன்பைச் செலுத்துகின்றார்களா?

விடை :—இல்லை. விஷ்ணுகொண்ட திருவவதாரமாகிய மச்சம், வராகம், கூர்மம் முதலானவைகளிடத்து நம் பெருமானெடுத்த திருவுருவங்களென்னும் பக்தியின்றி அவைகளைக் கொன்று தின்பதில் அன்பைப் பூரணமாகச் செலுத்துபவரா யிருக்கிறார்கள்.

வினு :—உலகத்திலிருக்கும் மிருகம் பட்சி முதலானவைகளுக்கு மனிதர்களால் உதவியுண்டா?

விடை :—இல்லை. இவைகளாகாரத்துக்கு ஏதாவது அன்ன தான சாலை அமைத்துளோமா! அவைகளுக்கு வியாதி வந்தால் அதுகாரணமாக தர்ம ஆஸ்பத்திரி அமைத்துளோமா! அந்தோ பரிதாபம்! ஆயுதபூசை, தீபாவளி, ஏகாதசி கழித்த மறுநாள், போகி பண்டிகை, ஆடி மாதம் வரும் அம்மன் சாத்திரை முதலான விசேட தினங்களி லெல்லாங் கூட ஆடு, பன்றி, கோழி முதலானவைகளைக் கொலை செய்து உண்ணும் உபகாரத்தைத்தான் உலகத்திற்செய்யத் தயாராயிருக்கிறார்கள்.

அன்றியும் மிருகத்தினைப் பயகதி யென்பர். அதற்குக் காரணமெப்போதும் மனதில் பயமே குடி கொண்டிருக்குமாம். ஒரு பிராணி இறக்கும்போது அதன் பயத்துக்கும் மனத்துடிப்புக்கும் அளவே கிடையாது. இத்துடிப்பினால் இரத்தந்துடித்து இரத்தங் கலந்திருக்கும் மாம்சமுந் துடித்துப் பிராணன் நீங்கி விடுகிறது. அத்துடிப் படங்கி யிருக்கின்ற மாமிசங்களை உண்ணுகின்ற மனிதரின் இரத்தவோட்டத்தில் அது கலந்து பிறகு மனதிற் கலப்பதனால் மனம் சலனத்தையும் பீதியையு மடைகிற தென்று நூல்கள் கூறுகின்றன.

ஆனதால் புலாலுண்பவர்க்கு மனதில் சஞ்சலமும், பயமும் எப்போதும் நீங்கா வென்பதாம். ஆடு, பன்றி முதலியவைகளை யுண்பவர்களுக்கு அம்மிருகங்களின் குணமே பொருந்துமாம்.

வினு :—நம் வேதாகமங்களிற் கொல்லாமை, புலான் மறுத்தல் கூறி யுள்ளது போலக் கிறிஸ்தவ சத்திய வேதமென்கிற பைபிலிலும், மகம்மதியர் வேதமென்னும் கொரானிலும் கூறியிருக்கின்றனவா ?

விடை :—ஆம், கூறியிருக்கின்றன. (பைபில்) 'உலகத்திலிருக்கும் விதை தரும் மூலிகைச் செடிகளையும், விதை தரும் பழமுடைய மரங்களையும் உனக்குக கொடுத்திருக்கிறேன்; அவை உனக்கு உணவாகக் கடவன'. (கொரான்) 'சில மிருகங்களை மூட்டை சுமப்பதற்கும், தாவரவர்க்கங்களை உணவுக்காகவும் உண்டாக்கி யிருக்கிறேன்'.

வினு :—சைவ சமயத்தைப் போலவே புத்த சமயமும் கொல்லாமையை மேற்கொண்டுள்ளதா ?

விடை :—ஆம். அதெதற்கென்ன சந்தேகம். இச்சமயத்துக்கு முதல்வரான கௌதம புத்தர் கருணை வள்ளல். கஷ்ட மென்பதை பார்க்கவாற்ருதவர். யாக கிருத்தியங்களில் ஹிந்துக்கள் பலி கொடுப்பதைக்கூட அவர் பார்க்க முடியாது பரிதவித்தவர். கொலையைச் செய்தலே கூடாது, புலாலுண்பதே யாகாது எனத் துசங் தொடுத்த தூயமஹாத்மா அவர் ! அருளே நிறைந்த அவாது சமயம் அகில மெல்லாம் பரவி ஆனந்தம் விளைக்கின்றது! சைனு, பர்மா முதலிய தேசங்களில்

கோடிக்கணக்கான ஜனங்கள், புத்த சமயத்தைப் பின்பற்றி வருகிறார்கள். ஆயினும் அவர்களிற் பெரும் பாலோர் அநாசார வழிகளைப்பற்றிப் பல்லியையும், தவளையையும், இன்னும் பற்பல இழிந்த ஜந்துக்களை யும் புசிப்பதுஆச்சர்யமாக இருக்கிறது. ஆதி குருவாக் கியத்தில் இவர்களைப்போல் தவறாது நடக்கும் புண் ணியர்கள் உலகத்தில் தேடி யெடுத்தாலு மகப்படார்!

வினு :—உலகத்தில் பெரிய நியாய ஸ்தானம் வகித்து ஒரு வருக்கும் கெடுதியின்றி மன்னுயிரை யெல்லாம் தன்னு யிரைப் போலப் பார்த்து அரசுபுரியு மறிவாளரிடத்து ஜீவகாருண்யம் நிறைந்திருக்கு மல்லவா ?

விடை :—அதுபற்றிக் கூறுவாம். நம்மவர்களிற் பலர் சுய பாஷையும், இராஜபாஷையும் கற்று வல்லுநராய் நியாயசபை, தண்டசபை முதலான பெரியவதிகார பதவிகளிலிருந்து மெலியாரை வலியார் வருத்திய காலத்து நடுவு நிலைமையாகக் கண்டனை தண்டனை செய்து எல்லா மக்களையும் ஒரே படித்தாகப் பார்க் கும் பேரறிவாளர்களிற் சிலர், பிற உயிர்களை யிம்சை செய்து அவ்வுணவை உண்ணும் ஒன்று மாத்திரம் அவர்களுக்கு நன்கு விளங்கவில்லை. எவ்வளவோ சட் டங்களை அறிந்தவர்கள் இவர்கள் அதிகார உயர்வும், சமரசத் தன்மையும், பேரறிவுடைமையும் தனியாக விருந்து யோசித்துப் பார்ப்பாராயின் இது நன்கு விளங்கும். இவர்கள் சொல்லப் பயன்படுவர் சான்றோ ரெனும் பெருந்தன்மை யுடையவர்கள். ஆறறிவுள்ள மனிதர்களெல்லாரிடத்தும் ஒரு படித்தாக அன்பைச்

செலுத்து மிப் பேரறிவாளர்கள், கீழான பிராணிக ளுக்கும் எவ்வகை யிம்சையுமின்றி நடப்பதே இவர் அறிவுடைமைக் கழகாகும். அல்லாவிடில் இவர் அறி வுடையாரென்று சொல்லப்படார்.

(இ - உ - ம்.)

அறிவினா லாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போல் போற்றாக் கடை.

—திருக்குறள்.

இவ்வான்றோர் வாக்கால் மேலான உத்தியோக பதவி யிலிருப்பவர்கள் எல்லாவுயிர்களிடத்தும் காருண்யமுடைய வராயிருக்க வேண்டு மென்பது நன்கு விளங்குகிறது.

வினா :—உலகத்தில் புலா லுண்ணுமலும் அவ்வுணவு காரண மாகக் கொலை செய்யாமலு மிருக்கும் சைவர்கள் மேலானவர்கள் தானே?

விடை :—ஆம். அவர்க ளவ்வளவில் மேலானவர்கள் தான். ஆனாலிவர் மாதா பிதாக்கள் சைவர்களாயிருந்த வண் ணமே இவர்களு மிருக்கிறார்கள். இச்சைவர்களிற் பலர் சமயம், விசேடம் முதலான தீக்ஷைகளைக் குரு வாயி லாகப் பெற்று அநுஷ்டிப்பதில்லை. இதினும் இவர்கள் சிவபூஜை செய்வது மிகவும் துர்லபம். இதுவன்றியும், தங்களை யொத்த மக்களிடத்துப் பொருள்வருவாய் காரணமாகவும், பகை காரணமாகவும் கொலைமுதலான பல உபத்திரவத்தை யுண்டு பண்ணுகிறார்கள். இவர் செய்யு மிவைகளெல்லாம் ஜீவகாருண்யத்துக்கு முற் றும் விரோதந்தானே. ஆனதாலிவர்களை மேலானவர்

களென்றெப்படிச் சொல்வது? ஆனால் இவர்களைப் பார்க்கிலும் மாதா பிதாக்கள் பழக்கத்தால் புலாலுணவு, அது காரணமாகக் கொலை முதலானவை செய்து வந்தவர் பெரியோர்பாலடைந்து அவர் சொல்லும் ஜீவகாருண்யம் முதலியவைகளைக் கேட்டமாத்திரத்தில், தாம் இது வரையில் பாவங்களுக் கெல்லாம் முதன்மையான தீயகாரியங்களைச் செய்தோ மென்று விசாரிக்கத் தொடங்குகின்றார்கள். தெளிந்தவுடனே யவைகளை யொழித்து மீண்டும் சொப்பனத்தும் நினையாது தங்கள் குடும்பங்களையும் தம்மைச் சேர்ந்தவர்களையும் தம் வழிப்படுத்தி ஆறறிவுள்ள மக்கள் முதலான எல்லாருக்கும் எவ்வகையான துன்பமும் செய்யாது காருண்யமுடையவராய் ஈசுரபத்தியி லொழுகுபவரா யிருக்கின்றார்கள். இவர்கள் முன் சொன்ன சைவர்களைக் காட்டிலும் ஆயிரம்பங்கு மேலானவர்கள்.

வினா :—சிலர் மாமிசம் நிறைந்த தேகத்துக்கு மாமிசமே சாப்பிடவேண்டு மென்கிறார்களே அதெப்படி?

விடை :—அப்படிச் சொல்வது மிகவும் மூடத்தனமாகும். இது மலம் நிறைந்த சரீரம். எந்தக்காலத்தும் மலம் சரீரத்தை விட்டு நீங்கின தில்லை. மலம் நிறைந்த சரீரத்துக்கு மலத்தை யுண்பாராகில் மாமிசம் நிறைந்த சரீரத்துக்கு மாமிசம் உண்ணலாம்.

(இ - உ - ம்.)

நீ மலத்து உளமென்று மலத்தை உணின்
ஊனுக்கு ஊன் இடுதி —கொலைமறுத்தல்,

எனவும்

ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிது.

—இன்னா நாற்பது

எனவும் ஆன்றோர் கூறி யிருக்கின்றனர்.

வினா :—சைவர்களாகிய நீங்கள் பசு ஆடு முதலானவைகளின் பாலை யுண்கிறீர்களே, அது அவைகளின் இரத்தத்தின் மாற்றந்தானே, நீங்கள் பாலை யுண்பதுபோல நாங்கள் அவற்றின் மாம்சத்தை யுண்ணுகிறோம், அதனால் எங்களுக்கு மாத்திரம் பாவமும் கெடுதியும் உண்டென்று சொல்லுகிறீர்களே, அதெப்படி?

விடை :—இப்படி அவர்கள் கேட்பது மிகவும் மூடத்தனமேயாகும். பசுவினிடத்து அதன் கன்றின் மூலமாக நாம் பாலைப் பெறுகிறோம். அது கன்றின்மீது வைத்த அன்பின் மிகுதியினால் பாலைச்சொரிகிறது. அப்பசுவையும், கன்றையும் ஆகாராதிகளால் போஷித்து கன்றுக்குப் போதுமான பாலை விடுத்து மிச்சத்தை நாம் உட்கொள்ளுகிறோம். இதனால் யாவருக்கும் ஒருவிதமான தீங்கும் உண்டாவதில்லை. இப்படிச் சொல்பவர்கள் தன் குழந்தையினிட மிருக்கும் அன்பின் மிகுதியால் தாய்க்குப் பாலுண்டாகிறது. அதனாலத்தாயானவள் குழந்தையை அன்போடு பாலூட்டி வளர்த்து அன்னியரும் சிறிது பால், வயித்தியம் முதலானவைகளுக்குக் கேட்டால் அவர்களுக்கும் பிரியத்தோடு கொடுக்கிறாள், இது உலக இயற்கை. இப்படி யிருக்க 'நீங்கள் பாலுண்பது போல், நாங்கள் மாம்சத்தை யுண்ணுகிறோம், அதனால் எங்களுக் கென்ன கெடுதி' யென்று சொன்னவர்களைப் பார்த்து 'உங்களுக்குப்

பால் கொடுத்து வளர்த்த தாயை நீங்கள் கொலை செய்து உண்பீர்களா' என்றால் அதற்கு என்ன பதில் கூறுவார்கள்? ஒன்றுங் கூற அவர்களுக்கு ஏலாது. ஆகையால் அவர்கள் சொல்லும் உவமை பொருந்தாத தொன்று.

வினு :—ஒருவன் ஒரு பிராணியைக் கொன்று அதன் மாமிசத்தைப் புசிப்பானுனல் அவன் தேகாந்தியத்திலும் மறுமையிலும் அடையும் கதி என்ன ?

விடை :—இப்பிறப்பில் அம்மா வென்று அலற ஒருயிரைக் கொன்று சாப்பிடும் கொடியவர்கள் தேகாந்தியத்தில் அடையும் நரகத்துன்பத்துக்கு ஓரளவேயில்லை. அம்மா வென்றலற அவ்வுயிரைக் கொல்லும் போது அவ்வழியாக அதைக்கேட்டும், பார்த்தும் சென்ற தவத்திற் சிறந்த பெரியாரைத் தேகாந்தியத்தில் யமதூதர்கள் நரகத்தில் கொண்டு போய்ச் செலுத்துவார்க ளென்றால் கொலை செய்துண்பவர்களடையும் துக்கத்தை யென்னென்று சொல்வது ?

(இ - உ - ம்.)

அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
இம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றார்
அம்மா வெனுஞ்சத்தம் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்மா நிரையமெனில் புசித்தவற்கென் சொல்லுவதே.

—சிவஞான வள்ளலார்.

அன்றியு மிப்பிறப்பி லொருவன் எந்தப் பிராணியைக் கொலை செய்துண்டானே, மறுபிறப்பில் அவனப்பிராணியா

கவும் அது மனிதனாகவும் பிறந்து இவனைக் கொலைசெய்துண்ணும். இது சத்தியம்.

(இ - உ - ம்.)

கொன்றன வனைத்தும் அனைத்து நினைக்கொன்றன
தின்றனை யனைத்து மனைத்து நினைத்தின்றன.

—பட்டினத்தார்.

எனும் ஆன்றோர் வாக்காலுணர்க.

வினா :—உலகத்தில் உயர்ந்த குலமென்றும் தாழ்ந்தகுலமென்றும் சொல்லுகிறார்களே அதென்ன?

விடை :—உலகத்தில் நூல்களில் உயர்வு தாழ்வாகிய பல வருணங்க ளிருப்பதாகச் சொல்லியிருக்கிறது. ஆனால் உயர்ந்தகுலத்தில் பிறந்தானொருவன் குலாசாரந் தவறிக் கொலைசெய்து மதுமாம்ச பக்ஷண முதலானவைகளைச் செய்வானாகில் அவன் தாழ்ந்த குலத்தவனே யாவான். இதுசத்தியம். தாழ்ந்தகுலத்தில் பிறந்தானொருவன் நல்லொழுக்கத்தோடு கொலைசெய்யாமலும் மதுமாம்ச பக்ஷண முதலானவைகளைச் செய்யாமலுமிருப்பானாகில் அவன் உயர்ந்த குலத்தவனே யாவான். இதுவும் சத்தியம். இதுபற்றியே,

ஒழுக்கம் உயர் குலத்தின் நன்று

எனவும், —ஔவைப்பிராட்டியார்.

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும். —திருக்குறள்.

எனவும் கூறியுள்ளார்கள்.

வினு :—பிதா எந்த வண்ணம் மாமிச போஜன முதலான வைகளைச் செய்து வந்தானே அதுபோல் புத்திரனும் நடக்கவேண்டு மென்று சொல்லுகிறார்களே, அதெப் படி?

விடை :—இப்படிச் சொல்வது மூடத்தனமே யாகும். பிதா வானவன், கண்டவருங் கேட்டவரும் நகைக்கத் தக் கதும் பழிக்கத் தக்கதுமாகிய ஓர் தகாத காரியத்தைச் செய்தால் அவன் புத்திரனும் அதேமாதிரி செய்ய வேண்டு மென்பது நியதியோ? அன்றியும் பிதாவான வன் பிறர் பொருளைத் திருடி நான்கு வருடம் சிறைச் சாலையி லிருந்தால் அவன் புத்திரனும் அவ்வாறே திருடி நான்கு வருடம் சிறைச்சாலையில் இருக்க வேண் டுமோ? பிதா பிச்சை யெடுத்தானென்று அவன் புத்தி ரனும் பிச்சை யெடுக்க வேண்டுமோ? ஆனதால், பிதா தவறுதலாக நடந்தால் புத்திரனு மவ்வாறே நடக்க வேண்டுமென்பது கூடாது. நூல்களை யுணர்ந்த பெரி யோர்கள் சொன்னவண்ணம் நடப்பதே உசிதமாகும். இதுபற்றியே 'மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்' என ஔவையார் கூறியுள்ளார்.

வினு :—ஒருவன் விவேகமில்லாத காலத்து மாதாபிதாவின் பழக்கத்தாலும் துர்ச்சன சேர்க்கையாலும் கொலை செய்தல், புலாலுண்ணல் முதலிய பாதகங்களைச் செய்துவந்து பிறகு நல்லோர்பாலடைந்து அவர்சொற் படி அக்கொலையாதி பாதகங்களை விட்டால் புனிதனு வானோ?

விடை :—ஆம், புனிதனுவான், ஆனுல் முன்னே மாமிசாதிக ளைத்தின்ற கை, வாய், வயிறு முதலானவைகளிருக்கின் றனவென்ருல் அறியாத காலத்துச் செய்தாலும் அறிவு வந்த காலத்து விட்டதினுல் இவன் பரிசுத்தமாவ தற்குத் தடையில்லை. எப்படியெனில், ஒருவன் சிறு குழந்தையாய் இருந்த காலத்து மலத்திலே புரண்டு அம்மலத்தைத் தொட்டுத் தன்வாயில் வைத்துக் கொள்ள அப்போததைக் கண்டவனெருவன் அவ னுக்கு வயதுவந்த காலத்தவனைப் பார்த்து, 'நீ குழந் தையாயிருந்த காலத்து மலத்தில் புரண்டு அம்மலத் தைத் தொட்டு வாயில் வைத்துக் கொண்டா'யென்று சொன்னுல்,'நான்பகுத்தறிவில்லாதகுழந்தையாயிருந்த காலத்து நடந்ததை இப்போதேன் சொல்லவேண்டு' மென்று மறுப்பானே யன்றி, முன் தின்ற கையும் வாயுந்தானே யிருக்கின்றனவென்று சொல்லிப் பின் னும் மலத்தை யவனுண்பதைக் காணேம். அன்றியும், பைத்தியம் பிடித்தவன் ஒருவன், உண்ணத்தகாத வீடுகளிலுண்டு, செய்யத்தகாத காரியத்தைச் செய்த வன் அப்பைத்தியம் நீங்கிச் சுகமடைவானுனல், மீண்டு மப்படிச் செய்யக் கண்டிலோம். அன்றியும், குழந்தை யாயிருந்தகாலத்து ஆண்மக்களும், பெண்மக்களும் ஆடையுடுத்தாமல் மானமின்றித் தெருவில் விளையா டக் காண்கிருேம். ஆனுல் அவர்கள் வயது வந்தகாலத் தில் ஆடைதரித்துக் கொள்ளுகிருர்கள். பால்யத்தில் இதுபலரும் பார்த்ததுதானே, நாம் ஆடைதரிக்க வேண்டியகாரணம் என்னவென்று சொல்லி, அவ ராடை தரியாதிருக்கக்காணேம். ஆனதால், அறியாத

காலத்துத் தவருக நடந்தாலும் அறிவு வந்தகாலத்து ஒழுங்காக நடப்பாரானுல் அவர்கள் தெரியாது செய்த பாபமும் நீங்கி மேன்மையை அடைவார்கள்.

(இ - உ - ம்)

அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வும்—நெறியறிந்த
நற்சார்வு சாரக்கெடுமே வெயின் முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு. —நாலடியார்.

என்பதனுலு மறிக.

வினு :—ஆன்ம விச்சையை யடக்குதல் பாவம். புலாலுண்பவன் புலாலுண்பதை விட்டுப் பார்க்கவேண்டும், சரீரமொத்துக்கொண்டா லான்மவிச்சை யில்லை. ஒத்துக் கொள்ளாமல் வியாதிமுதலானது வந்தா லான்மவிச்சை யுண்டு. ஆனதா லான்ம விச்சையை யடக்குதல் கூடாது. புலாலுண்ணவே வேண்டுமென்கிறூர்களே, அதெப்படி ?

விடை :—அப்படிச் சொல்வது சரியல்ல. பெரியோர்வார்த்தையைக் கேட்டு மாமிசத்தை விட்டவன் அதேநோக்கமாய் வீண்வார்த்தை கேட்டுவிட்டோமே யென்கிற ஏக்கங்கொண்டு அதனுற் றூக்கங்கெட்டு வீக்கம் முதலான வியாதிவந்ததும், வைத்தியனுக்குச் சரீர நிலைமையைக் காட்ட, அக்கொலைகார வைத்தியன் நீங்கள் மாமிசத்தை விட்டதனுல் இவ்வியாதி வந்தது. அதைச் சேர்த்துக் கொள்ளுங்களென, அவன் சொன்னவண்ணமே மாமிசத்தையுண்டு வியாதி நீங்கினதாகச்

சொல்லுகிறான். வைத்தியன் சொன்னபடி நோய்நீங் குவதானால், கயரோகத்திற்குக் குரங்கு மாமிசத்தைத் தின்னும்படி சொன்னால் தின்பானா? இன்னும் சில பிரபல வியாதிகளுக்கு நாயையும், கழுதையையும் தின்னென்றால் தின்பானா? அப்படித் தின்பதில்லையே! வருவதெல்லாம் ஆடு, பன்றி, கோழி, முட்டை, மச் சங்களுக்குத் தானா வனர்த்தம்? ஆனதால் மாமிசம் தின்று வியாதி நீங்குமென்பதும், உயிரோடிருப்ப தென்பதும் முற்றும் பொய்யாகும். ஆன்ம விச்சையை யடக்குதல் பாவமெனில், உலகத்தில், காமவிச்சை யில்லா ஆண்மக்களும் பெண்மக்களுமில்லை. அப்படியா னால், அவ்விச்சை வந்தகாலத்து வரம்பின்றித் தாயார், சோதரி, பெண்ணென்று பாராமலும், பிதா, சோத ரன், புத்திரனென்று பாராமலும் சேர்பவருண்டோ? அப்படி அவர் நினைக்கும்போதே யிம்மையில் பிறரால் பழிப்பும், தேகாந்தியத்தில் ரௌரவாதி நரகத்துன்ப மும் வருமென் றஞ்சுகிறபடியாலும், ஊன் உண்டலும் மிகுந்த பாவமாதலின் பிராணஆனி வரினும் விஷம் போலக் கண்டு நீக்கவேண்டும். மது மாம்சாதிகளைத் தங்களிஷ்டப்படிப் புசியாவிடில் பிரபல வியாதிவரும், அதனாலுயிர் நீங்கிப் போமென்கிற இவர்களை, ஓர் கேள்வி கேட்போம். அதற்கு யாதுபதில் சொல்லுவார் கள்? இவ்வண்ணம் சொல்லப்பட்ட இவர்களை ஓர் தகாத காரியஞ் செய்து ராஜாங்கத்தாரால் தண்டிக்கப் பட்டு நான்கு வருடம் சிறையிலிருப்பதாக வைத்துக் கொள்வோம். இப்படி யிவர்கள் சிறைச்சாலையி லிருக் கும்போது இவர்களிஷ்டப்படியே அங்கு மதுமாம்சா

திகளை யிவர்கள் உண்ணக் கொடுக்கின்றார்களா? இல்லையே. இப்படிச் சிறைச்சாலையி லிருக்கப்பட்டவர்களுக் கெல்லாம் இஷ்டப்படி ஆகாரம் இல்லாததினால் பெரும் வியாதி அடையவுங் காணோம், மூற்று மிறந்து விடவுங் காணோம். சுகமாகவே யிருக்கிறார்கள். ஆனதால் ராஜாங்க தண்டனைக்கு அடங்கியிருப்பது போல ஈஸ்வர ஆணைக்கு இவர்கள் அடங்கியிருக்க வேண்டுமன்றோ?

(இ - உ - ம்.)

செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். —திருக்குறள்.

எனவும்,

பொல்லாங் கென்பவை யெல்லாந்தவிர்

எனவும், —ஔவையார்.

ஆசுறு மான்ம விச்சை யடக்குத லாகா தென்று
மாசுறு மூனைத் துய்த்து மாதுயர் நரகத் தாழ்வீர்
பேசிய தந்தை தாய்மேல் பெருகிய வாசை கூறிற்
கூசிடா தவர்க டம்மைக் கூடுதல் குணமோ கூறீர்.

எனவும் ஆன்றோர் கூறியுள்ளதால் இப்படித்தகாத காரியத்தில் ஆன்ம விச்சையைச் செலுத்துதலாகா தென்றேற்படுகிறது.

வினா:—கொலைசெய்யாமலும், புலாலுண்ணாமலு மிருக்கிற ஒருவன் அவ்விரண்டுஞ் செய்பவனுடைய வீட்டில், உண்பானாகில் அவனுண்ட வுணவும் அவனுயர்வும் எப்படியாகும்?

விடை :—தன்னை யொத்த ஆசார முடையவன் வீட்டில், உண்ணும் உணவே அமிர்தமாகும், அப்படியில்லாதவன் வீட்டில் உண்ணும் உணவு விஷமாம். புலையர் மனையிலுண்டவன் புலையனாவது போலக் கொலைசெய்து மாமிசபக்ஷணம் செய்பவன் வீட்டில் உண்பவன் கொலைஞனும் புலையனுமாவான். இதனாற் பரிசுத்தனாயினும் நரகமடைவ னென்பது நிச்சயம்.

(இ - உ - ம்.)

கொலையி லானுதவு மன்னங் கூறிற் போமுத மாகுங்
கொலையுளா னுதவு மன்னங் கூறிற்பேர் விடம தாகும்
புலையர் தம்மனையி லுண்போன் புலையனா மாறுபோலக்
கொலைஞர்தம் மனையி லுண்போன் கொலைஞனே யாவ னன்றே.

—சிவஞான வள்ளலார்.

கடும்புலையன் வீடே விடக்குண்பான் வீடு.

—சிவவாக்கியர்.

வினா :—ஒருவன் கொலை செய்தலும், புலாலுண்ணுதலுமாகிய இவைகள் சாஸ்திர விசாரணையால் மாபாதகமென்றறிந்து தன்மனைவி, புத்திரர் ஒவ்வாவிடினும், தான் மாத்திரம் சைவனாயிருந்தால் அவனுக்குப் பாதகமுண்டா ?

விடை :—உண்டு. எப்படியெனில் மனைவி புத்திரர் முதலானவர்கள் இவனுக்கு வேறென்று சொல்வானாகில் தன் மனைவி பர புருஷசங்கிரமம் பண்ணக் கண்ட காலையில் அவளை விட்டுத் துறக்க வேண்டுமென்கிற விதியையும் பாராமல் நாம் பிராணனுடனிருக்க விபசாரஞ் செய்த

வளைக் கொல்லவுந் துணிகிறான். மனைவி புத்திரர் செய்த நன்மை தீமைகளுக்கும் தானென முன்னிற்கும் அதிகாரத் தன்மையுடையவனா யிருக்கிறான் ஆன தால் மனைவி புத்திரர் செய்த பாவாதிகளின் பலனும் இவன் அநுபவிப்பது நிச்சயம். மனைவி விதிதவறில் அவளை விட்டுத் துறக்கவேண்டு மென்பதற்குப் பிரமா ணம்.

(இ - உ - ம்.)

பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாம்—சற்றேனும
ஏறுமா றாக விருப்பாளே யாமாகில்
கூறாமற் சந்நியாசங் கொள். — ஔவையார்.

எனவரும் வாக்காலு முணர்க. ஆனால் மனைவி புத்தி ரர்களைத் துறக்கும் திடபுத்தி யில்லாதவர்கள் தவறு செய்த அம்மனைவியை விலக்கிவிட்டு வேறு விவாகம் செய்துகொள் ளவேண்டும். அப்படியின்றித் தவறு செய்த அம்மனைவி யைக் கொல்லத் துணிவாராகில், அவர்கள் நெடுங்காலம் எரி வாய் நிரயத்துள் வீழ்ந்து வருந்துவார்.

(இ - உ - ம்.)

இல்லத் திருக்குமனை தீவினைக ளியற்றினறஞ்
சொல்லித் தடுக்கவடங் காவிடிற்பின் றுறந்துதன்னெஞ்
சொல்லுக்குரிய நிலைசார்ந் தொழுக விதன்றி யன்னார்க்
கொல்லத்துணி புல்லரன்றோ சென்றாழிற் குளிப்பவரே.

—அருட்பிரகாசம்.

எனும் ஆன்றோர் வாக்கால் மனைவி விதிதவறில் நீக்க வேண்டுமே யொழியக் கொலைசெய்யப்படா தென்பது நன்கு விளங்கிறது.

ஆனதால் தன்மனைவி புத்திரர் முதலானவர்கள் செய்த பாவமும் தன்னைச் சேருதலால் அவர்களையும் தன்னைப்போல் ஆசார முடையவர்களாகச் செய்து கொள்ளவேண்டும்.

வினு :—ஆனுல் ஒருவன் தன் சுற்றத்தார் தன்வழி வாராமற் போனாலும் தன்குடும்பம் வரையில் பரிசுத்தனுக விருந்தால் அச்சுற்றத்தார் செய்த பாபமும் இவனைச் சேருமா ?

விடை :—ஆம், அவர்செய்யும் பாவத்தாலிவன் நரகடைவனென்பது நிச்சயம். ஆனுல் அவர் வேறு நான் வேறு என்வார்த்தைக்கு அவர்களடங்கார்க ளென்று சொல்வானுயின் தன்னுடைய குலாசாரத்தினின்றும் சுற்றத்தாரில் சிலர் தவறி நடந்த காலத்து அவர்கள் சிநேகத்தையும் விட்டு நீங்கி யெவ்விடத்து மவரோடு பேசுதலொழிந்து, அவர் வீட்டு அன்னபானுதிகளை விடமெனக்கண்டு, தன்மனைவி புத்திரர்களையும் அவர் மனைவழி, வாயில்வழி, சொப்பனத்திலும் போகாதபடி நிறுத்தித் தன்சுற்றத்தாரில் சிலர் அவரோடுபேசினும் எனக்கு வேண்டாதவர்களோடு பேசலாவதென்னென்று அவர்கள் சிநேகத்தையும் விட்டுவிடுகிருன். இப்படிப் பிரயோஜனமற்ற அற்பகாரியத்தில் மனம் வைத்து வெறுத்தவன் மேலைக்கு நரகத்தில் வீழ்ந்து மாருத்துயரைத் தருவதாகிய ஜீவகொலை மதுமாம்ஸ பக்ஷண முண்ணுதல் முதலிய பாவங்களைச் செய்பவ

ரிடத்தில் உறவு கொள்வதென்ன? இவ்வகைப்பட்ட தீயோர் உறவை நீக்கி முத்தியடைய வேண்டுமென்னும் மனேவிச்சையால் கொல்லாமை முதலிய பேரறம் புரிவோர் யாவராயினு மவரோடு சிநேகஞ்செய்வாராயின், மோக்ஷவீட்டின் வழியை எளிதிலடைவர்.

(இ - உ - ம்)

மருவுக மாசற்ருர் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு. —திருக்குறள்.

எனவும் நல்லொழுக்கம், ஜீவகாருண்யம், நிறைந்து விளங்கும் ஆன்ம நேய சோதரர்களுக்கு ஓர் ஞாபகமூட்டுவது. இது மிகவும் கவனிக்கத் தக்கது. உலகத்தில் ஒவ்வொரு வருணங்களிலும் பந்துவர்க்கங்கள் பற்பல பிரிவுள. இவற்றில் சில பந்துவர்க்கங்கள் முற்றும் பரம்பரைச் சைவர்களாகவே யிருப்பார்கள். ஆனல் சில வர்க்கங்கள் சைவர்களும் அசைவர்களுமாக இருப்பார்கள். அவ்வகைப்பட்டவர்களுக்குத்தான் ஞாபகமூட்டுவது. இப்பந்து வர்க்கங்களிற் சிலர் சுருதி, யுத்தி, அனுபவத்திற்குப் பொருத்த மில்லாத சிறு விஷயத்தில் கட்சிப் பிரதிகட்சியாயிருந்து இவர் பந்துக்கள் பலர் மனதுக்கும் கிலேசத்தை விளேக்கிருர்கள். இவர்கள் சுருதி, யுத்தி, அனுபவத்திற்குப் பொருத்த முடையதாய், தீவினேகளுக்கெல்லாம் முதன்மையான தாய்த் தேகாந்தியத்தில் இருபத்தெட்டுக் கோடி நரகத்துன்பத்தைத் தரக்கூடிய தாய், மறுஜன்மத்தில் நாய், கழுதை முதலான தாழ்ந்த பிறவியைத்தரும் பாவத்தொழிலாகிய மதுமாம்ச பட்சணம் பண்ணுதல், அது காரணமாகக் கொலே செய்தல் முதலிய தீய தொழில் செய்யும் பந்துக்களே இவர்கள் நீக்கி,

அவர் வீட்டுச் சுபாசுபத்திற்குத் தாங்கள் போகாமலும், தம் வீட்டுச் சுபாசுபத்திற்கு அவர்கள் வாராமலும், தங்கள் வீட்டுப் பெண்ணை அவர்களுக்குக் கொடுக்காமலும், அவர்கள் வீட்டுப் பெண்ணை யிவர்கள் கொள்ளாமலும், அவர்களைத் தம்முடன் சமபந்தியில் வைத்துப் போஜனம் பண்ணுமலும் இருக்க வேண்டும். பந்துக்களில் தலைமை வகித்த பேரறிவாளர்கள் இவ்வண்ணம் அவர்களைச் செய்வாராயின், அவர்கள் இவர்கள் செய்யும் கட்டுக்குப் பயந்து உடனே மேற்சொன்ன தீய கர்ரியங்களை யெல்லாம் விட்டு ஜீவகாருண்யம் நிறைந்த சைவர்க ளாய்விடுவதற்குத் தடையில்லை. இந்நூலை வாசித்துப் பார்க்கும் அன்பர்களுக்கு முக்கிய கடமையாயுள்ளது இது ஒன்றேயாகும். இதுபற்றியே இராமலிங்க சுவாமிகளும் உயிர்க் கொலையும் புலைப் புசிப்பு முடையவர்களெல்லாம் உறவினத்தாரல்லர் புறவினத்தார் எனக்கூறியுள்ளார். ஆனதால் இது மிகவும் கவனிக்கத்தக்கது. இப்படியன்றிப் பந்துக்களின் தலைமை வகித்த பெரியார்கள் அக்கொடியார் செய்யும் பாதகத்துக் குடன்பட்டு அவர் வீட்டுச் சுபாசுபத்திற்குச் சென்றும், அவர்களோடு சம்பந்தஞ்செய்தும், அவரை யுடன்வைத்துப் பந்திபோஜனம் செய்தும் வருவாராகில், இப்பரிசுத்தனும் அவனை யுறவாகக் கொண்டிருப்பதனுல் மேற்சொன்ன நரகத்துன்ப மனுபவிப்பதும், மறுபிறப்பில் தாழ்ந்த பிறவியெடுப்பதும் முக்காலும் சத்தியம்.

(இ - உ - ம்)

கொன்ருன் கொலச்சொனுன் கூசவறுத் தானட்டான்
றின்ருன் விலக்கிடான் சென்றென் றுங்-கொன்றவனக்

குட்டவங்க ளிட்டெரிக்க வெந்துகொடு வெந்நரகிற்
பட்டழுன்று வீழ்வார் பதைத்து. —இதிகாசம்.

என்பதனால் கொலைசெய்தவன், கொலைசெய்யச் சொன்னவன், அம்மாமிசத்தைச் சேதித்து விற்றவன், அதைச் சமைத்தவன், அம்மாமிசத்தைத் தின்றவன், மாமிசந் தின்பது பாவமென்று சொல்லி விலக்காமலவனோடு சேர்ந்து சிநேகிப்பவனாகிய இவ்வாறுபேரும் பல கோடி நரகங்களில் நெடுங்கால மழுந்தி வருந்துவார் எனும் ஆன்றோர்வாக்கைப் பிரமாணமாகக்கொண்டு, பேரறிவாளர்கள் தங்கள் பந்துக்களை நல்லொழுக்கத்திற் செலுத்துவது பந்துக்களுள் அவர் முதற்கடமை யாகும். சுற்றத்தார் கொலைமுதலானது செய்யின் அவர்களைச் சேர்ந்தவர்களையும் அப்பாவம் சேருமென்பதற்குப் பிரமாணம்.

(இ - உ - ம்)

தாலமிசை யுனதுசுற்றத் தவர்கொலைமை
செயினுனக்குஞ் சாரு நீவே
றேலுனது குலநெறியை விடிலவரோ
டுரைபகரா திகழ்ந்தன் னோர்தம்
பாலுணவா திகடவிர்வ தெனையதுபோன்
மறம்புரிவோர் பற்றை நீத்துண்
மாலதனாற் கொலைமையற வறம்புரிவோர்
தொடர்புறினல் வழிசார் வாயால்.
—கொலை மறுத்தல்.

எனும் ஆன்றோர் வாக்கால் தீயவருறவை யொழித்து நல்லவர்களுடைய உறவைக் கொள்ளவேண்டுமென்பது வெள்ளிடை மலைபோல் நமக்கு விளங்குகின்றது.

வினா :—ஆனால் இயற்கையாக நாமுண்ணும் மரக்கறி பதார்த்தங்களிலும் விலக்கக் கூடியவைகளுண்டோ ?

விடை :—ஆம், நீக்கவேண்டியனவு முண்டு. வெங்காயம், பூண்டு, செவ்வகத்தி, செம்முருங்கை, மரவள்ளி, பசலைக்கீரை, வெண்கத்தரிக்காய், தேற்றாங்காய், நீர்முலாம்பழம், எண்ணெய்ப் பிண்ணாக்கு, பீர்க்கங்காய், குண்டு சுரைக்காய், தென்னைவெல்லம், விலைக்குவாங்கும் பால், காராம்பசுவின்பால், ஆட்டுப்பால், காளான், பழைய சாதம், சிறுகீரை, வெள்ளுப்பு, பெருங்காயம், சிவாலயத்து நிர்மால்யம், தீபமில்லாமல் ஆகாரங்கொள்ளுதல் முதலானவைகளெல்லாம் வைதிக சைவர்களுக்கு ஆகாதென்று பழைய நூல்கள் கூறுகின்றன.

(இ - உ - ம்.)

உள்ளிவெள் ளுள்ளி யுதும்பாஞ் செம்முருங்கை
வள்ளிபச லைம்மதுக்கோ வை.
வெண்கத் தரிக்காய்தேற் றாங்காய்வில் வக்காயு
முண்பதல கொம்மடிக்கா யும்.
எண்ணெய்ப்பிண் ணாக்குப் பெரும்பீர்க் கெனுமிவையு
முண்ணே லுருண்டசுரை யும்.—சைவசமயநெறி.

எனவும்,

கைவிலைக் குக்கொளும் பாலசப் பால்வரும்
காராக் கறந்த வெண்பால்
காளான் முருங்கைசுரை கொம்மடி பழஞ்சோறு
காந்திக் கரிந்தசோறு
செவ்வையில் சிறுகீரை பீர்க்கத்தி வெள்ளுப்பு
தென்னை வெல்ல மலாவகம்

சீரிலா வெள்ளுள்ளி யீருள்ளி யிங்குவொடு
சிறப்பில்வெண் கத்தரிக்காய்
எவ்வமில் சிவன்கோயி னிர்மாலியங் கிரண
மிலகுசுட ரில்லாதவூண்
இவையெலாஞ் சீலமுடை யோர்களுக் காகா
வெனப்பழைய நூலுரைசெயும்.

—அறப்பளீசுரசதகம்.

எனவும், ஆன்றோர் வாக்குக்களிருப்பதால் பரம்பரைச் சைவர்களா யிருக்கப்பட்ட பலரும், மாக்கறி பதார்த்தங் களில் தமோகுண சம்பந்தமாகிய இவைகளை அவசியம் விடல்வேண்டும். விருத்தாசலம் குமாரதேவர் திருவாய் மலர்ந்தருளிய சாஸ்திரத்தில் சிவஞானத்தை அடையவிரும் பும் அன்பர்களுக்குச் சத்துவகுண ஆகாரங்களே மேலான வையென்று கூறியுள்ளார். சத்துவகுண ஆகாரங்கள் உப்பு, புளி, மிளகாய் சம்பந்தமில்லாதன. அவை சர்க்கரைப் பொங்கல், கோதுமைமாவு, சர்க்கரை, நெய், பால், பழவர்க் கம் இளநீர் முதலானவைகளாகும். இவ்வகைப்பட்ட ஆகா ரத்தைத் தற்காலம் பலபெரியோர்க ளருந்தி ஞானவழியில் செல்கின்றூர்கள். மகாத்மா காந்தியடிகள் கொள்ளுமாகாரம் மேற்சொன்னவைகளில் சிலதானே. இவ்வண்ணம் நமக்கு நடக்கவியலாமற் போனாலும், மேற்சொல்லப்பட்ட தமோ குணப்புசிப்பை யேன் பரம்பரைச் சைவர்களாகிய நாம் விடப்படாது? இதைக் கண்ணுறும் அன்பர்கள் அவசியம் விடல்வேண்டும்.

வி:—இதுவரையில் கூறிவந்த கொல்லாமை, புலான் மறுத் தல் எனு மிவையோடு ஜீவகாருண்ய விளக்கம் முற் றுப் பெற்றதா ?

விடை:—பஞ்ச மாபாதகங்களி லொன்றாகிய கள்ளுண்ணலும் ஜீவகாருண்யத்துக்கு விரோதமாகும். ஆனதால் அதுபற்றிக் கூறுவாம்.

## கள்ளுண்ணல் பாவமென்பது.

வினா:—கள்ளுண்பதனு லொருவன் இம்மை மறுமைகளிலடையும் கெடுதிக ளென்ன?

விடை:—உலகத்தி லியற்கையிலே அடக்கமுடையவனும், வீண்சண்டை முதலானவைகளுக்குப் போகாதவனுமிருக்கு மொருவன் கள்ளையுண்பானுகில், அவனடக்கமும்போய் வாயில்வந்தபடிப் பிதற்றி வழியில் வந்தவர்களுடன் சண்டை பிடிக்கிறுன். அன்றியும் ஒரு ஊரில் யோக்கியனும், செல்வந்தனுயு மிருக்கும் ஒருவன் மதுவை யுண்பானுகில் அவன் யோக்கியதையும் கெட்டுக், கண்கள்சிவந்து, நாக்குழறிக் கைகால் நடுக்குற்று வருஞ்சமயத்து, கள் உண்ணுதவராகிய தம்மினத்தவரைப் பார்த்தாற் றலையில் முக்காடிட்டு முள்நிறைந்த சந்துவழியாயினும், அவ்வழியில் நாணத்தோடு தலைமறைந் தோடுகிறுன்.

அன்றியும் கள்ளுண்பவன் அறிவாளிகள் நிறைந்த சபையினிடத்து வருவதற் கஞ்சுவான், அவனை வரவேண்டுமென்று பலபேர் வற்புறுத்தினுலும், தன் குற்றத்தையெண்ணி யங்கு வரமாட்டான். மேலும் மதுவுண்ட பெருமயக்கத்தினுல் அசுத்தமான விடங்களில் வீழ்ந்து பிணம்போல் கிடப்பான். அதுகண்ட அவன் சுற்றத்தார் இக்கள்ளுண்ட பிணத்தை வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய்ச் சரீரசுத்தஞ் செய்து நிதானம் வரும்வரையில் ஓரறையிலிட்

டுப் பூட்டி வைப்பார்கள். அப்போதவனைப் பெற்றதாய், 'இவ்வகைப்பட்ட பாதகனுகிய பிள்ளை எனக்குப் பிறக்க வேண்டுமோ'என்று பலருடன் சொல்லித் துக்கப்படுவாள். (இ - உ - ம்.)

ஈன்ருள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்ரூேர் முகத்துக் களி. —திருக்குறள்.

எனவும்,

அறிவை யழிக்குஞ் செயலழிக்கு
மழியா மானந் தனையழிக்கும்
செறியு மறிஞர் மதியாத
செருக்கை விளைக்கு மீன்ருளும்
முறியும் வெறுப்பு மிகவிளைக்கும்
முனிவு விளைக்கும் பகையஞ்சா
குறிகள் விளைக்கும் நகைவிளைக்கும்
கொள்ளேல் கள்ளுண் டலைமைந்தா.

—விநாயகபுராணம்.

எனவும் ஆன்ரூேர் வாக்குக்களால் கள்ளுண்டலினுல் பல வகையான அவமானங்களும் கெடுதிகளும் வருமென் றேறற் படுகிறது.

அன்றியும், ஒருவன் தன்குடும்பத்துக்குப் போதுமான வருவாயில்லா திருப்பினும், வந்த சிறிதுபொருளைக் கொண்டு போய் மதுவுண்டு வருவான். புருடன் பொருள்வருவாயை யெதிர்பார்த்து நடக்கும் அவன் குடும்பத்துள்ள சற்குணம் வாய்ந்த பத்தினியும், குழந்தைகளும், பசியால் வருந்தி வாடுங் காலத்து அக் குடியன் வந்து மனைவியை மனம் போனபடி வைது, அடிமே லடியடித்துக் குழந்தைகளை யு

மடித்து மனம்போனபடிப் பேசுகிறான். அவன் பத்தினி யாகிய புண்ணியவதி கண்ணீ ராறாய்ப் பெருகிக் கதறியழ, அதைக்கண்ட பக்கத்து வீட்டார் சிலர் வந்து இவன் கள் வெறியையும், அப்பெண்மணி யடிபட்டிருப்பதையும் பார்த்து, ஐயோ! உலகத்தில் பிரமதேவன், 'நீதியகன்மூடற்கு அருந்ததியெனத் தக்கநெறிமாதரை விதித்தான்'என்று,அப் பிரமனையும் பழித்து, இக் கட்குடியனையும் வெளியிலிழுத்துக்கொண்டு போகிறார்கள் தன் குடும்பத்துக்குப் போதுமான வருவாயின்றி மனைவிமக்கள் பசியால் வருந்துங்காலத்தும் இவன் கைக்குக் கிடைத்த பொருளைக்கொண்டு கட்குடித்துவந்து, குற்றமற்ற குடும்பத்தவரைப் பலவித உபத்திரவப் படுத்துகிறான். இவ்வளவுக்குங் காரண மிவனது கட்குடி மயக்கமேயாம். முற்காலத்தில் கள்ளுண்ட மயக்கத்தாலன்றோ துவாரகையில் ஸ்ரீ கண்ணபிரானிருந்த காலத்து சமுத்திரக்கரையில் சேர்ந்த யாதவர் பலரும களமயக்கவெறியால் ஒருவரோ டொருவர் மனம்போனபடிப்பேசி அங்குற்ற கோரையைப் பிடுங்கி ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு பலரும் இறந்தார்களென்று நாம் நூல் வாயிலாக வறிகிறோம். இக்காலத்தும் கள்ளுண்ட வெறியால் பலர் சண்டையிட்டு மடிவதையும் பார்க்கிறோம். கட்குடி மயக்கத்தால் கைப்பொருளிழந்து வறியராவதோடு அகாலமரணமு மடைகிறார்கள். இதுவன்றியும் கள்ளைவிற்பவர், கள்ளையுண்பவர், ஒருவர் வார்த்தையைக் கேட்டுக் கள்குடிக்க உடன்படுபவர், கள்குடிப்பவனைப்பற்றிப் புகழ்ந்து பேசுவோர் ஆகிய இவர்களெல்லாம் தேகாந்தியத்தில் காலதூதர் கைப்பட்டு நரகத்தில் கற்பகோடிகாலம் கிடந்து வருந்திப் பிறகு மலத்தின்கண்ணே புழுவாகப் பிறந்து அம்மலத்தினை

யுண்டு, பிறகு இறந்து நரகத்திலழுந்தி, இப்படி நெடுங்காலம் பிறந்திறந்து வருந்துவார்கள்.

(இ - உ - ம்.)

கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்வோர்
கள்ளருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் துனரை மகிழுநர் நரகில்
கற்பகா லங்கிடந் தழுந்தி
விள்ளருந் தீய மலப்புழு வாகி
மலத்தினை நுகர்ந்துபின் னிறந்து
விள்ளருங் கொடிய ரௌரவ நரகில்
மீட்டுமீட் டுழன்றுநாள் கழிப்பார்.

—கூர்மபுராணம்.

என்னும் ஆன்றோர் வாக்குப் பிரமாணத்தாலு மறிக.

இங்குக் கள்ளென்று சொல்லவந்தது, கஞ்சா, அபின், சீட்டா, பீடி, சிகரெட்டு, சுருட்டு, சாராயம், பீர், ஒயின், உஸ்கி, ரம் முதலான இவைகளெல்லாம் புத்தியைக்கெடுத்து மயக்கத்தைத்தரும் கள்ளென்று சொல்லும் இவ்வொன்றில் அடங்குவதேயாகும். இக்கள்ளுண்பவர் இம்மையில் பலவித த்துக்கத்தைத் தாமனுபவிப்பதோடு, பிறருக்கும் பலவகையான கெடுதிகளைச் செய்து கொலைமுதலான பாதகத்துக்கும் உடன்படுகின்றார். ஆதலின், இது சீவகாருண்யத்துக்கு முற்றும் விரோதமாகும்.

ஆனதால் கள்ளுண்பதை ஆறறிவுள்ள மனிதர்கள் முற்றும் ஒழித்தல் வேண்டு மென்பதே முக்கிய கொள்கையாகும். இதுவன்றியும், இக்கள் உற்பத்திக்கு முதற்காரணமான தென்னை, பனை முதலான மரங்களை விடுபவர்கள் மேல்

பாவிற் கூறியபடி பலவகைத் துன்பங்களையு மனுபவித்து மறு ஜன்மத்தில் பயித்தியம், வயிற்றுவலி, நீரிழிவு முதலான வியாதியகளால் வருந்துவார்கள்.

வினா:—ஜீவகாருண்ய விளக்கமென்பது இம்மதுவுண்ணுமை யோடு முற்றுப் பெற்றதோ ?

விடை:—இல்லை. இதுகாறும் சொல்லி வந்தது கீழாகிய ஐயறிவுடைய பிராணிகளுக்கு இம்சை செய்யாமலும் புலாலுண்ணுமலும், மதுவுண்ணுமலு மிருப்பதைப் பற்றிக் கூறியது. இனிமேல் ஆறறிவுள்ள மனிதர்கள் தீமை யென்பது தங்களுக்குள் சிறிதுஞ் செய்யாமல் நற்காரியங்களையே செய்வது ஜீவகாருண்ய விளக்கத்தின் முக்கிய கடமையாதலா லதையும் கூறுவாம்.

வினா:—இன்னும் ஆறறிவுள்ள மனிதர்கள் செய்யத் தகாத தீய காரியங்கள் யாவை ?

விடை:—நம்மை யொத்த மனிதர்களுக்குத் துன்பந் தரக் கூடியன அசத்தியங்கூறல், பிறர்மனை நயத்தல், பொதுமாதரை விழைதல், சூதாடுதல், பொருமை, நடுநிலை தவறுதல், எளியரை யொறுத்தல் முதலானவைகளே. இவை துன்பத்தைத் தருமாதலால் இவைகளையெல்லா மொழித்தல் வேண்டுமென்பதே நமது கடமை.

## பொய்ம்மை தீதெனல்.

வினா:—அசத்தியங் கூறுவதால் வருங் கெடுதிகளென்ன ?

விடை:—பலவுள. உலகத்தில் சத்தியமே மேலானது. அது பிறவுயிர்களுக்குச் சிறிதாயினும் தீமையைத் தராத

சொற்களைச் சொல்லுதலாகும். அன்றியும் பொய்மைச் சொற்களும் குற்றத்தினின்றும் நீங்கிய நன்மையைப் பிறருக்குத் தருமாயின் அது மெய்மைச் சொற்களே யாகும்.

நடந்ததைச் சொல்லுதலும் பிறருக்குத் தீமையைத் தாரா திருக்குமாயின் மெய்ம்மையே யாகும். பிறருக்குத் தீமையைத் தருமாயின் அது பொய்ம்மையே யாகும்.

இதற்குத் திருஷ்டாந்தம்.

ஓர் ஆரண்யத்தில் ஒரு முனிவர் தவஞ் செய்திருந்தார். அவர் எப்போதும் உண்மையே பேசுபவர். இப்படி யிருக்கச் சர்வாபரண அலங்காரத்தோடு அவ்வழியாக ஒரு பெண் மணி தனியேவரச் சில திருடர்கள் அவளைப் பின் தொடர, அதைக் கண்ணுற்ற அம்மாது பயந்து அம்முனிவர் ஆச்சிரமத்திற் கருகே ஓரிடத்தில் மறைந்து கொண்டாள். பின் வந்த திருடர்கள் அங்குவந்து, சுவாமி! இவ்வழியாக வந்த பெண்மணி எங்கே என்று கேட்டார்கள். அவர் அம்மாது மறைந்திருந்த விடத்தைச் சொன்னார். திருடர்கள் அங்குச் சென்று அவள் ஆபரணங்களை அபகரித்ததுமன்றி ஸ்திரீ ஹத்தியுஞ் செய்து விட்டுப் போயினர். உடனே தரும தேவதை பிரசன்னமாகி, ஓமுனிவனே! ஸ்திரீ ஹத்திதோடம் உன்னைச் சேர்ந்ததென்று சொல்ல, அவர் அதை வணங்கி 'நான் புகன்ற துண்மைமொழி தானே' யென, 'நீ சொன்ன மெய் மொழி கொலைக்கேதுவானதா லதுவே உனக்குத் தீமையை விளைத்து' என்று சொல்லி அத்தேவதை மறைந்து விட்டது. பிறகு முனிவர் ஸ்தலயாத்திரை முதலான சத்கருமங்கள் செய்து தனக்கு வந்த ஸ்திரீ ஹத்திதோஷ

த்தை நிவர்த்தி செய்து கொண்டார். ஆனதால் இவர் சொன்ன மெய்ம்மொழி கொலைத்தீமையை விளைத்ததனுல் பொய்ம்மொழி யாயிற்று. அத் திருடர்கள் வரும் குறிப் பறிந்து அம்மாது இங்கு வரவில்லை யென்று சொல்லி யிருந் தால் இக் கொலைத் தோஷம் ஒருவரையும் அடைந்திராது. ஆனதால் அப்பொய் வார்த்தையும் மெய் வார்த்தையே யாகும்.

அன்றியும், ஓர் ஊரில் செல்வத்தாலும் அதிகாரத்தாலும் உயர்ந்தவர் ஒருவர் இருந்தார். அவ்வூரில் அவருக் கடங்கிய சிலகுடிகளுமுண்டு. இவ்வகைப்பட்ட செல்வந்தர்களிற் சிலர் தம்மிலுந் தாழ்ந்த நிலைமை யுடையவர்களை அவமதிப்பதை யும், அடக்கியாள்வதையும் சுபாவமாகக் கொண்டிருக்கிறுர் கள். அவ்வூரில் அச்செல்வந்தால் இன்னலடைந்த வொரு வன், வெளியே ஓரிடத்தில் சிலரோடு அச்செல்வந்தர் தனக்குச் செய்த துன்பத்தைச் சொல்லி அவரை இகழ்ந்து பேசினுன். அங்கு அதைக் கேட்டிருந்தவர்களில் ஒரு கல கப்பிரியன் அவன் பேசியவண்ணம் செல்வந்தனிடம் வந்து சொல்ல அம்மொழியைக் கேட்ட செல்வந்தன், அவனைத் தண்டிப்பதற் கெண்ணங் கொண்டு அவனை வரவழைத்துக் கேட்க, அவன் பீதி யடைந்து, 'தங் களை நான் சிறிதும் தவறுன வார்த்தை சொல்லவேயில்லை; இவரோடு பேசிக் கொண்டிருந்தபோது இன்னெருவரும் அங்கிருந்தார். அவரை வரவழைத்தாக் கேளுங்கள்' என, அப்படியே அவரையு மழைத்துக் கேட்க, வந்தவர் மிக்க விவேகியானதினுல் அங்கு அச்செல்வந்தன் கோபக்குறி யையும் அவ்வெளியவன் பயந்து நிற்கும் நிலைமையையுங்

கண்டு இப்போது நடந்ததைச் சொன்னால் இவனுக்குப் பல தீமைகள் உண்டாகுமென்று கருதி 'அவ்வகைப்பட்ட வார்த்தை இவன் சொல்லவே யில்லை'யென்று கூறினார். அதனால் அச்செல்வந்தன் கோபமும் நீங்கி அவ்வெளியவனுக்கு யாதொரு தீங்குஞ்செய்யாமலும் அனுப்பிவிட்டான். முதல் சொன்னவன் மெய்வார்த்தை பிறனுக்குக் கெடுதி விளைவிப்பதா யிருந்தது. பின்னவர் சொன்ன பொய் வார்த்தை பிறனுக்கு நன்மையை விளைவிப்பதா யிருந்தது.

இதனால் பிறனுக்குத் தீமை விளைக்கக் கூடிய மெய் மொழியும் பொய்மொழியே யாகும். பிறனுக்கு நன்மை விளைக்கக் கூடிய பொய்மொழியும் மெய்மொழியே யாகும்.

இஃதன்றியும், மணம்முடித்தல், மனைவியின் பிணக்குத் தீர்த்தல் முதலான சில அவகாசங்களில் பொய்வார்த்தை சொல்லலா மென்றுங் கூறப்பட்டுள்ளது.

இது பற்றியே தெய்வப் புலமைத் திருவள்ளுவரும் பின் வருமாறு கூறியுள்ளார்.

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.
பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். —திருக்குறள்.

ஆனால் எப்போதும் தீய காரியங்களையே மேற்கொண் டொழுகும் ஒரு கொடியோன் நல்லோர்களுக்குக் கெடுதியைத் தரும் காரியங்களைச் செய்தாலும், கொலைத் தீமை முதலிய பாதகங்களைச்செய்தாலும் அவன்நிமித்தமாக மேல் சொன்ன விவகார ஸ்தானங்களில் பொய் மொழி புகன்று

அவனுக்கு நன்மையை விளைவிப்பது கெடுதியே யாகும். ஆனதால் நடந்தபடியே மெய் மொழி புகல்வது மேன்மை யாகும். அன்றியும், உலகத்தில் பொய் வார்த்தையே பேசிக் காலங்கழிக்கும் பொய்யருக்கு அவர் பொய்க்குப் பொய் வார்த்தை சொல்லுவதே இல்லறத்தி லொழுகும் லௌகிகர்களுடைய கடமையாகும். ஆனால் சத்தியந் தவருத உத்தமர்களிடத்தில் பொய் வார்த்தை பேசுவானாகில், அவன்செய்த புண்ணியமும் பொருளும் ஒழிந்து, பாவமும் தரித்திரமு மவனை யடையும்.

மேலான தாய் தந்தையர்களிடத்தில் பொய்வார்த்தை பேசுவானாகில் தரித்திரமும் பிணியும் அவனை விட்டு நீங்கா.

ஆசிரியர் சமுகத்தில் பொய்யுரைப்பவன் நரக மடைவது சத்தியம்.

(இ - உ - ம்.)

பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியா
மவருக்குப் பொய்யா காத
மெய்யருக்குப் பொய்யுரைத்தாற் றேய்பிறைபோற்
றவங்குறையு மிடியுண் டாகும்
துய்யதாய் தந்தையர்க்குப் பொய்யுரைத்தால்
வறுமைபிணி தொலையா வென்றும்
உய்யவரு டேசிகற்குப் பொய்யுரைத்தா
னரகமது வுண்மை தானே.—விவேகசிந்தாமணி.

வினு:—பிறன்மனை நயத்தல், பொது மாதரை விழைதல் முதலானவைகளால் வரும் கெடுதிகளென்ன ?

விடை:—பிறன்மனை நயப்பவர், பகை, பழி, பாவம், அச்சம் என்று சொல்லும்படியான பல கெடுதிகளை யடை

வர். அன்றியும், பரஸ்திரீகமனம் செய்யப்புகுமொருவன் தன் பத்தியினிடத் தயலானொருவன் றன்போல் நடக்கக்கண்டால் தான் பெருஞ்சினத்தோடு கொலை செய்யவுந் துணிவனென்பதை அவன் கருதும்பட்சத்தில் சொப்பனத்தும் பிறர்மனையை விரும்பவே மாட்டான். பிறன்மனையாளை விரும்பிச் செல்பவன் கொலையுறுதல் முதலான துக்கத்தையும் அடைகிறான். அன்றியும், பிறர்மனை நயப்பவன் வலியனாயும், அம்மனைக்குரியவன் மெலியனாயும் இருந்தால்தான் அவனுக்குப் பலவிதத் துன்பத்தையும் விளைவிக்கிறான். இதுவன்றியும் அன்னிய ஸ்திரீ யல்லாமல் கன்னியரையும், அமங்கலிகளையும் காதல்கொண்டு சேர்பவனொருவன் இம்மை மறுமைகளிலடையும் பழி பாவங்களோடு கருவழித்தல் ஸ்திரீஹத்தி முதலான கொலைப்பாதகங்களுக்கும் உடன்படுகிறான். அன்றியும், பொதுமாதரை யிச்சித்துச் சேர்பவனாகிய ஒருவன் அறிவாளிகளால் இகழப்படுவான். தன்னுடைய நிலம், மனை, பொருள் முதலானவைகளையு மிழந்து தானும் தன்னைச்சேர்ந்த மாதா, பிதா, மனைவி, புத்திரர் முதலானவர்களும் உண்பதற்கு அன்னமும் உடுப்பதற்கு உடையுமின்றிப் பலவகையான துன்பங்களை அனுபவிப்பதற்கும் இவன் காரணமாக இருக்கின்றான். இதுவன்றியும், வெள்ளை, நீரடைப்பு, கிரந்தி, அரையாப்பு முதலிய கொடிய வியாதிகளால் வருந்துகிறான். தாழ்வான குலத்து ஸ்திரீயை ஒருவன் சேர்வானாயின் தான் தாழ்வடைவதோடும், இவன் மூலமாகப் பிறந்த புத்திரன் அத்தாழ்ந்த குலத்துக்கேற்ற கொலையாதி

பஞ்ச மஹாபாதகங்களைச் செய்கிறான். அப்பாபத்தால் இவனும் நரகத்தை யடைகிறான். அன்றியும், பத்தினியை விட்டுப் பரஸ்திரீகளைச் சேர்பவன் தேகாந்தியத்தில் நரகத்துன்பம் அனுபவித்து மறு பிறப்பில் நபும்சகராய்க் கூத்தாடிப் பிச்சையெடுத் துண்பவராய்ப் பிறப்பர். பிறன்மனை நயப்பவர் பெருமையொழிந்து துக்கமடைவ ரென்பதற்கு உதாரணம்:

அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றா நச்சுவார்ச் சேரா—பிறன்றா
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள். —நாலடியார்.

அன்றியும், காமவிச்சையானது கொலைப்பாதகத்திற்கும், களவு செய்தற்கும், கள்ளுண்டற்கும், நரகத்தைக் கொடுப்பதற்கும் முதற் காரணமா யிருக்கிறது.

(இ - உ - ம்.)

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

—திருவிளையாடல்.

அன்றியும் கன்னியர், அமங்கலை, பிறர்மனை, வேசையர், தாழ்குலமாது இவர்களைச் சேர்வோர்கள் நரகத்துன்பம் அடைவர் என்பதற்கு மேற்கோள்:—

கன்னியரைப் பொன்னுண் கழிந்தோரை மற்றயலார்
பன்னியரை மாயப் பரத்தையரை—உன்னரிய
தாதியரை நல்லோர் தழுவவினை யார்நரகத்
தீதுவரு மென்றே தெளிந்து. —நீதிவெண்பா.

பொதுமாதரை விழைபவர் பலவிதத் துக்கத்தை யடைவ ரென்பதற்குப் பிரமாணம்:—

அறங்கெடு நிதியுங் குன்று மாவியு மழியுங் காயம்
நிறங்கெடு மதியும்போகு நீண்டதோர் நரகிற் சேர்க்கும்
மறங்கெடு மறையோர் மன்னர் வணிகர்நல் லுழவோரென்று
குறங்கெடும் வேசை மாதர் குணங்களை விரும்பி னோர்க்கே.
—விவேகசிந்தாமணி.

மனைவியர் விரோத மொன்று மாதவர் பகையி ரண்டு
தனமது விரய மூன்று சகலரு நகைத்த னான்கு
தினந்தினம் லஜ்ஜை யைந்து தேகத்திற் பிணியு மாறு
வினையுறு நரக மேழு வேசையை விரும்பு வோர்க்கே.
—தனிப்பாடல்.

பிறன்மனைவி முதலானவர்களைச் சேர்வோர் யமலோக தண்டனை அடைவரென்பதற்குப் பிரமாணம்:—

வம்புலாங் கூந்தன் மனைவியைத் துறந்து
பிறன்பொரு டாரமே யெண்ணி
நம்பினா ரிறந்தால் நமன்றமர் பற்றி
யெற்றிவைத் தெரியெழு கின்ற
செம்பினா லியன்ற பாவையைப் பாவி
தழுவென மொழிவதற் கஞ்சி
நம்பனே வந்துன் னடியிணை பணிந்தே
னைமிசா ரணியத்து ளெந்தாய்.
—நாலாயிரப் பிரபந்தம்.

பரஸ்திரீகமனஞ் செய்வோர் மறுமையில் நபும்ஸக ராய்க் கூத்தாடிப் பிச்சையெடுத் துண்பர் என்பதற்குப் பிர மாணம்:—

செம்மையொன் றின்றிச் சிறியா ரினத்தாராய்க்
கொம்மை வரிமுலையா டோண்மரீஇ—உம்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே யிம்மை
அலியாகி யாடியுண் பார். —நாலடியார்.

அன்றியும் முற்காலத்துப் பரஸ்திரீகமனத்தி லிந்தி னுஞ் சந்திரனும் சரீர பங்கமடைந்தனர். பரஸ்திரீ கமனத் தைவிரும்பிய இராவணன், கீசகன் முதலானவர்களெல்லாம் பிராணனை யிழந்தார்கள்.

(இ - உ - ம்)

காமத்தா லிந்திரன் கலக்க மெய்தினன்
காமத்தா லிராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தா லிறந்தவர் கணக்கி லார்களே.
—சிவஞான வள்ளல்

எனு மான்றோர் வாக்குப்படி முற்காலத்து மிக்காலத்தும் பர ஸ்திரீகமனம் முதலானவைகளால் கொலையாதி பாதகங் கள் வருவதால், இவையுஞ் சீவகாருண்யத்துக்கு விரோத மாகின்றன.

ஆன விதுவிஷயத்தில் நாம் நடந்துகொள்ள வேண்டு வது யாதெனில், ஸ்திரீகள் மனது பேதமையாதலால் அழ கில் மிகுந்தவன், பால்யன், சங்கீதவல்லவன், ஸ்திரீகள் மனதைக் கவரும் ஆடையாபரண வலங்காரன், நயத்தோடு இன்மொழி புகல்வோன் ஆகிய இவர்கள் உறவினராயிருந்

தாலும் அவர்களோடு பழகக்கூடாது என்பதாம். ஏனெனில் ஸ்திரீகளுடைய மனது அவர்கள்மீது சென்றுவிடும். (இ - உ - ம்.)

ஏந்தெழின் மிக்கா னினியா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயமுடைய வின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம். —நீதிநெறி விளக்கம்.

எனவும்,

தந்தையாயினும் விழைவிற் றன்னுடனே
யொருவயிற்றிற் சார்ந்தாரேனும்
மைந்தராயினும் மிகவும்வனப் புடையாரெனிலவர்
மேன்மட நலார்தஞ் சிந்தை நடந்திடும்.
—காசிகாண்டம்.

எனவும்,

ஐம்புலன்களும் போலவரும் பதிகளாகவு
மின்னம் வேறொருவ
னெம்பெருங் கொழுநனுவதற் குருகும் இறைவனே
எனதுபே ரிதயம்
அம்புவிதனிற் பெண்பிறந் தவரெவர்க்கு மாடவ
ரிலாமையி னல்லா
னம்புதற் குளதோ வென்றனள் வசிட்டன் நல்லற
மனைவியே யனையாள். —வில்லிபாரதம்

இதனுல் அழகுடையவராய்ப் புருடர் இருப்பின் வரம்பின்றி ஸ்திரீகள் மனது அவர்கள்மீது செல்லுமென்றேற்படுகிறது.

ஆனதால், ஐம்புலன்களை வெல்லுதல் அரிதாதலின், ஆடவர் தத்தம் பத்தினியன்றிப் பிறன்மனையாளிடத்தும், தாயிடத்தும், மகளிடத்தும், சோதரியிடத்துந் தனியாக யிருக்கப் படாது.

(இ - உ - ம்.)

ஈன்றாள்மகள் தன்னுடன் பிறந்தாள் ஆயினும்
சான்றார் தமித்தா முரையற்க—ஐம்புலனும்
தாங்கற் கரிதாக லான். —ஆசாரக்கோவை.

எனவும்,

நற்றாயப் புதல்வியுடன் றோன்றிய நங்கையேனும்
உற்றோ ருழியிற் றனியெய்தி யுறைதலாகா.
—காசிகாண்டம்.

எனவும்,

மடவாலை முகநோக்கி மாதரார் தாமிருந்த
இடவகையிற் றனிப்புகு தோம். —பெரியபுராணம்.

எனவும் கூறலால் ஸ்திரீகளிருக்கு மிடத்துத் தான் றனியாக விருத்தலும் அவரோடு நயமொழி முதலானவை பேசுதலுங் கூடாதென்பது நமக்கு விளங்குகின்றது.

வினா:—கோபத்தினால் வரும் கெடுதிகள் யாவை?

விடை:—கோபமானது இம்மை மறுமையில் பலவித துன்பத்தை தரும். அன்றியும், ஒருவர் கோபமானது மெலியர்மேல் செல்லுமே யொழியத் தன்னிலும் வலியவர்மேல் செல்லாது. வலியார்மே லொருவர் கோபத்தைச் செலுத்திக் கெடுதிசெய்வது ஒரு பெரிய மலையைச்சிறிய கோலையெடுத் தடியோடு பேர்த்துத்தள்ள நினைப்பதை யொக்கும். ஆனதா லிவன் அவருக்குச்

செய்யுந் தீங்கு அவரை யொன்றும் வருத்தாது. இவனே பலவகைத் துன்பத்தையு மடைவான். தனக்குக் சமத்துவமானவ ரிடத்துக் கெடுதி செய்வானுயின் தான் செய்த கெடுதியளவு அவனுலிவன் கேடடைந்து வருந்துவான். தன்னிலும் தாழ்ந்த நிலைமையுடைய எளியவருக்குக் கெடுதி செய்வானுயின் இம்மையில் பழிப்பும், தேகாந்தியத்தில் சொல்லும்படியான நரகங்கள் பலவற்றிலு மழுந்தி நெடுங்காலம் வருந்துவான். ஆனதால், ஒருவரிடத்துங் கோபங் காரணமாகத் தீமை செய்யாதிருத்தலே நல்லதாகும்.

(இ - உ - ம்.)

பெரியவர் தம்மைக் காய்ந்தால் பிறங்கல்கல் லியகோ லொப்பன்
புரிவன புரியப் பட்டு புலம்புவ னெத்தார் காய்ந்தால்
எரிநா கதனில் வீழ்வ ரெளியரைக் காய்ந்தா னென்றால்
ஒருவர்தம் மிடத்தும் சீற்ற முறுமையே நன்று மாதோ.

—பிரபுலிங்கலீலை.

ஆனல் சிலர் பகைவனைக் கண்ட காலத்துக் கோபமென்பது சிறிதும் தோன்றுமல் அன்றலர்ந்த செந்தாமரை மலர்போன்ற முகமும், அவரோடு பேசுங் காலத்து சந்தனத்தைப் போன்ற குளிர்ந்த வார்த்தையும் உடையவராயிருப்பர். ஆனல் அவரிடத்தி லவர் மன மாத்திரங் கத்தரிக்கோல் போலக் கொடூரமானதா யிருக்கும். அந்தோ! இது வஞ்சகர்களின் கொடுஞ் செய்கையாகும். இவர்க ளிம்மை மறுமையி லடையும் துக்கத்துக் களவே யில்லை.

(இ - உ - ம்.)

செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனம்
தங்குமொழி சந்தனம் போலும்—பங்கியறி

கத்தரியைப் போலுமிளங் காரிகையே வஞ்சமனம்
குத்திரர்பால் மூன்று குணம். —நீதி வெண்பா.

ஆனால் யாவரிடத்தும் கோபமே செலுத்தப்படாதோ வெனில் செலுத்த வேண்டிய சிலவிடங்களில் கோபத்தைச் செலுத்த வேண்டும். எப்படியெனில், இல்லறத்தி லொழுகுபவர் உள்ளத்தில் கருணையோடு மனைவி, புத்திரர், ஆளடிமை முதலானவர்கள் தவறி நடந்தகாலத்துக் கோபக் குறியோடு அவர்களைத் தண்டனை செய்வது நன்மையே யாகும். முற்காலத்தில் கௌசிகர் கோபத்தால் தவத்தை யிழந்தும், நகுடன் உருமாறியும், இந்திரன் தன் குலிசத்தைப் போக்கினது மல்லாமல் கோபத்தினால் பிராணனையும் இழந்தவர்கள் பலராகும்.

(இ - உ - ம்.)

கோபத்தாற் கௌசிகன் றவத்தைக் கொட்டினான்
கோபத்தா னகுடனுங் கோல மாறினான்
கோபத்தா லிந்திரன் குலிசம் போக்கினான்
கோபத்தா லிறந்தவர் கோடி கோடியே.

—சிவஞான வள்ளல்.

என வான்றோர்கள் கூறியுள்ளதால் கோபமானது ஒருவருக்கு இம்மை மறுமைகளில் பல தீமையை விளைப்பதால் அதை யொழித்தல் வேண்டு மென்பது நன்கு விளங்கின்றது.

வினா :—உலகத்தில் பிறர் பொருளை அவரறியாது கவர்தல், வஞ்சனை முதலியவைகளால் அவர் பொருளைக் கொள்ளுதல் முதலியவைகளால் வருங் கெடுதிகளென்ன?

விடை :—பிறர் பொருளைக் களவு செய்கிறவர்கள் பிராண விபத்தும், இராஜ தண்டனையு மடைவதன்றிப் பலராலு மிகழப் படுகிறார்கள். பிறன் பொருளைத் தெரியாது அபகரித்துக் கொண்டு வந்தபோது இன்பம் போல் தோன்றினும், அனுபவிக்கும் போது துன்பத்தைத் தரும். பிறர் துக்கப்பட அவர் பொருளைக் களவாடிய தோடத்தினால் தேகாந்தியத்தில் நரகத்துன்பத்தை யனுபவிக்க வேண்டும்.

(இ - உ - ம்.)

களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். —திருக்குறள்.

எனும் ஆன்றோர் வாக்குப் பிரமாணமே இதற்குச் சான்றாகும். இஃதன்றிப் பிறரை வஞ்சித்து அவர் பொருளைக் கவர்தல், தம்மிடத்து நம்பகமாக ஒருவர் கொடுத்து வைத்த பொருளை நம்பிக்கைத் துரோகம் செய்தல், சம்பாதித்த பொருளைப் பிறருக்குக் கொடுத்து அதிக வட்டி வாங்குதல் முதலானவைகள் பிறருக்குத் துன்பத்தை தருவனவாகும். இதுவன்றியும், இவ்வண்ணம் அவர்கள் சம்பாதித்த பொருளும் நீடித்திராமல் அழியும்.

(இ - உ - ம்.)

நட்பிடை வஞ்சஞ் செய்தும் நம்பினார்க் கூன்மா றுட்டத்
துட்படக் கவர்ந்து மேற்றோர்க் கிம்மியு முதவா ராயும்

வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போ லீட்டப்
பட்டதோ வறத்தா றீட்டு நம்பொருள் படுமோ வென்னு.
—திருவிளையாடல்.

இதனால், களவு முதலானவைகளால் ஒருவன் சம்பாதித்த பொருளானது பலவித துன்பத்தைத் தருவதோடும் இடை நடுவே யழிந்துவிடு மென்பது நன்கு விளங்குகின்றது.

வினு :—சூதாடுவதால் வருங் கெடுதியென்ன?

விடை :—உலகத்தில் சூதாடுகின்றவர்களுக்கு அச்சூதானது இம்மை மறுமைகளில் பலவித துன்பத்தை உண்டாக்குகின்றது. அச் சூதாடுமொருவருக்கு அவர் செய்யுந் தருமங்களெல்லாம் ஒழிந்து போய்விடும். நரகத்தை யடைவிக்கும். பாவத்தையே வளரச்செய்து அருளென்னுந் தன்மையைக் குறைக்கும். பலரையும் விரோதஞ் செய்யும். தன்னை விரும்பினவர்களுக்கு முன்னில்லாத துன்பங்கள் பலவுஞ் செய்து தரித்திரத்தையும் கொடுக்கும்.

(இ - உ - ம்.)

அறத்தை வேர்கல்லு மருநரகில் சேர்க்கும்
மறத்தையேகொண்டருளைத் தேய்க்கும்—திறத்தையே
பூண்டுவி ரோதஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றூர் தெரிந்து. —நள்வெண்பா.

சிறுமைபல செய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமைத் தருவதொன் றில். —திருக்குறள்.

இதுவன்றியும், வேசியைச்சேர்பவர், கள்ளுண்பவர் சூதாடுபவர், திருமகள் கடாட்சமாகிய சகல செல்வங்

களையு மிழந்து மூத்தாள் சம்பந்தமாகிய தரித்திர முதலிய பலவகைத் துன்பங்களையு மடைவர்.

(இ - உ - ம்.)

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவரும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. —திருக்குறள்.

எனவும், சூதாடுகின்றவர்களுடைய சகல செல்வ வளங்களும் பகைவரிடத்திலேயே போய்ச் சேரும். இதனால் அவர்கள் பலவகையான துக்கங்களை இம்மையிலேயே அனுபவிப்பர்.

இதற்குத் திருட்டாந்தமாக, முற்காலத்தில் நளச்சக்கரவர்த்தி இச் சூதாட்டங் காரணமாக நாடு நகர முதலிய பல செல்வ வளங்களையும் இழந்தும், மனைவி, புத்திரர் முதலானவர்களைப் பிரிந்தும், பல துன்பங்களை யனுபவித்தார். இதுவன்றித் தருமபுத்திரரும் இச் சூதாட்டங் காரணமாகவே தானும், பத்தினியும், தம்பிமாரும் பதின்மூன்றுண்டு காலம் பலவகைத் துன்பங்களுக் குள்ளாயினர்.

(இ - உ - ம்.)

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். —திருக்குறள்.

எனும் ஆன்றோர்வாக்கால் முற்காலத்தும் இக்காலத்தும் சூதாட்டமானது செல்வவளங்களை இழந்து துன்பம் விளைப்பதற்கு ஏதுவாக இருத்தலின் இதை முற்று மொழிக்க வேண்டு மென்பது நமக்கு நன்கு விளங்குகின்றது.

வினா:—அழுக்காறு, அல்லது, பொறாமையால் வருங் கெடுதி யென்ன?

விடை :—பொருமையானது ஒருவருக்கு இம்மை மறுமைகளிற் பலவகைத் துன்பத்தை விளைக்கும். இது பிறருடைய செல்வம், கல்வி, உயர்வு முதலானவைகளைக் கண்டு உண்டாவதாகும். அன்றியும், பொருமையென்று சொல்லப்பட்ட பாவி யொருவனைச் சேருவானுயின் இம்மையி லவன் சகல செல்வ வளங்களையுங் கெடுத்து, மறுமையி லவனை நரகத்திற் கொண்டு போய்ச்சேர்த்து விடுவான்.

(இ - உ - ம்.)

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். —திருக்குறள்.

அன்றியும், பொருமையுடையவன் செல்வவளங்கள் முதலானவைகளா லுயர்வடைவதே யில்லை. அஃதில்லாதவர் சகல சம்பத்திலும் குறையடைவதே யில்லை. இதற்குத் திருட்டாந்தமாக ஓர் சரிதம. கோளுகை தேசத்து மன்னன் வெகுநாள் புத்திரப் பேறின்றி ஈச்வரானுக்கிரகத்தால் ஓர் அருஞ்சுதனைப் பெற்ருன். சோதிடர் புத்திரன் பிறந்த ஜாதகம்பார்த்து நாடு நகரமிழந்து மாதாபிதா மரணமடைவரென்று அறிவிக்க, அவ்வண்ணமே வேற்றரசரால் நாடு பிடிக்கப்பட்டு அரசனும் யுத்த முகத்திறக்கப் பத்தினியு முடனுயிர் துறந்தாள். பிறகு தாதியரிருவர் அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு குந்தலதேசம் வந்து அதை யாதரித்து வர உடனே யவ்விருவரு மரணமடைந்தனர். பிறகு அவ்வூரார் அப்பிள்ளையைக் காப்பாற்றிவர, அப்புத்திரனுக்கு ஐந்து வயதாகி ஒரு தினம் வீதியில் விளையாடியிருக்க, அந்நகரத்தரசன் மந்திரியாகிய துர்ப்புத்தி அப்புத்

திரன் யாரென்று அங்குள்ளாரால் அவன் வரலாறு முற்றும் விசாரித்து யோசிக்கலாயினன். நம்மரசனுக்குப் புத்திரனில்லாமையால் நம் புத்திரனாகிய மதன னென்பவனுக்குத் தன்னரசுரிமையைக் கொடுக்க வெண்ணங் கொண்டிருக்கிறான். அப்படியிருக்க, ஒருக்கால் நம் அரசன் இப்பிள்ளையின் அழகைப்பார்த்து, இவன் சரிதத்தை விசாரித்து, இவனுக்குத் தன் அரசுரிமையைக் கொடுத்து விட்டால் நாம் யாது செய்வதென்று கெட்ட எண்ணங் கொண்டு கொலையாளிகளை அழைத்துக் காட்டிற் கொண்டு போய் அப்பிள்ளையைக் கொலை செய்துவிடும்படிக் கட்டளையிட, அவர்களும் அப்படியே அப்பிள்ளையை அழைத்துக் கொண்டு போய், மனிதசஞ்சார மில்லாத ஆரண்யத்தில் நிறுத்தி உடைவாளை உருவ அது கண்ட குழந்தை கண்களில் ஜலம் பெருக்கி பகவானை ஸ்தோத்தரிக்க, அது கண்ட கொலையாளிகள் மனமிரங்கி, அக்குழந்தையைக் கொல்லாமல் அதன் சிறு விரலை மாத்திரம் அறுத்து வந்து மந்திரிக்குக் காண்பித்துக் கொலைசெய்து விட்டோம் என்று சொல்ல, மந்திரி சந்தோஷத்தோடிருந்தான். காட்டில் விட்ட குழந்தையானது அழுது கொண்டிருப்பதை அங்கு வேட்டையாட வந்த கொங்கண தேசத்தரசன்கண்டு பேருவகை கொண்டு தனக்குப் புத்திரப்பேறு இன்மையால் அதை யெடுத்துக் கொண்டுபோய்த் தானும் தன் பத்தினியும் அருமையாய் வளர்த்து, அக்குழந்தைக்குச் சந்திரகாசனென்னும் நாமம் சூட்டினன். பிறகு, சந்திரகாசனுக்குப் பதினாறு வயதானதும், தங்களுக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசர்களை வென்று பெருங்கீர்த்தி யோடிருக்கக், கொங்கண தேசத்தரசன் காணிக்கை முதலானதும் குந்தலதேசத் தரச

னுக்கு அனுப்ப அதைப் பார்த்த துற்புத்தி என்னும் மந்திரி வந்த சேவகர்களை அவ்வரசன் நிலைமை விசாரிக்க அவ்வரசன் காட்டிலிருந்து குழந்தை யெடுத்து வந்ததும் அதுமுதல லவ்வரசனுக்குச் சகல செல்வவளங்களு மதிகரித் திருப்பதையுஞ் சொல்ல, மந்திரி சந்தேகித்து அரசனிடம் விடை பெற்றுக் கொங்கண தேசம் போக, அவ்வரசனால் சகல மரியாதையும் பெற்று அரண்மனையிலிருக்க அப்போது சந்திரகாசன் வந்து மந்திரியை வணங்க, அவன் சந்திர காசனைப் பார்த்து நாமனுப்பிய கொலைஞர்கள் காட்டி லிவனைக் கொல்லாது விடுத்தனரெனத் தீர்மானித்து இவன் பராக்கிரமத்தை நம் மரசன் கேள்விப்பட்டா லிவனுக்கே நாடளிப்பனென்று பொறாமை கொண்டு வஞ்ச எண்ணத்து டன் தன் புத்திரனுக்கு இவன் அழகு, கல்வி, குணம், வீரம் முதலியவைகளைப் பாராம லிப்போதே விஷத்தைக் கொடு க்க வென்றோர் கடிதமெழுதி மடித்து முத்திரை யிட்டுச் சந் திரகாசனிடங் கொடுத்துத் தன் புத்திரன் மதனனிடம் நே ரே கொடுக்கும்படிச் சொல்ல அப்படியே சந்திரகாசன் கடி தத்தைக் வாங்கிக்கொண்டு குதிரைமீதேறிக் குந்தல தேசத் துக்கடுத்த நந்தவனத்தில் வந்து ஓர் மரத்தில் குதிரையைக் கட்டி அங்குள்ள ஓர் மேடையில் படுத்து நித்திரை செய் தான். அப்போது அப்பட்டினத்தரசன் மகள் சண்பகவதி, அம்மந்திரி மகள் விஷையையென்பவள் தம்தாதிமார்களோடு வந்து வேடிக்கையாய் விளையாட மந்திரி குமாரத்தி நீங்கலாக மற்றவர் ஓர் மண்டபத்திற்றங்க மந்திரி குமாரத்தி தனியாக நந்தவனத்தில் வந்த போது நித்திரை செய்யும் ராஜ குமார னைப்பார்த்து மணஞ்செய்ய விரும்பி அவனிட மிருந்த கடித த்தை எடுத்துப் பார்த்தாள். அதில் விஷத்தைக் கொடுக்க

வென்று எழுதி இருந்ததை மாற்றி விஷையைக் கொடுக்க வென்றெழுதிக் கடிதத்தை முன்போல் மடித்துமுத்ரைவைத் துச் சந்திரகாசனிடம் வைத்துப் போயினுள். பிறகு சந்திர காசன் நித்திரை விட்டெழுந்து குதிரை ஏறி நகாஞ்சென்று மதனனிடங் கடிதம் கொடுக்க, அவன் கடிதம் பார்த்துச் சந் திரகாசனை அரசனிட மழைத்துக்கொண்டு போய் பிதா வெழுதிய கடிதத்தைக் காண்பிக்க அரசனும் உன் பிதா வின் உத்தரவுப்படி முன் உன் தங்கைக்கு விவாகஞ் செய்த பிறகு எனது குமாரத்தியாகிய சண்பகவல்லியை இவனுக்கு விவாகஞ் செய்து இந் நரகத்தையு மிவனுக் களிப்பனென, அப்படியே மதனனும் தன் தங்கைக்கு விவாக முடித்துப் பிதாவுக்குக் கடிதமெழுத, அதற்கு முன்னமே சந்திரகாச னிறந்திருப்பானென்று கருதிக் கொங்கண தேசத்தரசனைச் சிறை செய்து திரும்பப் பிள்ளையின் கடிதங்கண்டு திகிலடை ந்து அரசனுக்கு நயமொழி கூறிச் சிறைநீக்கித்தன் நகரம் வர மருகனும், பெண்ணும் வந்து பணிய உள்ளே பொருமை யோடு மேலுக்காசீர்வதிக்கப், பிறகு புத்திரன் வந்து நமஸ் கரிக்க அவனையும் ஆசீர்வாதஞ் செய்து குமாரனைப்பார்த்து நானொரு காரிய மெழுதியனுப்பினுல் நீயொரு காரியஞ் செய்த தென்னென, புத்திரன் தனக்கெழுதிய கடிதத்தைக் காண்பிக்க அவன் மனமருண்டு நான் தான் தவறி எழுதி விட்டேனே வென்றும், நாமொன்று நினைக்கத் தெய்வ மொன்று நினைத்ததென்றும் விசனமடைந்து புத்திரன் குந் தல தேசத்தை யரசாளு மாசையால் மருகனைக் கொல்ல ஓர் சூட்சி செய்தான். முன் கொலைக்காரரை யழைத்து 'நான் சொன்ன வண்ணம் முன் காட்டி லப்பிள்ளையை யேன் கொலை செய்யவில்லை' யென்று கோபித்து, 'இன்றிரவு பத்

திர காளி கோயிலில் வரப்பட்டவனைத் தடையின்றிக் கொலை செய்க'எனக் கட்டளையிட்டு அன்று மாலை சந்திரகாசனையழைத்து 'ஆண்டுக்கோர் முறை பத்திரகாளியை நான் தனியாகச் சென்றர்ச்சிப்பது வழக்கம். அதனால் தான் சகல சம்பத்து மெனக்கு வந்தது. அது போல் நீயு மின்றிரவு அர்ச்சித்து வா'வென்று சொல்லி அதற்கு வேண்டிய பழ வர்க்க முதலானவைகளைப் பொற்றாம்பாளத்தில் வைத்துக் கொடுத்தனுப்ப அதை யெடுத்துக் கொண்டு சந்திரகாசனிரவு வீதிவழி செல்ல அப்போது குந்தலத்தேசத் தாசனிடம் காளமகாரிஷி வர, அரசன் சரீர நிலைமை மாறு பட்டிருப்பதை மகரிஷிக்கறிவிக்க, அவராசுரிமையைப் பிறருக் களித்துக் காட்டில் தவத்துக்குச் செல்லவேண்டு மென, உடனே அரசன் மந்திரி குமாரனைப் பார்த்து சந்திரகாசனை யழைத்து வரும்படிக் கட்டளையிட உடனே மதனன் மைத்துனனைத் தேடி ராஜ வீதிவழி சென்ற சந்திரகாசனுக் கரசன் கருத்தறிவித்துக் கையிலிருந்த தட்டைத் தான் வாங்கிக்கொண்டு அவனை அரசன் பாலனுப்ப அப்போதே யரசன் சந்திரகாசனுக்குத் தன்பெண்ணையும் விவாகஞ் செய்து ராஜ்ய பட்டாபிடேகமுஞ்செய்து முனிவரோடு தவஞ்செய்ய வாரண்யம் சென்றான். ஆலயத்துக்குச் சென்ற மந்திரி குமாரனும் கொலையாளிகளால் மரணமடைந்தான். இதை யெல்லாங் கேட்ட துற்புத்தி யென்னு மந்திரி சந்திரகாசனிடஞ் சென்று நாணித் தலையிரங்கி 'அப்பா உத்தமனாகிய உனக்குப் பல தீங்கு செய்ய நினைத்தேன். அது எனக்கே வாய்த்த'தென்று கண்ணீருகுத்து வணங்கி நிற்க, அக்கொடியவனாகிய மந்திரி தனக்குச் செய்த தீங்கைக் கருதாது சற்குணம் நிறைந்த

சந்திரகாசன் காளி சந்நிதானஞ் சென்று காளியைத் தோத்தரித்து மதனனையு மெழுப்பி வந்து அரசுரிமை புரிந் தான். 'கெடுவான் கேடு நினைப்பான்' எனும் வார்த்தைக் கிணங்க அத்துற்புத்தி யென்னு மந்திரி உலகத்தாரால் பழிக்கப்பட்டு அன்றுமுதல் சந்திரகாசனைப் பார்ப்பதற்கும் நாணமடைந்து தன் மனதே தன்னைச் சுடச் சிலநாளிருந்து தேகாந்தியத்தில் எரிவாய் நிரயத்தழுந்தி நெடுங்காலம் வருந்தினன். —பாரதம்.

(இ - உ - ம்.)

அழுக்கற் றகன்றாரு மில்லை யஃதிலார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். —திருக்குறள்.

ஆனதால் பொறாமை யென்னும் தீய குணத்தை முற்று மொழித்தல் வேண்டும்.

வின :—நடுநிலை தவறுவதனல் வருங் கெடுதிகளென்ன?

விடை :—நடு நிலை தவறிப் பேசுபவர்கள் இம்மை மறுமை களில் பலவகைத் துன்பமடைவர்.

நீதி அநீதிகளை யிருதிறத்தார் சொல்லுங்காலத்து விசாரிக்கும் தலைவர் தன் பந்துக்கள், சிநேகிதர் முதலானவ ராலும் பட்சபாதமின்றி நடத்தல்வேண்டும். அன்றியும் ஒரு நகரத்துக்குத் தலைவராயும் மிக்க சம்பத்துடையவ ராயி ருப்பினும், சோதரர், புத்திரர் முதலானவர்களெல்லா மவரு க்கடங்கினவரா யிருந்தாலும், அவன் தீய காரியங்கள் செய்யின் உடனிருப்பவர்கள் நடுநிலைமையே அவருக்குச் சொல்ல வேண்டும். இதற்குத் திருட்டாந்தமாக சூரபத்ம னுக்குச் சிங்கமுகா சுரனும், இராவணனுக்குக் கும்ப

கர்ணனும், துரியோதனனுக்கு விகர்னனும் நீதியே புகன்றனர். ஆனாலவர்கள் முன்னை வினைவலியாலிவர்கள் வார்த்தையை யங்கீகரியாமல் சகல சம்பத்தையு மிழந்து பிராணனையு மிழந்தார்கள். அவரைச் சேர்ந்த சகோதரர்களும் தீங்கு வருங்கால் சோதரரைவிட்டுப் பிரியப்படாதெனு மில்லற தருமப்படி அவர்களுமவருட னிருந்துயிர் துறந்தனர். ஆனாலிப்படிப்பட்ட அநீதியுடை யவர்களுக்கு நியாயஞ் சொன்ன காலத்து, அவர் கேளாத பட்சத்து, அவரைவிட்டு நீங்குவதே நலம். இதற்குத்திருட் டாந்தம் விபீடணர் பிரிவேயாகும். அன்றியும், பிரம சபை யில் தேவர்கள் தக்கனுக்குப் பயந்து நந்தியெம் பெருமான் கேட்டதற்கு நடுநிலை பகராது மௌனமாயிருந்தமையால் சூர்பத்மனால் நெடுங்காலம் துயரடையும்படி யவர்களுக்குச் சாபங் கொடுத்தனர். ஆனதால் நடுநிலை தவறி நடப்பது பல துக்கங்களுக்கும் ஏது வாயிருப்பதால் உலகத்தில் நியா யஞ் சொல்லும் தலைவர்கள் இரு திறத்தாருடைய வார்த் தைகளையு மெழுமுறை கேட்டு இருதிறத்தாரு மொத்துக் கொள்ள நீதி நூல் வழியால் முடிவு சொல்லாராயின் வழக் கினை யிழந்தோர் மனமிகவுங் கலங்கி நின்றழுதலாலுண்டா கிய கண்ணீரானது வரிசையாக முத்தேவர்களும் நின்று அவ்வழக்கழிவு சொன்னவனைக் காத்தாலும் அவர் சந்ததி களை யறுப்பதாகிய ஓர் வாளாகும்.

(இ - உ - ம்.)

இருவர்தஞ் சொல்லையு மெழுதரங் கேட்டே
இருவரும் பொருந்த வுரையாராயின்;
மனுமுறை நெறியின் வழக்கிழந் தவர்தாம்

மனமுற மறுகிநின் றழுத கண்ணீர்
முறையுறத் தேவர் மூவர் காக்கினும்
வழிவழி யீர்வதோர் வாளா கும்மே.

—வெற்றிவேற்கை.

எனவும்,

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. —திருக்குறள்.

எனவும்,

வழக்குடை யானிற்க வலியானைக் கூடி
வழக்கையழி வழக்குச் செய்தோன்—வழக்கிழந்தோன்
சுற்றமுந் தானுந் தொடர்ந்தழுத கண்ணீரா
லெச்சமறு மென்று லறு. —ஔவையார்.

எனவும்,

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்கு பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை. —நல்வழி.

எனவும் ஆன்றோர் கூறியுள்ளதால் நடுநிலை தவறுவோர் சந்ததி யழிவதோடு அவர்கள் வசித்த வீடுமழிந்து பைசாசம், எருக்கு, பாம்பு முதலானதும் வசிக்கு மென்றால் உலகத்தில் பேரறிவாளர்கள் நடுநிலை தவறி நடக்கமாட்டார்கள் என்பது நன்கு விளங்குகின்றது.

வினா :—ஏழைகளை வருத்துவதால் வருங் கெடுதிகளென்ன?

விடை :—அதனால் பல கெடுதிகளுண்டு. ஏழைகளுக்கு ஒருவர் துன்பஞ் செய்யுங் காலத்துத் தன்னிலும்

வலியார் தனக்குத் துன்பஞ் செய்வாராயின் தான டையும் வருத்தமெவ்வா றிருக்கும் என்பதை யோசித் தல் வேண்டும். கீழானவர்கள் தமக்கொரு தீங்கு செய்தவிடத்தும் அவர்களுக்குப் பதில் தீங்கு செய்யா மையே அறிவாளர் தன்மை.

(இ - உ - ம்.)

கறுத்தின்னு செய்தவக் கண்ணு மறுத்தின்னு
செய்யாமை மாசற்றார் கோள். —திருக்குறள்.

அப்படியின்றி ஏழைகளை வருத்துவாராயின் தெய்வ மவர்களைத் தண்டிக்கத் தயாராயிருக்கும்.

(இ - உ - ம்.)

எளியரை வலியர் வாட்டில் வலியரை யிருநீர் வைப்பில்
அளியறத் தெய்வம் வாட்டும். —காஞ்சிப்புராணம்.

எனக்கூறியுள்ளது. அன்றியும் அநித்திய சரீரமாத லால் எவ்வகைப் பட்டோர்க்கும் ஓர் தீங்குஞ் செய்யக் கூடாது.

(இ - உ - ம்.)

இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
யொருத்தருக்குந் தீங்கினை யுன்னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான். —பட்டினத்தார்.

அன்றியும், கீழ்மக்கள் தம்மைத் தாழ்வான வார்த்தை கள் சொன்னால் நாய் கடித்ததென்று நாயை மீண்டுங் கடித் தவரில்லை யென மேன்மக்கள் பதில் சொல்லார்.

(இ - உ - ம்,)

கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
பேர்த்துநாய்க் கௌவினு ரீங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்க டம்வாயான் மீட்டு. —நாலடியார்.

அன்றியும் கொலையாதிகளைச் செய்யும் கீழ்மக்கள் செல்வத்தாலும் அதிகாரத்தாலு முயர்வுடையவரா யிருப்பினும் அவர்கள் கீழானவரே யாவார். எதுபோலெனில் மாற்றுயர்ந்த பொன்னால் செய்து இரத்தினம் பதித்தாலும் செருப்பானது காலுக்கிடுந்தன்மை யுடையதே யாகும்.

(இ - உ - ம்.)

மைதீர் பசும்பொன்மேன் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினுஞ் செருப்புத்தன்—காற்கேயாம்
எய்திய செல்வத்த ராயினுங் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும். —நாலடியார்.

எனுமான்றோர் வாக்காலுணர்க. மேலோர்கள் செல்வம் அதிகார முதலானவைகளில் குறைவுடையாராயினும் அவர் நல்லொழுக்கத்தால் மேலோரே யாவர். எதுபோலெனில் சாதாரண குடையாயிருந்த போதிலும் சிரசுக்கு மேலிருக்கும் பெருமை யுடையது. இதுவன்றியும் மேலோர்கள் தமக்கொருவர் ஒரு நன்றிசெய்து பின்பு அவர் நூறு தவறுகள் செய்தாலும் பொறுப்பார். கீழ்மகனுக் கெழுநூறு நன்றி செய்து தவறி யொருதீங்கு அவனுக்குச் செய்வாராயின் முன்செய்த நன்றி யெல்லா மறந்து செய்த தீங்குக்குப் பதில் தீங்கு செய்வான்.

(இ - உ - ம்.)

ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்
எழுநூறுந் தீதாய் விடும். —நாலடியார்.

எனுமான்றோர் வாக்கால் கீழ் மக்கள் தமக்குத் தீங்கு முதலானவைகள் செய்தாலும் மேன்மக்கள் அவைகளுக்குப் பதில்செய்யாமல் நன்மையே செய்வர். இதற்குத் திருட்டாந்தமாக நம் சமயாசாரியர்களில் ஒருவராகிய திருநாவுக்கரசர் கர்மவசத்தால் சமண் சமயம் புகுந்து தருமசேனரென்னு நாமத்தோடு அவர்களுக்கு ஆசாரியராயிருந்து பிறகு சிவபெருமானருளால் சூலை நோயால் தடுத்தாட் கொள்ளப் பட்டார். அப்படி யிருக்க அக்கீழ் மக்களாகிய சமணர்கள் தம்மதம்விட்டு விலகினரென்னுந் துவேஷத்தால் தம் சமயத்துக்குட்பட்ட பல்லவர்கோனென்னு மரசனைக் கொண்டு நய மொழியால் சுவாமிகளைத் தருவித்து எழுநாள் நீற்றறையிலிட்டும், பிறகு விஷங்கலந்த அன்னமிட்டும், பின்பு அரசன் பட்டத்து யானையை யேவியும், கடைசியாகச் சுவாமிகளைக் கல்லிற் பிணைத்துக் கடலிலிட்டும் சிவபிரான் றிருவருளா லிவ்விபத்துக்களெல்லாம் நீங்கிக் கரையேறினர். அக்கீழோர்கள் செய்த தீமைகட்குப் பதில் நம் பெரியார் செய்தனரோ ! இல்லை. அன்றியும் இத்தீமைகள் விளைவிப்பதற்கு முதற் காரணமாயிருந்த பல்லவர்கோ னென்னு மரசன் சுவாமிகள் பெருமையறிந்து வந்து பணிய அவன் செய்த தீச்செயல்களைச் சிறிதுங் கருதாது அவனுக் கனுக்கிரகம் பாலித்தார்.

(இ - உ - ம்.)

பல்லவர்கோன் வந்துபணி யக்கருணை செய்தார்
தொல்லைநெறி வாகீசர் சோமேசா - வல்ல
இணரெரி தோயவன்ன வின்னு செயினும்
புணரின் வெகுளாமை நன்று. —சோமேச வெண்பா.

ஆனதாலிது பற்றியே உலகத்தில் பன்னூற்களில் கூறியுள்ள தீமையென்பவைகளை முற்று மொழித்து நன்மையென்று சொல்லப்பட்டவைகளையே செய்தொழுகல்வேண்டும்.

பொல்லாங் கென்பவை யெல்லாந்தவிர்

என ஔவையார் கூறியுள்ளார்.

ஆனதால் கொலையாதி பஞ்சமாபாதகங்களையும்கோபம் பொறுமை முதலான தீக்குணங்களையு மொழித்து மன்னுயிர்களை யெல்லாம் தன்னுயிரைப்போலக் கருதி மனோ வாக்குக் காயங்களால் பிறவுயிர்களுக்குத் தீமை செய்யா திருத்தலே ஜீவகாருண்ய விளக்கத்தின் முக்கிய கொள்கையாகும்.

வினு :—மேற் சொல்லப்பட்ட பஞ்சமா பாதக முதலானவைகளுக்கெல்லா முதற்காரணமா யிருப்பது யாது ?

விடை :—அது அவாவே யாகும். உலகத்தில் நல்ல காரியங்களையோ தீய காரியங்களையோ செய்து பொருளைச் சம்பாதித்து அதனால் சுகபோகங்களை யனுபவிக்க வேண்டு மென்னு மாசையே மனிதர்களிடத்தில் குடி கொண்டுள்ளது. ஆனால் சீவர்கள் செய்த முன்னை வினைக்கீடாகச் சுகதுக்க போகங்களை ஈஸ்வரன் அவரவர்களுக்குக் கருவிலேயே அமைத்துவிட்டார். எடுத்த சரீரத்திலிதை யனுபவித்தே தீரவேண்டும். இப்படி

யின்றி முயற்சியால் துக்கத்தை யொழிக்கவும் சுகத்தை யடையவு முடியாது.

(இ - உ - ம்)

வையமுழு தும்படைத்து வாழு மருணகிரி
யைய னமைத்த படியல்லா—னெய்யமன
நூறுயிர விதமாய் நொந்தாலு மெள்ளளவு
மேறுத திற்குறை யாதே. —குகை நமசிவாய தேவர்.

அன்றியும் உலகத்தி லொவ்வொருவரு மின்பமடைய முயற்சி செய்வாரே யொழிய துன்பமடைவதற்கு முயற்சி செய்ய மாட்டார். ஆனால் ஒருவர் நடந்து செல்லுங் காலத்துக் காலில் கல்லடித்து அக்காயத்தால் துன்புற வும், சிலர் வண்டி முதலானவைகளிற் செல்லுங்காலத்து வண்டி விழுதல் முதலானவைகளால் பலத்த காயம் பட்டுப் பெருந் துன்பத்தோடு வைத்தியசாலையில் பல நாளிருந்து சிகிச்சை செய்து கொள்ளவும், காசம், சுரநோய் முதலான வைகளால் பெருந்துக்கமடைந்து படுக்கையோடு பல மாதங்கள், சிலவருடங்களிருக்கவும் நினைப்பவர்களுண்டோ? இல்லை. இப்படியிருக்க மேற்சொன்ன துக்க போகங்கள் சொப்பனத்து மனுபவிக்க நினையாதிருந்த காலத்தும் ஈஸ்வர நியமத்தால் நமக்கு வருவதைப் பிரத்தியட்சமா கப் பார்க்கிறோம். இதுபோல் சுகபோகம் வருவதற் குத்தடையென்ன? இவை யிரண்டும் ஈஸ்வர நியமந்தானே! அன்பர்காள், நன்றாய் யோசித்துப் பாருங்கள். ஆனதால் ஈஸ் வரனு லில்லையென்று விதிக்கப்பட்டது நமக்கில்லவேயில்லை. உள்ளதென்று விதிக்கப்பட்டது தவறவே தவறாது எனும் நிச்சய புத்தியோடிருக்கவேண்டும்.

(இ - உ - ம்.)

இன்பத்துக் கோடியிளைக்கு ம்துபோன் மனமே
துன்பத்துக் கோடிச் சுழலாயே—யின்பமுனீ
யப்படியென் றெண்ணியிளைப் பாறியாட் பேறுபெறு
திப்படிவந் துற்பவிப்ப தென்.

இல்லாத தில்லை யுளதுதவி ராதென்று
நல்லோர் துணிபொருளை நாடுங்கா—லெல்லா
மமைத்தபடி யேவருமா லாங்கசைவென் னெஞ்சே
சமைத்தபொரு டாமறிவார் தாம். —சிவானந்தமாலை.

அன்றியும் உலகத்தில் தலை கீழாகவுங் கால் மேலாக வுமிருந்து பொருள் சம்பாதிக்க ஒருவர் முயற்சி யுறினும் ஈஸ்வர நியமமின்றி அவருக்கு விதித்தற்கு மேலொன்றும் வாராது. ஆனதால் பொருள்தேட வேண்டுமெனும் ஆசை யொழித்து ஈஸ்வர தியானத்தில் மனதைப் பதித்து நிற்பதே விவேகிகள் முக்கியகடமை யாகும்.

(இ - உ - ம்.)

நீடுந்தலை கீழ்கால் மேலாகி நின்றாலுங்
கூடும்படி யன்றிக் கூடாதா—லோடி
வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண் டாறி
யிருந்தாலோ நெஞ்சே யினி. —சிவானந்தமாலை.

அன்றியு மின்றைக் கிருப்பாரை நாளைக்கிருப்பரென் றெண்ண முடியாத வநித்திய சரீரம் நமக்கிருப்பதால் அற்ப சுகத்தை விரும்பிப் பிறவிதோறும் பெருந்துக்கத்தை விளைக் குந் தீயகாரியஞ் செய்யப்படாது: செய்வதால் அணுவளவு சுகத்துக்குப் பெரிய மலையளவு துக்கமனுபவிக்க நேரிடும்.

(இ - உ - ம்.)

ஆகாத காரியஞ்செய் தாஞ்சுகமு மாங்கதனுல்
போகாத துக்கம் பொருந்துவதும்—ஒகோ
உரைக்கி லணுவுக்கு முயர்ந்த மகமேரு
வரைக்கு நிகரென்றே மதி. —சிவபோகசாரம்.

அன்றியும் முன் செய்த புண்ணிய வசத்தால் சிலரடைந்திருக்குஞ் செல்வ முதலானவைகளைப் பார்த்துத் தாமுமவ்வா றடைய வேண்டு மெனும் பேராசை கொண்டு உலகமெல்லா மோடி யுழன்றாலும் நமக்கீஸ்வரனுல் விதித்துள்ளதெதுவோ அதுவன்றி மேலொன்றும் வாராது.

(இ - உ - ம்.)

உள்ள தொழிய வொருவர்க்கொரு வர்சுகங்
கொள்ளக் கிடையாக் குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறினு லென்
னுடலோடு வாழு முயிர்க்கு. —நல்வழி.

அன்றியும் உலகத்தில் ஒரு காரியத்தைக் கருதி முயற்சி செய்யுங் காலத்து வேறொன்றாய் முடிவதுமுண்டு, நாம் முயற்சித்தபடியே முடிவதுமுண்டு, ஒரு காரியத்தைக் கருதாமலிருக்கத் தானுகவே முடிவதுமுண்டு. ஆனதாலிவைகளை யெல்லாம் யோசிக்கு மிடத்து ஈஸ்வர நியமமாக முடிவதால் பொருள் தேட வேண்டுமெனும் பேரவாக் கொண்டுழலாமல் குடும்பத்துக்கு வேண்டிய லௌகீக முயற்சிசெயுங் காலத்து அயலார் வீட்டில் நடக்கும் சுபாசுபத்தில் தான் விவகாரம் பார்ப்பதுபோல் மனப்பற்றின்றி ஈஸ்வர நியமத்தை முன்னிலையாகக் கொண்டு தன் குடும்ப விவகாரம்

பார்த்துச் சதாகாலமு மீஸ்வர தியானத் தோடிருந்து நாம் காலங்கழித்தல் வேண்டும்.

(இ - உ - ம்.)

ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகு
மன்றி யதுவரினு வந்தெய்து—மொன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கு
மெனையாளு மீசன் செயல். —நல்வழி.

வினு :—ஆனால் கொலையாதி பஞ்சமா பாதகங்களை யொழிப் பதற்கும் ஆசையை யொழிப்பதற்கும் நாம் செய்ய வேண்டிய காரியம் யாது?

விடை :—மேற்சொன்ன தீயவைகளை ஒழித்து நல்லவை களையெல்லாம் அடைவதற்கு ஆன்றோர்களினத்தைச் சேரல்வேண்டும். பெரியார்கள் துணையைக் கொண்டு தான் நாம் இம்மை மறுமைப் பயன்களை யடைய வேண்டும். இது பற்றியே 'சான்றோரினத்திரு' 'பெரி யாரைத் துணைக்கொள்' என ஔவையார் கூறியுள் ளார்.

பெரியாரென்று சொல்லப்படுவோர் முக்குணங்களில் மேலானதான சத்துவகுண முடையவரே யாவர். அவர்கள் கூட்டத்தில்தான் நாமெப்போதும் நீங்காதிருக்கவேண்டும். அப் பெரியாரையே எக்காரியத்திலுந் துணையாகக்கொண்டு நம் காரியத்தை முடித்துக்கொள்ளல் வேண்டும். இவர்கள் சாஸ்திர வாராய்ச்சியிலும் உலகவனுபவத்திலும் விசேடப் பட்டவராவார்கள். முற்காலத்தி லிவ்வகைப்பட்ட பெரியார் கடாட்சம் பெற்று நற்கதியடைந்த பெரியோர்களில் வால்

மீகி மகரிஷி யொருவர். இவர் பிராமணசாதியில் பிறந்து பூர்வகன்ம சேடத்தினுல் சூத்திர சகவாசம் பெற்றுச் சூத்திரமாதினை மணம்புரிந்து வனத்தில் கிராதத்தொழிலையே புரிந்து கடைசியில் சப்தரிஷிகளின் கடாட்சத்தினுலும் உபதேசத்தாலும் வால்மீகராகி யுலகம் புகழும் இராமாயண கிரந்த கர்த்தாவானது யாவரு மறிந்ததே யாகும்.

வினு :—தாழ்ந்தவர் உயர்தற்கு ஏதுவான இச் சாது சங்கம் உயர்ந்தோர் உய்தற்கும் ஏதுவாகுமோ?

விடை :—ஆம். அதனைப் பின் வரும் சரிதங்களாற் காண்க.

பெருமிழலைக் குறும்பர் நம் பெரியாராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளது திவ்ய திருவுருவத்தை மனதினுல் தியானித்துக் கொண்டிருந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் கைலாயம் செல்வதற்கு முன்னமே தாம் கைலாயம் சென்றனர்.

அப்பூதியடிகள், பெரியாராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் திவ்ய திருநாமத்தைச் சதாகாலமும் கூறியும், தமக்கு உயிர்ச்சார்பு பொருட் சார்பாயுள்ள யாவற்றிற்கும் இட்டும், எழுதியும் மேலான பேரின்ப வீடடைந்தனர்.

அன்றியும், திருஞானசம்பந்த சுவாமிகள் திருக்கலியாண விசேடத்தில் வந்திருந்த அடியார்களன்றிச் சிவிகை தாங்கினவர்களும் திருக்கலியாண மகோற்சவத்திற்குப் பலவித பொருட் சுமை எடுத்துவந்தவர்களும் மற்றுமுண்டானவர்களும் சிவபெருமான் திருவருளால் ஒருங்கே பேரின்ப வீடடைந்தனர்.

இதனால் முன்னாளில் பெரியாரைத் தியானித்தும் அவர் திருநாமங்களைக் கூறியும் 'அவர்களுக்குத் தொண்டு செய்தும் பெரும் பேறடைந்தவர் பலராவர். ஆதலால் இந்நாளிலும் நமக்கு நல்லோர் சகவாசமே வேண்டும். அவர் நட்பைவிட்டுக் கீழானவர் சினேகங் கொண்டால் அது துன்பத்தை விளைக்கும்.

"நல்லிணக்கமல்ல தல்லற்படுத்தும்"

என ஔவையார் கூறியுள்ளார்.

அன்றியும் மிக்க செல்வந்தனாயினும் மிக்க பூமியுள்ளவனாயினும் மிக்க புத்திசாலியாயிருந்தாலும் தவத்திற் சிறந்த பெரியார் நட்பை மாத்திரம் அவன் கொள்ளானாயின் மேலே சொன்னவைகளெல்லாம் அவனுக்குப் பயன்படா. மேற்கூறிய மூன்றும் ஒருவனுக்கில்லாவிடினும் பெரியாருடைய நட்பைமாத்திரம் விடாது கொண்டொழுகுவானாயின், சகல சம்பத்துக்களையும் ஒருங்கே யடைவான். (இ - உ - ம்.)

பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளா னாயிடினும்
என்னுள்ளா னவனவ னிருந்தவர்த நட்பிலனேல்
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லா னாயிடினும்
என்னில்லா னவனவ னிருந்தவர்த நட்புளனேல்.

—குசேலோபாக்கியானம்.

எனும் ஆன்றோர் வாக்குப் பிரமாணமே சான்றாகும். ஆனதால் நாம் நல்லோர் கூட்டத்தை விடாது அவர் சொற்படி அடங்கி நடந்து வருவோமாகில் தீமை என்பவை யணுகாமல் நன்மைகளையெல்லாம் அடையலாம்.

அப்படியன்றித் தீயோரினத்தைச் சேர்வானாயின் இம்மை மறுமைகளில் அவனடையும் துக்கத்துக்கும் பழிபாவங்

களுக்கும் அளவேயில்லை. இதற்குத் திருட்டாந்தம். சகல சற்குணங்களும் நிறைந்து வரகவியாயுள்ள புலவர் திலகம் காளிதாசர் தீயினமாகிய தாசியின் சம்பந்தத்தாலேயே மரண மடைந்தார். இதுவே தீயினத்தைச் சேர்தலுக்குப் போதுமான சான்றாகும்.

(இ - உ - ம்.)

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில். —திருக்குறள்.

இதனால் தீயோரினத்தைச் சொப்பனத்திலும் நினையாமல் நல்லோர் கூட்டத்தைச் சதாகாலமும் விட்டு நீங்காமலிருக்க வேண்டுமென்பது நமக்கு வெள்ளிடை மலைபோல் விளங்காநின்றது.

அன்றியும், சிவகணத் தலைவராகிய நந்தியெம்பெருமான் பூவுலகத்திற்கு வருங் காலத்தில் கொலை, திருடு, பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல், பொய், பயனில்மொழி, செய்நன்றிமறத்தல், நிந்தனை, வஞ்சனை, பிறர்மனைநயத்தல், என்று சொல்லும்படியான தீமைகள் யாவும் போயினவென்றால் பெரியார் கூட்டத்தைச் சதாகாலமும் விட்டு நீங்காதிருப்பவர் அடையும் இருமைப் பலன்களுக்களவுண்டோ!

(இ - உ - ம்.)

கொலைகள வழுக்கா றவாவொடு வெகுளி
கொடுஞ்சொல் பொய்பயனில் கூறல்
நிலையழீஇ யொருவன் செய்நன்றி மறத்தல்
நிந்தனை வஞ்சனை பிறர்தஞ்

சிலைநுதன் மடவார் கருதலென் றினைய
  தீமைக ளியாவும் போயினவால்
நலமலி தரும மூர்த்தி யாகியநம்
  நந்தி வானவன் புவிவருநாள். —பிரபுலிங்கலீலை.

அன்றியும், பத்திரகிரியார் உச்சிட்டத்தை யுண்டு அவர் பாலிருந்த ஒரு பெட்டைநாய் மறுஜன்மத்தில் காசிமா நகரத்தரசன் விசுவகுத்த னென்பவனுக்கு மகளாகப்பிறந்து ஞானவல்லி என்னும் பெயர் பூண்டு சிவயோகியார் உச்சிட்டப் பிரசாத முண்ட புண்ணிய வசத்தால் பூர்வஞானம் விளங்கப் பெற்று மாதா பிதாக்களுக்குத் தன் குருநாதன் பெருமையை யறிவித்து அவரிடம் தன்னைச் சேர்க்கும் படிச்சொல்ல அப்படியே அவர்களும் அப்பெண்ணைப் பல்லக்கிலேற்றித் திருவிடைமருதூர் வந்தடைய உடனே அப்பெண்மணி பத்திரகிரியார் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து, 'அடி நாயேன் மீட்டுமுன்றிருவடிப் பேற்றிற்கே வந்தேன்' என்று வணங்கி நிற்கச் சுவாமிகளும் அவ்வரலாறு முழுது மொருங்குணர்ந்து அப்பெண் கைப் பற்றி ஆசிரியர் சந்நதியிலிட்டுச் சுவாமிகள் உச்சிட்டத்தை யுண்ட இந்த நாய்க்கும் பிறவிவரலாமோ வென்று கண்ணீரொழுக விண்ணப்பம் செய்து நின்றனர். பட்டினத்தடிகளும் 'சிவன்செயலுக்கு நாம் யாது செய்யவல்லோம்' என்று திருவருளை நாடினவுடன் அவ்விடத்தில் ஒரு பெருஞ் சோதியுண்டாயிற்று. சிவபெருமான் றிருவாணைப்படிப் பத்திரகிரியார் அப்பெண்ணோடு அச்சோதியில் புகுந்து கலந்து பேரின்ப வாழ்வடைந்தனர். இச்சரிதத்தால் பெரியார் உச்சிட்டத்தை யுண்ட பெண்ணாயானது சிறந்த மானிடப் பிறப்படைந்து

பூர்வஞானத்தால் பேரின்ப வீடடைந்ததென்றால் பெரியார் பெருமையை யுலகத்தில் யாவரளவிடற் பாலார்!

ஆனதால், சிலர் செல்வத்தாலும், கல்வியாலும், அதிகாரத்தாலும் நம்மினும் பெரியார் உலகத்திலில்லை, நாமொரு பெரியோரை அடைந்து அவர் சொற்படி நடப்பதென்பது கூடாதென்று ஆணவமலச் செருக்கடைந்து இருக்கிறார்கள். இது முற்றும் அறியாமை. இது எதையொக்குமென்றால் இயற்கையிலேயே குரங்கு அதற்கு வெறியும் தொடர்ந்து, பேயும் பிடித்துக் கள்ளுமுண்டு, பூனைக்காஞ்சியென்னும் புதையில் விழுந்து அதையோர் தேளுங் கொட்டினால், அதன் நிலைமை யெப்படியிருக்கும்! அதுபோல அற்பர்களுக்கு, அறிவின்மையும் இளமைநலமும், அதிகார பதவியும், செல்வப் பெருக்கும், உளதேல் அவர்கள் நிலைமை மேற்சொன்ன மர்க்கடத்தின் நிலைமையையே யொக்கும். ஆதலால் அவ்வகைப்பட்டவர்கள் உலகத்திலிருக்கும் செல்வந்தர், கல்வியாளர், அதிகாரஸ்தர்முன் நாமெம்மாத்திரமென்று அடங்கிப் பெரியோர் சொற்படி நடப்பவரே பெரியோர்களாலும், நூல்களாலும் பெரியோரென்று சொல்லப்படுவார். அப்படியன்றித் தன்னைத்தானே பெரியவராக யாவரொருவர் மதிக்கிறாரோ அவ்ரைப்போன்ற கீழானவர் உலகத்தில் வேறொருவருமில்லை. இவ்வகங்காரத்தா லிவரைப் போல் துன்பமனுபவிப்பவர் இங்கொருவருங் கிடையாது.

இ - உ - ம்).

நாம்பெரிய ரென்னுமதை நாடா் தடக்குமவர்
தாம்பெரிய ரென்றுமறை சாற்றியிடும்—நாம்பெரிய

ரென்பார் சிறியரி வாலா தில்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல். —சிவானந்தமாலே.

எனும் மேலோர் வாக்கியப் பிரமாணத்தால் எவ்வளவு சம்பத்து முதலானவையிருந்தாலும் அரசர் முன்னும் காலன் முன்னும் வியாதியின் முன்னும் அடங்கிவிடுதல் போலப் பெரியோர் சன்னிதானத்தில் அவர் சொற்படி அடங்கி நடப்பதே அறிவாளிகளின் முக்கிய கடமையாகும்.

வினு :—ஆனல் உலகத்தில் மேல் சொன்ன பெரியாரிணக்கத்தோடு மனிதர்கள் ஒருவருக்கொருவர் செய்யும் நற்காரியங்கள் யாவை?

விடை :—உலகத்தில் செல்வந்தர்களாய் இருப்பவர்கள் தங்கள் பொருள் வருவாய்க்குத் தக்கபடி தானதருமங்களைச் செய்தல் வேண்டும். அப்படிச் செய்யும் தான தருமங்கள் பலவற்றினும் உயர்வானதும் முக்கியமானதும் அன்னதானமே யாகும். பசியால் பட்டினிகிடந்து வருந்து மேழைகளுக்கு அவர்கள் பசியைப் போக்குதலும் பிறரிடம் போய் யாசிப்பதற்கு நாணமடைந்து பசித்து வருபவர்கள் முகக்குறிப்பறிந்து அவர்கள் பசியை நீக்குதலும் செல்வந்தர்களின் முக்கிய கடமை. உலகத்தில் சிலர் வியாதியோடு நெடுநாள் உயிர் வாழ்ந்திருக்கலாம். பசி வந்த காலத்து பசிப் பிணியோடு சிறிது நாளாயினும் உயிர் வாழ்தல் முடியாது. ஒருவர் பயத்தோடு நெடுங்காலம் வாழலாம். ஆகாரமின்றி உயிர் வைத்திருக்க முடியாது. ஒருவர் ஒரு பொருளின் மேலிச்சை வைத்து அது கிட்டா

விடினும் அவ்விச்சையோடு நெடுநாள் வாழலாம். பசி வந்த காலத்தில் அப்படி உயிர் வாழ்தல் முடியாது. வேறு எவ்விதமான துன்பம் வந்த காலத்திலும் அத் துன்பத்தை யனுபவித்துக் கொண்டு பல நாள் ஜீவித் திருக்கலாம். பசி தாகத்தோடு உயிர் வாழ்தல் முடி யவே முடியாது. பெரும் வியாதியால் வருந்துகிறவ னும் பசி வந்த காலத்தில் அதை மறந்து பசியினுல் வருந்துகிருன். கொலைத்தண்டனை விதிக்கப்பட்டவனும் பசி வந்த காலத்து அக்கொலைத் துன்பத்தை மறந்து பசியினுல் துன்பப்படுகிருன். ஆனதால் பசியால் வருந் துகிறவர்களுக்கு அவர்களது பசிப்பிணியை அவசி யம் போக்க வேண்டும். இது பற்றியே பட்டினத் தடி களும் "பசித்தோர் முகம் பார்" என்று திருவாய் மல ந்தருளினுர். இது வன்றியும் முற்பிறப்பில் பெருஞ் செல்வர்களாக இருந்து பசும் பொன்னுலாகிய பாத்தி ரத்தில் அறுசுவையோடு கூடிய பதார்த்தங்களோடு பத்தினி யானவள் அன்போடு ஊட்ட அவ்வாகாரத் தை யுண்ணுகிற காலத்துப் பசியால் வருந்து மேழை கள் தெருவில் வந்து எங்கள் பசிப்பிணியைப் போக்கு மையா வென்று கூக்குரலிட அவர்களிடத்தில் காரு ண்ய மின்றிக் கடுமொழி பேசித் துரத்தினவர் எவரோ அவரே இப் பிறப்பில் ஒரு மண்பாத்திரத்தைக் கையி லேந்திக்கொண்டு வீதி வழி வருங்காலத்து நாய்கள் குரைத்துத் துரத்த வீடு வீடாய்ச் சென்று 'அம்மா, பெரும் பசியால் வருந்துகின்ருேம் அன்ன மிடுங்க' ளென்று கூக்குரலிடுகின்றவர்க ளாவார்கள்.

(இ - உ - ம்.)

மண்ணார் சட்டி காத்தேந்தி
மாநாய் கவ்வுங் காலினராய்
அண்ணாந் தோடி யிரப்பாரை
யறிந்தோ மறிந்தோ மம்மம்மா
பண்ணார் மொழியார் பாலடிசில்
பைம்பொற் கலத்திற் பரிந்தூட்ட
உண்ணா நின்றே யொருவருக்கு
முதவா மாந்த ரிவர்தாமே.

—விவேக சிந்தாமணி.

என்று கூறியதால் செல்வந்தராக இருக்கப்பட்டவர்கள் இப்பிறப்பில் பசித்து வந்த ஏழைகளுக்குப் பரிவோடு அன்ன மிடுவாராகில் அவர் மறுபிறப்பிலும் மிக்க செல்வந்தராய் வாழ்ந்து பிறகு மேலான பதவியும் அடைவார்கள். அப்படிச் செய்யாதவர்கள் மேற்சொன்ன நிலையை யடைவார்கள். அன்றியும் பொருளைச் சம்பாதித்த ஒருவன் அதைச்சேர்த்து வைக்குமிடம் யாதென்றால் வறியவர்களது பசியைப் போக்குதலே யாகும்.

(இ - உ - ம்.)

அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. —திருக்குறள்.

என்பதனாலும் அறிக.

அன்றியும் செல்வந்தர்களாகிய சில சம்சாரிகள் விவாக முதலிய விசேட காரியங்களில் பந்தலலங்கரித்தல், விசேட வாத்தியம், வைத்தல் ஆடல் பாடல் கச்சேரி ஏற்பாடு செய்

தல் ஊர்க்கோல முதலிய விநோதங்கள் செய்தல் ஆகிய இவைகளிலும், அப்பவர்க்கம், சித்திரான்னம், முதலியவை களிலும் ஏராளமான பொருளைச் செலவழித்துச் சந்தோட த்திலழுந்தி யிருக்குந் தருணத்தில் பசித்த ஏழைகள் முகத் தைப் பார்க்கவுஞ் சம்மதிக்கிறதில்லை. அவர்களிற் பெரும் பாலார் வந்து பசிக்கிறது அன்ன மிடுங்களென்று கேட்டால் அவர்களைத் தடியெடுத்து அடித்துத் துரத்துவதைப் பிரத்தி யட்சமாகப் ப்ார்க்கிறோம். மேற்சொன்ன பலவித டம்ப நிமித்தம் பொருளைச் செலவழித்த அக்கலியாண வீட்டில் அவனுக்காயினும் அவன் மனைவி மக்கட்காயினும் அக்கால் ஒரு விபத்து வந்து விட்டால் அப்பந்தல், ஆடல் பாடல், வாத்தியம், வரிசை, ஊர்க்கோல முதலிய விநோதங் களும் அப்பவர்க்கம், சித்திரான்னம்' முதலிய பெருமைப் பாடுகளும் அவ்வாபத்தைத் தடை செய்யக் காணோம். ஆனதால் இவ்வகைப்பட்ட டம்ப நிமித்தத்தில் பெரும் பொருள் செலவழிப்பதிலும் அப்பொருளில் சிறிது பாகம் செலவழித்துப் பசித்த ஜீவர்களுக்கு ஆகாரங் கொடுத்துப் பசியை நீக்கி அவர்கள் அகத்திலும் முகத்திலும் கடவுள் விளக்கத்தையும் கடவுளின்பத்தையும் வெளிப்படச் செய் திருந்தார்களானால் அந்த விளக்க வின்பம் அத்தருண த்தில் நேரிட்ட ஆபத்தை நீக்கி விளக்கத்தையும் இன்பத் தையும் சத்தியமாக உண்டு பண்ணும். அல்லாமலும் குரு டர், செவிடர், முடவர், ஊமை, பிணியாளர், வயோதிகர் முதலானவர்கள் பசிப்பிணியால் வருந்துவதை நாம் கேள் விப்பட்ட காலத்து அவ்விடத்திற் சென்று ஆகாராதிகளைக் கொடுத்து அவர்கள் பசியைப் போக்குவது ஜீவகாருண்யத் தின் முக்கிய கடமை யாகும்.

வினு :—ஆனுல் கொலை செய்யுங் கொடியரும் புலாலுண்ணும் புலையருமாகிய இவர்களுக்குப் பசிவந்த காலத்து ஆகாரம் கொடுத்தும் ஆபத்து வந்த காலத்து அதினின்றும் நீக்கவும் வேண்டுமோ ?

விடை :—கொலைத்தொழிலைச் செய்யும் கொடிய பாதகராயினும் புலாலுணவைப் புசிக்கும் பெரும் புலையராயினும் பசியால் வருந்துங் காலத்து அவரைக் கண்டபோது ஆகாரங் கொடுத்து அவர்கள் பசிப்பிணியை யொழித்தல் வேண்டும். அவர் நமக்குப் புறவினத்தார். அவருக்குப் பசிநீக்குதல் ஒன்றே யொழிய வேறு வகையான பொருள்முதலானவைகள் கொடுத்தால் அத்தீயவர்கள் அப்பொருளைக் கொண்டு பாபகாரியம் செய்வர். அவர்கள் செய்யும் தீய காரியத்திற்கு இவன் பொருள் ஏதுவானதால் அந்தப் பாவமும் இவனைச் சேர்ந்து அதனுலிவன் நிரயத் துன்பமும் தாழ்ந்த பிறவியுமடைவது நிச்சயம். இதற்குத் திருட்டாந்தமாக நந்தனுர் பூர்வ ஜன்மத்தில் உயர்குலப் பிராமணராய் இருந்து ஓர் கொலைஞனுக்குப் பொருள் கொடுத்த பாவத்தால் அடுத்த பிறவியில் அவருக்கு அத்தாழ்வான ஜன்மம் வந்ததாக உலகத்தார் சொல்லுகிறுர்கள்.

(இ - உ - ம்)

உயிர்க்கொலையும் புலைப்புசிப்பு முடையவர்க ளெல்லா
முறவினத்தா ரல்லரவர் புறவினத்தா ரவர்க்குப்
பயிர்ப்புறுமோர் பசிதவிர்த்தன் மாத்திரமேபுரிக
பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புதவே லிங்கே
நயப்புறுசன் மார்க்கமவ ரடையளவு மிதுதான்
நம்மாணை யென்றெனக்கு நவின்றவரு ளிறையே,

மயர்ப்பறுமெய்த் தவர்போற்றப் பொதுவில்நடம் புரியு
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே.

**சிதம்பரம் - இராமலிங்கசுவாமிகள்.**

எனு மான்றோர் வாக்குப்படி அக்கொடியவரது பசியை மாத்திர மொழித்தல் வேண்டும்.

அன்றியும் கொலைத் தொழிலும் புலைப்புசிப்புமுடைய கொடியவர்களுக்கு நிரேதுவாக ஓர் விபத்து வந்தால் ஜீவ காருண்யமுடையவர்கள் அதைக் கண்ட காலத்து அவ்விபத் தினின்று மவரை நீக்கி அவர் பயத்தை யொழித்தல்வேண் டும்.

(இ - உ - ம்)

கொடியவரே கொலைபுரிந்து புலைநுகர்வா ரெனினுங்
குறித்திடுமோ ராபத்தில் வருந்துகின்ற போது,படியிலதைப்
பார்த்துகவே லவர்வருத்தந் துன்பம் பயந்தீர்த்து விடுக
வெனப் பரிந்துரைத்த குருவே. —**இராமலிங்கசுவாமிகள்.**

எனு மான்றோர் வாக்குப் பிரமாணமுங் காண்க.

அன்றியும் ஜீவகாருண்ய முடையவர்கள் மழையின்றி வாடிய பயிரைக் கண்டகாலத்தும் பசியாலிளைத்து வீடுதோறும் பிச்சை யெடுத்தும் பசி யடங்காதவர்களைக் கண்ட விடத்தும் மானமுடையவராய் "ஏற்பதிகழ்ச்சி" என்று நினைத்து மனமிளைத் திருப்பவர்களைக் கண்ட காலத்தும் தாமு மிளைத்துத் துக்கமடைவார்கள்.

(இ - உ - ம்)

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினு லிளைத்தே,

வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்,
நீடிய பிணியால் வருந்துகின் றோரென்
நேருறக் கண்டுளந் துடித்தேன்,
ஈடின் மானிகளா யேழைகளாய் நெஞ்சிளைத்
தவர்தமைக் கண்டே யிளைத்தேன்.

—இராமலிங்கசுவாமிகள்.

இதுகாறும் கூறிவந்தது பசித்தவர்களுக்கு அன்னங் கொடுத்தலாகிய பரஜீவகாருண்யமாகும். இதனால் வருமின்பம் பரவின்பமாகும். ஆனதால் இவ்வன்னதானத்தைச் செய்தவர்கள் இம்மையில் சகல நன்மைகளையு மடைந்து மறுமையில் இனிப் பிறவாநெறியாகிய மோட்ச வீட்டையும் அடைவது நிச்சயம்.

ஆனால் உலகத்தில் பற்பல தானதருமங்கள் செய்வதெல்லாம் தங்கள்தங்கள் பொருள் வருவாய்க்குத் தக்க அளவுதான் செய்யவேண்டும்.

ஒரு பெருஞ்செல்வவந்தன் பதினாயிரம் பேருக்கு அன்னமிடும் புண்ணியமும் ஒரு வறியவன் ஒருவருக்கு அன்னமிடும் புண்ணியமும் ஆகிய இவ்விரண்டும் சரியேயாகும்.

இப்படியன்றி, உலகத்தில் சிலர் டம்ப நிமித்தமும் விருதா காரிய நிமித்தமுமாகக் கடன் வாங்கிப் பொருட் செலவிடுகின்றார்கள். இது மிகவும் கெடுதியான காரியம். உலகத்தில் கடன்படுவதே மிகவும் கொடியது. அதிலும் தான்பட்ட கடனைக் கொடுப்பதற்குத் தக்க முயற்சி செய்யாமல் இருப்பது அதனினும் கொடியதாகும். எப்படி

யெனில் பாம்பு கடித்து விஷமேறின ஒருவனுக்கு அக்கணமே தக்க ஔடதம் முதலானது கொடுத்து அவ்விஷத்தைப் போக்காது சும்மா இருப்பதை யொக்கும். உலகத்தில் ஒவ்வொருவரும் தம் குடும்ப வருவாய்க்குத் தக்க செலவுதான் செய்யவேண்டும். அப்படியின்றி அதிகஞ் செய்வாராயின் தங்கள் மானமும்போய்ப் புத்தியுங் கெட்டுத் தாம் சென்ற இடங்களிலெல்லாம் கள்ளரைப்போல் பதுங்கி எழுவகைப் பிறவியிலும் தீயவராய் நல்லோர்களுக்கும் பொல்லாதவராகி விடுவார்.

(இ - உ - ம்.)

ஆன முதலி லதிகம் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனா யெழுபிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு

—நல்வழி.

எனும் நரை மூதாட்டியின் வாக்கா லுணர்க.

அன்றியும் கடன்படுவோர் அடையும் துக்கமானது தேகாந்தியத்திலடையும் மரணாவஸ்தைத் துக்கத்திற்கு ஒப்பாகும்.

(இ - உ - ம்.)

விடன்கொண்ட மீனைப் போலும் வெந்தழல் மெழுகு போலும்
படங்கொண்ட பாந்தள் வாயில் பற்றிய தேரை போலும்
திடங்கொண்ட ராமபாணம் செருக்களத் துற்ற போது
கடன்கொண்டார்நெஞ்சம்போலும் கலங்கினான்இலங்கைவேந்தன்.

—கம்பராமாயணம்.

எனும் பெரியோர் வாக்கால் உலகத்தில் டம்ப நிமித்தம் கடன்வாங்கி வீண்செலவு செய்வது இம்மை மறுமையில் பலவிதத் துக்கத்துக்கு ஏதுவாவதால் அவரவர் பொருள் வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்யவேண்டுமென்பது நமக்கு நன்கு விளங்குகிறது. உலகத்தில் பெருஞ் செல்வ வந்தராய் இருப்பவர்கள் பொருளை நன்மார்க்கத்தில் செல வழியாராயின் இம்மை மறுமைகளில் பலவிதத் துன்பமடைவர். ஒருவர் தாம் சம்பாதித்த பொருளைச் சிவனடியார் விஷயத்திலும் மற்றுமுள்ள நல்லோர்கள் விஷயத்திலும் தான தருமம் செய்தல்வேண்டும். தவமும் நல்லொழுக்கமும் நிறைந்த பெரியாருக்கு ஒருவன் சிறிது பொருள் கொடுப்பினும் அதனால் வரும் புண்ணியம் அவனுக்கு மலையைப் போல் அதிகமாகும்.

(இ - உ - ம்.)

உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்.

—நாலடியார்.

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

—திருக்குறள்.

எனும் ஆன்றோர் வாக்குப் பிரமாணத்தாலுணர்க.

அன்றியும் உத்தமராகிய மெய்ஞ்ஞானிகளுக்கு அமுது படைத்தல் மேலாகும். ஆயிரம் அக்ராரம் கட்டிப் பிராம் மணர்களுக்குத் தானம் செய்வதிலும், அனேக சிகரங்க

ளோடு கூடிய பல கோயில்கள் கட்டுவதிலும் ஞானிக்கமு திடல் மேலாகும்.

(இ - உ - ம்.)

அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
பரம ஞானி பகலுண் பலத்திற்கு
நிகரிலை யென்பது நிச்சயந் தானே. —**திருமந்திரம்.**

இப்படிச் சற்பாத்திரத்திலும், சிவனடியார்களுக்கும் பயன் படாத தீயோருடைய பொருள் 'சூனியம், பேயாட்டம், பொதுமாதர், வீண்சண்டை, திருடர், கள்ளுண்ணல், இராஜாங்க தண்டம், வீண் வழக்கு, அக்கினி பற்றியழிதல் முதலானவைகளால் ஒழிந்து போய் விடும்.

(இ - உ - ம்.)

நம்ப னடியார்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம் - வம்புக்காம்
கொள்ளைக்காம் கள்ளுக்காம் கோவுக்காம் சாவுக்காம்
கள்ளர்க்காந் தீக்காகுங் காண். —**ஔவையார்.**

எனும் மேலோர் வாக்கினுல் உலகத்தில் பொருளுடையவர் மேற்சொன்ன சற்பாத்திரத்திலேயே பொருளைச்செலவழித்தல் வேண்டும். அப்படிச் செய்வாராயின் இம்மையில் சிவஞானத்தை யடைந்து தேகாந்தியத்தில் பேரின்ப வீடடைவர்.

(இ - உ - ம்.)

தானந் தவம் தருமம் சந்ததமும் செய்வர்சிவ
ஞானந் தனையடைய நல்லோர் பராபரமே.
—**தாயுமானவர்.**

எனுமான்றோர் வாக்கால் உலகத்தோர் பொருளைச் சற்பாத்திரத்தில் செலவழித்து இருமைப் பயனுமடைய வேண்டு மென்பது நன்கு விளங்குகின்றது. .

வினு.—ஆனல் மேற்சொன்ன கொலையாதி பாதகங்களை யொழித்துப் பெரியோர் நட்பை நீங்காது நல்வழியில் நடப்பவர்களும் வியாதி, வறுமை முதலான துக்கங்களனுபவிப்பதென்ன ?

விடை :—ஈசுவரனுல் முன்னை வினைக்கீடாக இச்சரீரத்துக்குக் கருவி லமைக்கப்பட்ட சுகதுக்க போகங்களை ஒருவரும் மாற்றிக் கொள்ள முடியாது. தவத்திற் சிறந்த பெரியோராயினும் அகண்ட செல்வவந்தராயினும் மிக்க பேரறிவாளராயினும் சர்வ காரியங்களையுஞ் செய்து முடிக்க வல்லவராயினும் ஈசுவரன் விதித்த விதியை வெல்லுதல் முடியாது.

(இ - உ - ம்.)

பண்டைப் பழவினை விளைந்தால்
மாற்றுவார் யாரென மறுத்தார். —திருவிளையாடல்.

(இ - உ - ம்)

முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதிதரு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்.
—கந்தபுராணம்.

எனு மான்றோர் வாக்குப் பிரமாணமே சான்று.

அன்றியும் ஈசுவரன் கருவில் நியமித்து விட்டதால் அதை அனுபவித்தா லன்றி ஈசுவரனுலுமதை யொழிக்க முடியாது.

(இ - உ - ம்.)

அமைத்தபடி யெல்லா மனுபவிப்ப தன்றியே
யுமைக்குரி யோனு மொழிக்க முடியாவே.

—சிவஞான வள்ளல்.

அன்றியும் சர்வலோக நாயகராகிய சிவபெருமான் ஒருவர் தவிர மற்றையோர் உலகத்தில் ஊழை வென்றவர் கிடையாது.

(இ - உ - ம்.)

ஆழி யானு மயனு மறிகிலா
ஏழை பங்கனை யன்றி யிருநிலத்
தூழை வென்றவ ருண்டுகொலோ சொலாய்
மாழை போன்று மலர்ந்துள ஞாழலே.

—சிவஞான வள்ளல்.

அன்றியும் மேலுலகத் துள்ள தேவர்களுக்குச் சரீர சம்பந்தமான பலவிதத் துக்கங்கள் உள வென்றால் மண்ணுலகத்தில் பந்தத்தில் கட்டுப்பட்டிருக்கும் மனிதர்கள் முன்னை வினையை வெல்லுதல் கூடுமோ, கூடாது.

(இ - உ - ம்)

சந்திரனுக் குடலூனங் தனதனுக்கோர்
கண்ணூனந் தருவின் நீழல்
இந்திரற்கோ பகக்குறியாம் யமனுக்கோர்
புழுக்காலா மிரவி யீன்ற
மைந்தனுக்கோர் கான்முடமாம்
வனசனுக்கோர் தலைகுறையாம் வரலா றீதேல்
பந்தமுள மானிடரை விதிவிடுமோ
ஆலவாய்ப் பதியு ளானே. —தனிப்பாடல்.

என்றதனால் ஈசுவரனால் முன்னே வினைக்கீடாகக் கருவில் நியமித்த வினையை மாற்றுதல் ஒருவராலும் முடியாது.

வினா :—ஆனால் இந்த சீவகாருண்ய விளக்க மென்னு மிந் நூலில் கூறிய வண்ணம் தவறாமல் நூல் சொன்ன வண்ணம் உலகத்திருப்பவர்கள் நடப்பார்களா?

விடை:—இதுபற்றிக் கூறுவாம். ஒருவர் ஒரு நாயைப் பிடித்து அழகிய சங்கிலியால் கட்டிவைத்துக்கொண்டு பாற்சோறிட்டு வளர்த்தாலும் அச்சங்கிலி அவிழ்ந்த மாத்திரத்தில் மலத்தினையும், பழைய தோலினையும், முரட்டெலும்புகளையும் கௌவிக்கொண்டு அருகேவரும் மனிதரைக் கண்டு உறுமுதல்போல் ஒருவர் பாவமிது புண்ணியமிதுவென்று வாசிக்குமளவும் சொல்லுமளவுங் கேட்டிருந்து அவ்விடம் விட்டு நீங்கினமாத்திரத்தில் பாபகாரியங்களையே செய்துகொண்டு நல்வழி காட்டுவாரைக் காணுந்தோறும் வெறுப்புடையவராயிருப்பவரும் நாய்த்தன்மையோ டிருப்பவரும் உலகத்தில் பலருளர்.

(இ - உ - ம்.)

அவ்விய மில்லா ரறத்தா றுரைக்குங்காற்
செவ்விய ரல்லார் செவிகொடுத்துங் கேட்கலார்
கவ்வித்தோ றின்னும் குணுங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளறேற்று தாங்கு.

—நாலடியார்.

கன்மமே பூரித்த காயத்தோர் தஞ்செவியில்
தன்மநூல் புக்காலுந் தங்காதே—கன்மமெலும்

புண்டுச மிப்பிக்கு நாயுண்ணுவி நெய்யதனை
யுண்டுச மிப்பிக்குமோ வோது.

—நீதிசாரம்.

கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினுங்
குப்பை கிளைப்போவாக் கோழிபோன்—மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்.

—நாலடியார்.

எனும் ஆன்றோர் வாக்கியப்படி இத்தன்மையுடையவர் இந் நூலை வாசித்து அவ்வண்ணம் நடப்பதரிதாம்.

அன்றியும் இவ்வுலகத்தில் உருவமாத்திரம் மனிதவுருவமாய் இருந்தாலும் பருந்து, கோட்டான், ஆந்தை, காக்கை ராஜாளி, முதலான கொடிய பறவை இனத்தவரும், புலி, கரடி, சிங்கம், காட்டானை முதலிய துஷ்டமிருகங்களினத்தவரும் நன்று, தீது, உயர்வு, தாழ்வு, அவைநோக்கு, குறிப்பறிதல் முதலானவையின்றிக் கல், மரம், முதலானவைகளை யொத்த வினத்தவரும், முதலை, சுறு, திமிங்கிலம், முதலான நீர்வாழ்ஜாதி யினத்தவரும், இன்னும் பலஜாதியினத்தவரும் உலகத்திலுளர். இவ்வகைப்பட்ட பறவைகள் முதலான வினத்தைச் சேர்ந்தவர்க ளிந்நூலை வாசித்து இதிற் சொன்னபடி நடந்து பிறப்பிறப்பை யொழித்துப் பேரின்ப வீடடையார். கல்வி, அறிவு, ஒழுக்கம், கருணை, சாந்தம் முதலான சற்குணங்கள் நிறைந்து பிறவிப்பயனையடைய இயற்கையான மனித உருவந்தாங்கிய மனிதரும் தேவதாம்ஸமாய் உலகத்திலவதாரம் செய்தருளிய மகான்களுமே இறைவனு லருளிய வேதாகம புராண முதலானவைகளிற்

சொல்லப்பட்ட நல்வழியில் நடந்து பிறவியை யொழித்துப் பேரின்ப வீடடையும் பெரியா ராவர்.

(இ - உ - ம்.)

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு கல்லுண்டு மரமு முண்டு
மனிதரிலும் நீர்வாழுஞ் சாதியுண்டு அனேககுல மனித ருண்டு
மனிதரிலு மனிதருண்டு வானவரு மனிதராய் வருவ துண்டு
மனிதரிலேபிறப்பறுக்கவந்ததேயருமையெனவகுத்தார்முன்னோர்

—சிவானந்தபோதம்.

எனும் ஆன்றோர் வாக்குப் பிரமாணத்திலுங் காண்க.

ஆனதால் பேரறிவாளர்கள் இல்லறத்தில் சிறிதும் தவறாமல் தங்கள் தங்கள் சமயத்துக் குரிய கடவுளை வழிபடுவதோடு அடியார்களையும் வழிபாடு செய்து தங்கள் தங்கள் சமயத்துக் குரிய தீட்சாவிதிகளைப் பூரணமாகப் பெற்றுப் பிற தெய்வத்தை நிந்தனை செய்யாமல் ஒழுகல் வேண்டும். சிவபெருமானையும் அடியார்களையும் வழிபட வேண்டு மென்பதற்கு உதாரணம்.

வேத வுள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையு மவனடி யாரையு நயந்து
பாத வர்ச்சனை புரிவதும் பணிவது மென்றே
காத லாலவை யிரண்டுமே செய்கருத் துடையார்.

—பெரிய புராணம்.

எனு மான்றோர் வாக்குப் பிரமாணமு மறிக.

தன்னுயிரைப்போல் மன்னுயிரைப் பார்க்கும் உத்தமருளத்தில் இறைவ னெழுந்தருளி நடம் புரிவர். அவ்வகைப் பட்ட பேரறிவாளர் திருவடிக்கு ஏவல் புரிந்திட என் சிந்தை மிகவும் விழைந்துளதெனப் பெரியோர்களும் கூறியுள்ளார்.

(இ - உ - ம்)

எவ்வுயிரும் பொதுவெனக்கண் டிரங்கியுப கரிக்கின்றூர் யாவ ரந்தச், செவ்வியர்தஞ் செயலனைத்துந் திருவருளின் செயலெனவே தெரிந்தே னிங்கே, கவ்வையிலாத் திருநெறி யத் திருவாளர் தமக்கேவல் களிப்பாற் செய்ய, ஒவ்விய தென் கருத்தவர்சீ ரோதிடவும் வாய்மிகவு மூறுமாலோ.

எத்துணையும் பேதமுறு தெவ்வுயிருந் தம்முயிர் போல் யெண்ணி யுள்ளே, ஒத்துரிமை யுடையவரா யுவக்கின்றூர் யாவரவ ருளந்தான் சுத்த, சித்துருவா மெம்பெருமான் நடம்புரியு மிடமெனநான் தெரிந்தே னந்த, வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடவென் சிந்தைமிக விழைந்த தாலோ.

—இராமலிங்க சுவாமிகள்.

ஆனதால் ஈசுவர வழிபாடும் அடியார் வழிபாடுஞ் செய்து திருவருளைப்பற்றி எல்லா வுயிர்களுக்கும் இதமே செய்தல் வேண்டும்; அப்படியன்றி அகிதஞ் செய்வானுகில் முத்தியடைவதில்லை யென்பது முக்காலுஞ் சத்தியமாகும். உலகத்தில் பத்தியினுல் யோகமும் யோகத்தால் ஞானமு மடையக்கூடும். இவைகளுக் கெல்லாம் ஆதாரமாயு முதற் காரணமாயு முள்ளது சீவகாருண்யமே யாகும். ஆனதால் அன்பர்கள் இந்நூலைக் கடைப்பிடித் தொழுகு வாராக.

(இ - உ - ம்.)

இத்திறனருள் கைப்பற்றி யுயிர்க்கெலா மிதத்தைச் செய்க
சத்திய மிரக்க மின்றேல் முத்தியைச் சாரா னுகும்
பத்தியால் யோகஞ் சாரும் யோகத்தால் பரம ஞானம்
சித்தியா மிதற்கா தாரஞ் சீவ காருண்ய மன்றே.

—சிவஞானவள்ளல்.

## சமயாசாரியர் துதி

காழியர் தங்கோனை கற்புணை யேதாங்கொண்
டாழி கடந்த வருந்தவனை - வாழிதிரு
நாவலூர் நம்மிறையை நல்வாத வூரனையும்
பாவனை செய்வோம் பணிந்து.

## திருப்பாசுரம்

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

ஜீவகாருண்ய விளக்க வினாவிடை
முற்றுப் பெற்றது.

---

சுபம்! சுபம்! சுபம்!

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 8 | சென்மத்திலும் | சன்மத்திலும் |
| 5 | 11 | மென்றும் | மென்னும் |
| 9 | 1 | மாநதரங் | மாந்தரங் |
| 12 | 4 | தோஷமு, | தோஷமு |
| 14 | 7 | வழியாக | வழியாகப் |
| 14 | 17 | ஞ்சன்மி | ங்கன்மி |
| 16 | 17 | தீங்கு | தீங்குங் |
| 23 | 19 | ஒருகாலு | ஒருக்காலு |
| 25 | 22 | அதற்கு | அவைகட்கு |
| 28 | 13 | ஜீவக்கொலை | ஜீவகொலை |
| 34 | 8 | என்றும் | என்று |
| 36 | 6 | விடும்படி | விடும்படிக் |
| 45 | 22 | சொன்னபடி | சொன்னபடிச் |
| 52 | 3 | அதிலிருந்த | அதிலிறந்த |
| 53 | 23 | இரத்தல் | இறத்தல் |
| 53 | 20 | மாகமம் | மாக்கம் |
| 84 | 14 | தின்றவனும | தின்றவனும் |
| 87 | 1 | வருந்தும்படி | வருந்தும்படிக் |
| 91 | 23 | சீககிரத்தில் | சீக்கிரத்தில் |
| 92 | 14 | நிலைமையும | நிலைமையும் |
| 117 | 12 | * செல்வந்தன் | செல்வவந்தன் |
| 119 | 15 | பலருமகள | பலரும்கள் |
| 120 | 26 | மேல் | மேற் |
| 122 | 5 | செரல் | சொல் |
| 122 | 24 | விளைத்து | விளைத்தது |
| 126 | 27 | கேறற | கேற்ற |
| 127 | 3 | சேர்பவன் | சேர்பவர் |
| 128 | 13 | விரய | வியய |
| 131 | 4 | யிருக்கப் | இருக்கப் |
| 131 | 21 | பத்தை | பத்தைத் |
| 139 | 22 | விஷையை | விஷை |
| 142 | 22 | அவன் | அவர் |

* இதுபோல் இன்னும் வருமிடங்களிலும் திருத்திக்கொள்க.

இந்த சீவகாருண்ய விளக்க விருவிடையில் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்ட நூல்கள்

---

1 அருட்பிரகாசம்
2 அறப்பளீசுர சதகம்
3 ஆத்திசூடி
4 இதிகாசம்
5 இன்னா நாற்பது
6 இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா
7 உடலறி விளக்கம்
8 ஒழிவிலொடுக்கம்
9 கந்தபுராணம்
10 கம்பராமாயணம்
11 காசிகாண்டம்
12 காஞ்சிப் புராணம்
13 குகைநமச்சிவாயர் பாடல்
14 குருநமச்சிவாயர் பாடல்
15 குசேலோபாக்யானம்
16 கூர்ம புராணம்
17 கைவல்யம்
18 கொலை மறுத்தல்
19 கொன்றை வேந்தன்
20 சசிவன்ன போதம்
21 சிவானந்த மாலை
22 சிவானந்த போதம்
23 சிவஞான தீபம்
24 சிவஞான சித்தியார்
25 சிவஞானவள்ளல் பாடல்
26 சிவபோக சாரம்
27 சிவதருமோத்தரம்
28 சிவப்பிரகாசர் பாடல்
29 சிவவாக்கியர் பாடல்
30 ஜீவக சிந்தாமணி
31 சைவசமயநெறி
32 சோமேசர் முதுமொழி
33 தனிப்பாடல்
34 தாயுமானவர் பாடல்
35 திரிகடுகம்
36 திருவாசகம்
37 திருமந்திரம்
38 திருக்குறள்
39 திருவிளையாடற் புராணம்
40 திருவம்மானை
41 நளவெண்பா
42 நல்வழி
43 நாலடியார்
44 நாலாயிரப் பிரபந்தம்
45 நான்மணிக்கடிகை
46 நீதிசாரம்
47 நீதிவெண்பா
48 நீதிநெறி விளக்கம்
49 நைடதம்
50 பக்த விஜயம்
51 பட்டினத்தார் பாடல்
52 வில்லி பாரதம்
53 பாகவதம்
54 பிரபுலிங்க லீலை
55 பிரமோத்தர காண்டம்
56 புலான் மறுத்தல்
57 பெருந்திரட்டு
58 பெரிய புராணம்
59 மெய்ம்மொழிச் சரிதை
60 வாக்குண்டாம்
61 விவேகசிந்தாமணி
62 விநாயகபுராணம்
63 வெற்றிவேற்கை

---